# உங்கள் பாக்யராஜின் கேள்வி பதில்கள்

## பாகம் - 5



சரண்யா பப்ளிகேஷன்ஸ்

8, 5வது குறுக்குத் தெரு, லேக் ஏரியா,
நுங்கம்பாக்கம், சென்னை–34.

விலை
ரூபாய் பதினைந்து மட்டும்

உங்கள் பாக்யராஜின் கேள்வி–பதில்கள் (பாகம் – 5)

ஆசிரியர் : கே. பாக்யராஜ்

முதற்பதிப்பு : அக்டோபர் 1999

உரிமை : ஆசிரியருக்கு

விலை : ரூ. 15/–

வெளியிடுவோர் : சரண்யா பப்ளிகேஷன்ஸ், சென்னை – 34

அச்சிட்டோர் : மதுரை மீனாட்சி பிரிண்டர்ஸ்,
ராயப்பேட்டை, சென்னை–14.

நம் உபநிஷத்தில்

தைத்ரியப் பறவையைப் பற்றி ஒரு விளக்கம் சொல்லப்பட்டிருக்கிறது. அது கரடுமுரடான உணவை இயற்கையிலிருந்து எடுத்து சாப்பிட்டுத் தன் வாய்க்குள் வைத்து மென்று பக்குவப்படுத்தி தன் குஞ்சுகள் எளிதில் சாப்பிடுகிற மாதிரியும் கொடுக்குமாம். இப்படி எத்தனையோ தைத்ரியப் பறவைகள் பக்குவப்படுத்திய செய்திகளைத்தான் இந்த குஞ்சு ஐந்தாம் பாகமாக உங்களோடு பகிர்ந்து உண்ணுகிறது.

முதல் நான்கு கேள்வி–பதில் பாகங்களுக்கும் பேராதரவு தந்த வாசக பெருமக்களுக்கு எனது மனமார்ந்த நன்றி!

*என்றும் அன்புடன்*
*உங்கள்*

*கே. பாக்யராஜ்*



சியாமளன், உடுமலைப்பேட்டை. ஜூலை 12 —18; 1991

**இசை தெய்வீகமானதா?**

பெர்னாட்ஷா பெரிய எழுத்தாளர். அதோட, ஒரு மாதிரியான ஆளும் கூட. அதாவது, எந்த நிகழ்ச்சிக்கு அவரை கூப்பிட்டாலும், ஏதாவது ஒரு பொடியோட கிண்டலடிச்சு அபிப்பிராயம் சொல்லுவாரு.



ஒரு தடவை லண்டன்ல பெரிய இசை மேதையான 'ஹெச்சி மெனுஹின்'னு ஒருத்தர், ஷாவை தன்னோட இசை நிகழ்ச்சிக்கு கூப்பிட்டிருந்தாரு. கச்சேரி முடிஞ்சதும் ஷா, கொஞ்நேரம் அமைதியா இருந்துட்டு, இசை மேதை கையைக் குலுக்கி, 'நாத்திகனைக் கூட கடவுள் நம்பிக்கை உள்ளவனா மாத்தற சக்தி இசைக்கு உண்டுன்னு புரிஞ்சுட்டேன்'னாரு.

இதையே நம்ம புராணம் நம்மளுக்கு மறைமுகமாக உணர்த்துது. நாரதர் கையில தம்பூரா, சரஸ்வதி கையில உள்ள வீணை, கிருஷ்ணர் கையில புல்லாங்குழல்... இப்படி பல விஷயம்!

வி.ஜி. பரமக்குடி, ஜூலை 12 —18; 1991

**வீட்டு வரவேற்பறையில் எழுதி வைக்க ஒரு உபயோகமான பொன்மொழி வேண்டும்.**

'பேசத் தகுந்த மனிதர் கிடைத்து, நீங்கள் பேசத் தவறினால், ஒரு தகுதியான மனிதரை இழந்து விட்டீர்கள். பேசத் தகுதியில்லாத மனிதரிடம் பேசிக் கொண்டிருந்தால், நீங்கள் உங்களையே இழந்து விட்டீர்கள்!'

கொஞ்சம் நீளமா இருந்தாலும், வரவேற்பறைக்கு வர்றவங்களுக்கும் சரி, உங்களுக்கும் சரி... உபயோகமாக இருக்கும்.

கே.ஜி.ராம்குமார், காட்பாடி. ஜூலை 12 —18; 1991

**காதல் என்பது எது வரை?**

கவிஞன் எதை காதலிக்கிறானோ, அதையெல்லாம் பாடுவான். ஒரு ஜெர்மானியக் கவிஞருக்கு தன்னோட மனைவி மேல காதல். தினம் நூறு வரில ஒரு கவிதை எழுதிடுவாரு. திடீர்னு ஒரு நாள் மனைவி இறந்துட்டாங்க. ஆனா அவர் தினசரி கவிதை எழுதறதை மட்டும் நிறுத்தலை. எழுதிட்டே இருந்தாரு. எழுதறதை தினம் மனைவி கல்லறையில கொண்டு போய் பாடிப் போட்ருவாரு. ஒருநாள், ஒரு

மாசம் இல்லை. கிட்டத்தட்ட 44 வருஷத்துக்கு இப்படி எழுதிட்டே இருந்த அவர் பேரு 'கார்ல் வில் ஹெல்ம்! நம்ம காதலிக்கிற ஆள் நமக்கு கிடைச்சாலும் சரி, கிடைக்கலைன்னாலும் சரி... கூட இருந்தாலும் சரி, இல்லேன்னாலும் சரி. நாம இருக்கற வரைக்கும் இருக்கறதுக்கு பேர்தான் காதல்!

கிறிஸ்டோபர் ஜோசப், திருச்சி. ஜூலை 12 –18, 1991

**'பழையன கழிதலும், புதியன புகுதலும்' — இதற்கும், 'புரட்சி' மாற்றத்துக்கும் என்ன வேறுபாடு?**

வியசாகி முடி கொட்டி, சொட்டையாவது 'பழையன கழிதல், புதியன புகுதல்!' இந்த தேர்தல்ல எங்க கட்சி ஆட்சிக்கு வரலைன்னா 'மொட்டை' அடிச்சுக்கறேன்னு பந்தயம் கட்டி, மொட்டை அடிக்கிறது புரட்சி!

கே. மொஹம்மது யூசுப், சென்னை. ஜூலை 12 –18, 1991

**'அவள் யாருக்கு சொந்தம்?' இது தலைப்பு. கதை எழுத முடியுமா?**



ஒரு திருமணம். சாந்தி முகூர்த்தம் சுபமா நடந்து முடிஞ்சது. மறுநாள் கணவன் வெளியூர் பயணம். ஒரு ஆத்துப் பாலத்துல ரயில் விபத்து. கணவன் ஆத்தோட போயி, பேச்சு மூச்சில்லாம ஒரு இடத்துல கரை ஒதுங்கறான். யாரோ எடுத்து காப்பாத்த, மூணு மாசம் கழிச்சுதான் சுய உணர்வு. விழுந்தடிச்சு சொந்த ஊருக்கு வர, வீட்டு வாசல்ல திருமணப் பந்தல்! உள்ளே நுழைய, மனைவிக்கு ஒருத்தர் தாலி கட்டி, அம்மி மிதிச்சு, அருந்ததி பார்த்துட்டிருக்காரு. பொண்ணோட அப்பா பதட்டத்தோட, "நீங்க இறந்துட்டதா ஆதாரபூர்வமா சில தடயங்கள் கிடைச்சது. என் பொண்ணு ஒருநாள் மட்டும்தான் உங்க கூட வாழ்ந்தது. அதோட அவ வாழ்க்கை முடியக் கூடாதுன்னு உங்க அப்பாவும், அம்மாவும்தான் கட்டாயப்படுத்தி, பொண்ணையும் சமாதானப்படுத்தி, உங்க தம்பிக்கே கல்யாணம் பண்ணி வச்சாங்க. இப்ப இப்படி ஆயிடுச்சே"ன்னு புலம்ப, இனி அவள் யாருக்குச் சொந்தம்னு முடிவை நீங்க எழுதுங்க!

ராதா சுவாமிநாதன், கும்பகோணம். ஜூலை 12 –18, 1991

**'குப்புற விழுந்தாலும் மீசையில மண் ஒட்டலை' — அது எப்படி சார்?**

'நம்மதான் நம்பர் ஒன்' — இந்த போட்டி ரஷ்யாவுக்கும், அமெரிக்காவும் எப்பவும் உண்டு.

ஒரு தடவை அமெரிக்க அதிபர் கென்னடி ரஷ்யாவுக்கு வந்தாரு. அப்ப குருச்சேவ் ரஷ்ய அதிபர். ரெண்டு பேரும் காலையில, விளையாட்டா கோல்ஃப் விளையாடினாங்க. ரஷ்ய அதிபர் தோத்துட்டாராம். ஆனா, ரஷ்யப் பத்திரிகைகள்,

"அமெரிக்க அதிபரும், ரஷ்ய அதிபரும் இன்று காலையில் கோல்ஃப் விளையாட, நமது ரஷ்ய அதிபர் இரண்டாவதாக வந்தார். அமெரிக்க அதிபர், கடைசி ஆளுக்கு முந்தியவராக (Last, but one) வந்தார்"ன்னு டெக்னிக்கா, மீசையில மண் ஒட்டாம செய்தி வெளியிட்டாங்களாம் — இது கதை.

கே. சந்திரசேகர், சென்னை. ஜூலை 12 —18; 1991

**'பாக்யா படிப்பது, பாட்டி வைத்தியம் பார்ப்பது போல்' என்று என் மாமா கிண்டலடிக்கிறார் தலைவா?**

உங்க மாமா கிண்டலடிக்கலை. ரொம்ப ரொம்ப உயர்வா சொல்லியிருக்காரு.

போர்க் களத்திலிருந்து தப்பிச்ச ஒரு வீரன், தள்ளாடியபடி ஒரு வீட்டு வாசலுக்கு வந்து மயங்கி விழ, வீட்ல இருந்த வயசான ஒரு பாட்டி பார்த்து, முகத்துல தண்ணி தெளிச்சு எழுப்பி, கைத்தாங்கலா உள்ள கூட்டிட்டுப் போனாங்க. வீரனோட பசி மயக்கத்தைப் புரிஞ்சுட்டு, சுடச்சுட சோறு பொங்கி, இலையில பரிமாறி, மேல குழம்பை விட்டாங்க. அகோர பசியில இருந்த வீரன், அவசரமா சாப்பாட்டை அள்ள, பதறிப் போய், 'ஆ'ன்னு கைய உதறினான். பாட்டி சிரிச்சுட்டே,

"என்னப்பா! எங்க சிவாஜி மகராஜா மாதிரியே நீயும் முட்டாள்தனம் பண்றயே?"ன்னு சொல்ல, வீரன் குழம்பி,




"சிவாஜி என்ன முட்டாள்தனம் பண்ணாரு?"ன்னான்.

"ஒரு பெரிய நாட்டைப் பிடிக்கணும்னா, முதல்ல சுத்தி வர உள்ள எல்லா சின்ன நாட்டையும் பிடிச்சு தன்னுடைய கட்டுப்பாட்டுல வச்சுட்டு, அப்புறம் பெரிய நாட்டோட போர் துவங்கணும். ஆனா, எங்க ராஜா நேரா பெரிய நாட்டோட போரை துவங்கி, ஜெயிக்கிற சக்தி இருந்தும் சுத்தி வர மத்த நாடுகள் ஒண்ணு சேர்ந்து பின்னாலிருந்து தாக்க, தடுமாறி

தவிச்சிட்டிருக்கிறதா கேள்வி. அதேமாதிரி நீயும் ஓரமா இருக்கற சாப்பாட்ல கைய வைக்காம, நடு சாதத்துல கைய விட்டு, சூட்ல தவிக்கிறியே!"ன்னாங்க.

வீரன், பாட்டி கால்ல விழுந்து ஆசிர்வாதம் வாங்கினான். ஏன்னா அவன்தான் சிவாஜி மகாராஜா!

அதனால உங்க மாமா, 'பாட்டி வைத்திய'த்தோட மகிமை தெரிஞ்சுதான் 'பாக்யா' படிக்கிறதை உயர்வா சொல்லியிருப்பாரு. சந்தோஷப்படுங்க!

எஸ். வெங்கேட், சென்னை. ஜூலை 19 — 25, 1991

**பணத்தை வாங்கிக் கொண்டு, அடுத்த கட்சிக்கு ஓட்டுப் போடும் மக்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

மகாபாரதத்துல, பீஷ்மர் — துரியோதனன் கூட்டத்துக்கும், தர்மர் கூட்டத்துக்கும் தாத்தா.



துரோணாச்சாரியாரும், கிருபாச்சாரியாரும் ரெண்டு பேருக்குமே குரு.

ஆனா, காலம் முழுவதும் இந்த மூவரும் துரியோதனன் கொடுத்த அரண்மனைகள்ல தங்கி, அவன் பராமரிப்புலதான் இருந்தாங்க.

தர்மர் இந்த மூவர்கிட்டேயும், ஆசி கேட்டப்போ, மூணு பேரும் சொன்ன ஒரே பதில், "நாங்க துரியோதனன் போட்ட சோற்றுக் கடனுக்காகத்தான் அவன் பக்கமிருந்து சண்டை போடுறோம். மத்தபடி எங்க ஆசி உனக்குத்தான்" இப்படி பெரியவங்களே ஒரு பக்கம் சோற்றுக்காக சண்டையும் போட்டு, எதிரிக்கு ஆசியும் வழங்கும் போது, சாதாரண மக்கள் கொஞ்சம் அப்படி, இப்படி இருக்கத்தான் செய்வாங்க.

ராஜகோபால், மதுரை. ஜூலை 19 — 25, 1991

**பொதுவாக கடைகளில் புடவைகளுக்கும், வளையல்களுக்கும் சினிமா பேரையே சொல்லி விற்கிறார்களே... இதை நான் லோ கிளாஸாக நினைக்கிறேன்.**

*1889*ல சென்னை உயர்நீதிமன்றம் கட்டி முடிச்சாங்களாம். அப்போ தரையில அழகழகா சிறு சிறு பூ வண்ண ஓவியங்களை தீட்டியிருக்காங்க. அந்தப் பூ வண்ண ஓவியங்கள் எல்லாருடைய மனசையும் கவர்ந்ததாம்.



உடனே நகை வியாபாரிகள், அந்தப் பூக்களின் டிசைனில் திருகாணி செய்த காதுத் தோடுகளை உருவாக்கி, 'ஹைகோர்ட் திருகாணி'ன்னு பேர் வச்சு வித்திருக்காங்க. பயங்கர கிராக்கியோட அவை விற்பனையாச்சாம்.

மக்களைக் கவரும் எதை வச்சும் விளம்பரப்படுத்தறது வியாபாரத் தந்திரம். இதுல லோ க்ளாஸ், ஹை க்ளாஸ் பிரச்னையே இல்லை.

அடைக்கலம், திருத்துறைப்பூண்டி. ஜூலை 19 – 25; 1991

**வேதனை வருவதுண்டா? வந்தால் வடிகால்?**

'துன்பங்களும், பிரச்னைகளும் நிரந்தரமானவை. அவை எப்பொழுதும் பாலத்தின் அடியில் ஓடுகிற தண்ணீரைப் போல் ஓடிவிடும். அதைப்பற்றி கவலைப்படாமல், உங்கள் வேலைகளை கவனியுங்கள்'ன்னு அன்னை சாரதாமணி சொன்னதை நினைச்சு ஆறுதல் அடைஞ்சுக்குவேன்.

ஷேக் முகம்மது, பாலக்காடு. ஜூலை 19 – 25; 1991

**ஏதாவது திருட்டுத்தனம் செய்து விட்டுப் போகிறவனை 'பூனை மாதிரி நழுவுகிறான் பார்' என்பது ஏன்?**

இந்திரன், 'அகலிகை புருஷன்' மாதிரி உருவெடுத்து உள்ளே நுழைஞ்சு அகலிகைய கெடுத்த கதை உங்களுக்கு தெரிஞ்சதுதான். இந்திரன் உள்ளே இருக்கற நேரத்துல அகலிகையோட உண்மையான புருஷனான கௌதம ரிஷி மறுபடியும் திரும்பி வர, அகலிகை அதிர்ச்சி அடையறா. அந்த நேரம் இந்திரன் 'பூனை' மாதிரி உருவெடுத்து, குடிசைக்குள்ளிருந்து மெல்ல வெளியே வந்து நழுவ, ரிஷி கண்டுபிடிச்சு சாபம் கொடுத்திர்றாரு.



இந்திரன் தப்பு பண்ணிட்டு தப்பிக்க பூனை மாதிரி உருவெடுத்ததுனாலதான், இன்னைக்கு யார் தப்பு பண்ணிட்டு நழுவப் பார்த்தாலும், 'பூனை மாதிரி நழுவறான்'னு சொல்றது வழக்கமாயிருக்குமோ?

கே.பி. சத்யபாஸ்கர், கொருக்காத்தூர். ஜூலை 19 — 25; 1991

**பணத்தால் சாதிக்க முடியாதது ஏதாவது இருக்கிறதா?**

10 ஆயிரம் பணம் குடுத்து ஒரு விலை உயர்ந்த நாயை வாங்கிட்டு வந்து வீட்ல கட்டி வச்சு, "உனக்காக நான் பத்தாயிரம் ரூபா செலவு பண்ணேன்"னு சொல்லுங்க. அது வாலாட்டிருமா? ரெண்டு தடவை, மூணு தடவை அதையே திருப்பிச் சொன்னா, 'உர்'ருன்னு கடிக்கத்தான் வரும். அதே நாயை, 'அன்பா' தடவிக் கொடுத்து, அஞ்சு பைசா பிஸ்கெட்டைப் போடுங்க. அடுத்த நிமிஷம் வாலாட்டும்!

ஒரு நாய் சமாச்சாரமே இப்படின்னா, பணத்தாலே முடியாதது இன்னும் எத்தனையோ இருக்குங்க!

எம்.ஜி.சேகர், புதுடில்லி. ஜூலை 19 — 25; 1991

**'பாரத ரத்னா' விருது பெற்ற சர்தார் வல்லபாய் பட்டேல் உண்மையிலேயே இரும்பு மனிதரா?**

இந்தியாவுல அங்கங்கே பிரிஞ்சு கிடந்த குட்டி குட்டி சமஸ்தானங்களையும் அடக்கி, ஒரே இந்தியாவா பண்ண மாவீரர். ஆனா அதுக்காக மட்டுமே அவர் இரும்பு மனிதர் அல்ல. அவர் வக்கீலா வேலை பார்க்கும் போது, ஒரு தடவை கோர்ட்டுல விவாதம் பண்ணிட்டிருந்தாரு. நடுவுல ஒரு தந்தி. பிரிச்சுப் படிச்சுட்டு தொடர்ந்து விவாதம் பண்ணாரு. கோர்ட் டைம் முடிஞ்சதும் "என் மனைவி இறந்ததா தந்தி



வந்திருக்கு. போய்ட்டு வர்றேன்'னுட்டு புறப்பட்டாராம். இப்படிப்பட்ட மனோதிடம், கடமை, பக்குவம் — இதுக்காகவும்தான் இரும்பு மனிதர் பட்டம்!

மு.ரா. பாலாஜி, சொர்ணாகுப்பம் கோலார் தங்கவயல். ஜூலை 19 — 25; 1991

**வாத்தியாரே! எங்களுக்கு பஞ்ச பாண்டவர் மாதிரி ஐந்து மகன்கள் இருந்தும் என் மனைவி, எங்கள் தலைமாட்டில் குந்திக்கினு அழ ஒரு பெண் குழந்தை வேண்டும் என்கிறாள். இதற்கு ஒரு வழி சொல்லவும்.**

அதுக்காக நீங்க ஏதாவது முயற்சிகள்ல இறங்கிடப் போறீங்க!

உங்க ஐந்து பையன்கள்ல மூத்தவருக்கு ஒரு கல்யாணத்தை பண்ணி வையுங்க. அவர் சுறுசுறுப்பா ஏற்பாடு பண்ணுவாரு.

பின்குறிப்பு: அப்பா மூத்த பிள்ளையே! உனக்கு கல்யாண வயசாயிருக்குங்குற உத்தேசத்துல சொல்றேன். ஒருவேளை சின்ன வயசாயிருந்தா, 'பாக்யராஜே சொல்லிட்டார்'னு கலாட்டா பண்ணிடாதே!

ஈஸ்வரமூர்த்தி, கபிஸ்தலம். ஜூலை 19 – 25, 1991

**பேச்சிலே அசத்துவது என்றால் எப்படி?**

சுவாமி ராமதீர்த்தர் அமெரிக்காவுக்கு கப்பல் பயணமா போனப்ப, அவர்கூட பயணம் செய்த அமெரிக்க சீமானான ஒரு சக பிரயாணி, "ஐயா! உங்கள் மூட்டை, முடிச்சுகளை (லக்கேஜ்) காணோமே?"ன்னு விசாரிச்சாரு.

"உடம்பைத் தவிர மூட்டை, முடிச்சு ஏது?"ன்னாரு தீர்த்தர்.

"அப்படியானால் பணத்தை எங்கே வைத்துக் கொள்வீர்கள்?"



"பணத்தை வைத்துக் கொள்ளும் பழக்கம் இல்லை!"

"பின் எப்படி காலம் தள்ள முடியும்?"

"அனைவருடைய அன்பிலும் நான் காலம் தள்ளுகிறேன்"

"அமெரிக்காவில் தங்களுக்கு அன்பர்கள், நண்பர்கள் யாராவது இருக்கிறார்களா?"

"ஒரே ஒருவரைத்தான் எனக்குத் தெரியும். அது நீங்கள்தான்"னு அவர் தோள்ல சுவாமி ராமதீர்த்தர் கை வைக்க, அந்த அமெரிக்க சீமான் அப்படியே அசந்து, அந்த நிமிஷமே தீர்த்தரின் சீடராயிட்டாரு.

சி.பி. குயில் குமார், காரைக்குடி–2. ஜூலை 19 – 25, 1991

**வயதான மனிதன் கடைசியில் நினைப்பது என்ன?**

"பெரியவர்கள், தங்கள் நாக்கினால் பேசுவதில்லை. அவர்களுடைய வாழ்க்கையின் மூலமாகவே பேசுகிறார்கள்"னு மகாத்மா காந்தி சொல்லியிருக்காரு. அதனால நம்ம அப்படி ஏதாவது வாழ்க்கை மூலமா பேசியிருக்கமான்னு ரீ கலெக்ட் பண்ணிட்டிருப்பாங்க!

எம். ராஜேந்திரன், லால்குடி. ஜூலை 19 – 25, 1991

**தங்கள் முன்னால் ஒருவர் பொய் சொல்வதைப் பார்த்தால், என்ன செய்வீர்கள்?**

என் முதுகைப் பார்த்துட்டு ஓடி வருவேன்.

கார்த்திகேயன், சூலூர். ஜூலை 19 – 25, 1991

**'முதல் இரவு' போன்ற அந்தரங்கமான விஷயங்கள் பற்றி ஆண்கள் வெட்கப்படாமல் நண்பர்களிடம் கூறி சிரித்து மகிழ்கிறார்கள். பெண்களும் அப்படிச் செய்வதுண்டா?**

அது நமக்கு சரியாத் தெரியலை. ஆனா, சந்தர்ப்ப சூழ்நிலை காரணமா சீதை தன்னோட அந்தரங்கத்தை அடுத்த ஆம்பளைகிட்டயே சொல்லியிருக்காங்க!

அதாவது சீதையை இலங்கையில கண்டுபிடிச்ச அனுமான், புறப்படறப்ப, "அம்மா! நான் உங்களைத்தான் சந்தித்தேன்னு ராமபிரான் நம்புவதற்காக ஏதாவது அடையாளம் இருந்தால் சொல்லுங்கள்"ன்னு கேட்டாரு.

தன்னை துன்புறுத்திய காகாசுரனை ராமர் வெறும் புல்லை அம்பாக எய்து, விரட்டியடித்த சம்பவத்தை சீதை சொன்னாங்க.

"அம்மா! ராமர் விட்ட புல்லுக்கு பயந்து காகாசுரன் மூணு லோகமும் சுத்தி ஓடியதைப் பல பேர் பார்த்திருப்பாங்க. எல்லாருக்கும் தெரிந்த இந்த சமாச்சாரத்தை எப்படி அடையாளமாக சொல்வது? வேறு ஏதாவது?"ன்னு கேட்டார் அனுமான்.

சீதை இரண்டாவது அடையாளமா தன் ஆபரணமான சூடாமணியை கொடுத்தாங்க.



"அம்மா! ராவணன் உங்களை தூக்கிட்டு வரும்போது நீங்க வழி வழியா உங்க நகைகளை வீசி எறிஞ்சிருக்கீங்க. அதை பல குரங்குகள் பார்த்திருக்கின்றன. அதில் ஒரு குரங்கு எடுத்து வைத்திருந்த நகைன்னு ராமர் நினைக்கலாம். அதனால இன்னும் ஏதாவது... அதாவது அந்தரங்கமா?"

சீதை யோசிச்சு, வேற வழியில்லாம ஒரு தனிப்பட்ட அந்தரங்க விவகாரத்தை சொன்னாங்க.

காட்டுல சுத்தற காலத்தில் ஒருநாள் ராமரும், சீதையும் உல்லாசமா விளையாடிட்டிருந்தாங்களாம். அந்த அந்தரங்க விளையாட்டுல சீதையோட தலைமுடி அவிழ்ந்து, பொட்டும் கலைஞ்சிருச்சாம்.

"ஐயோ! முடியெல்லாம் கலைஞ்சிருச்சு. இப்படி வெளியே போனா,

மச்சினர் லட்சுமணன் பார்த்து விடுவார். எனக்கு வெட்கமாக இருக்கிறது"ன்னு சீதை சொல்ல, உடனே ராமர் தன் கையினால், அவிழ்ந்த அவருடைய முடியைக் கோதி சீர் செய்து ஒரு பொட்டும் வைச்சு அனுப்பினாராம். இதை சீதை வெட்கத்தோட சொல்ல,

"இது போதும் தாயே! இந்த அந்தரங்க விஷயத்தைச் சொன்னால், ராமர் புரிஞ்சுப்பார்"ன்னு சந்தோஷமா புறப்பட்டாராம் அனுமார்.

ஜே. ரவீந்தர், சேலம். ஜூலை 26 – ஆகஸ்டு 1; 1991

**எது நாகரீகம்? எது அநாகரீகம்?**

ஒரு கணவன் மனைவி.

ஏதோ காரணத்தால ரெண்டு பேருக்குள்ளயும் விரிசல் வந்துருச்சு. கணவன் விவாகரத்து வாங்க கோர்ட்டுக்குப் போக, வழியில வந்த ஒருத்தன், "உன் சம்சாரம் என்ன தப்பு பண்ணா?"ன்னு கேட்டான்.

கணவன், "இன்னும் டைவர்ஸ் வாங்கலை. அதனால இப்ப என் மனைவியைப் பத்தி எதுவும் சொல்ல விரும்பலை"ன்னு போயிட்டான்.

டைவர்ஸ் வாங்கிட்டு கோர்ட்லருந்து வரும்போது அதே ஆள், "டைவர்ஸ்தான் வாங்கிட்டியே, இப்ப சொல்லு. உன் சம்சாரம் என்ன தப்பு பண்ணினா?"ன்னான்.

அதுக்கு கணவன், "டைவர்ஸ் வாங்கிட்டதால, இப்ப அவ என் மனைவி இல்லை. அதனால மனைவி இல்லாத ஒருத்தியைப் பத்தி நான் பேசறது தப்பு"ன்னுட்டு போயிட்டான்.

அடுத்தவன் சம்சாரத்தைப் பத்தி ஒருத்தன் அநாகரீகமா கேள்வி கேட்டுதும், கடைசி வரைக்கும் கணவன் நாகரீகமா நடந்துட்டாங்கறது ஒரு நல்ல பண்புள்ள இஸ்லாமியக் கதை.

முகமது தஸ்தகீர், சென்னை. ஜூலை 26 – ஆகஸ்டு 1; 1991

**வாழ்க்கையில் அவ்வப்போது ஏதோ ஒரு அதிருப்தி – எப்படி சமாதானம் அடைவது?**

"போர்க்களத்தில் இருக்கும்போது, மனம் அமைதியான வாழ்க்கையை விரும்பும். வீட்டில் அமைதியாக இருக்கும்போது, அதே மனம் இன்னும் சுகமான வாழ்க்கைக்கு ஏங்கும்"



சமீபத்துல இப்படி ஒரு வாக்கியத்தை படிச்சேன். அதனால

அதிருப்திபட்றது நம்ம மனப் பிரமைதான். அக்கம் பக்கம் பாருங்க. நம்மளை விட கஷ்டத்துல இருக்கற எத்தனையோ பேர் உண்டு. அதை நினைச்சா, தானா சமாதானம் கிடைக்கும்.

வி. ராஜசேகர், திருச்சி—2. ஜூலை 26 — ஆகஸ்டு 1; 1991

**நுணலும் தன் வாயால் கெடும் — மனிதனும் தன் வாயால் கெடுவான். சரியா?**



ரொம்ப சரிதாங்க.

இங்கிலாந்து பிரதமர் சர்ச்சில் ஒரு கூட்டத்துல பேசிட்டிருந்தப்போ, ஒரு அம்மா குறுக்கிட்டு, ரொம்ப குத்தலா, "நான் மட்டும் உங்க மனைவியா இருந்திருந்தா, உங்களுக்கு காபியில விஷத்தை கலந்து குடுத்திருப்பேன்"னாங்க. சர்ச்சில் என்ன சொல்லப் போறாரோன்னு திகிலோட பார்க்க, சர்ச்சில் அழகான புன்முறுவலோட,

"அம்மாடி! நீங்க மட்டும் என் மனைவியா இருந்திருந்தா, நான் சத்தமில்லாம காபியைக் குடிச்சுட்டு, நிம்மதியா போயிருப்பேன்"னாரு!

அந்தம்மா முகத்துல ஈயாடலை. ஏண்டா இந்த மனுஷன்கிட்ட வாயைக் குடுத்தம்னு என் முழி முழிச்சாங்க.

என் மதுசூதனன், ஊட்டி. ஜூலை 26 — ஆகஸ்டு 1; 1991

**நம்முடைய குற்றங் குறைகளை வெளிப்படையாக பேசுவதால் சமுதாயத்தில் நமது மதிப்பு குறையாதா?**

"நேரு போன்றவர்கள் ஜனநாயகத்தில் ஆபத்தானவர்கள். ஒரு சிறு திருப்பமும் இவரை சர்வாதிகாரி ஆக்கிவிடலாம். ஒரு சர்வாதிகாரிக்கு வேண்டிய புகழ், மன உறுதி, செயல்திறன், கர்வம் எல்லாமே அவரிடம் இருக்கின்றன. இவரது முன்கோபம் எல்லோருக்கும் தெரிந்தது. இவருடைய தற்பெருமை ஏற்கனவே பயங்கரமானது. அதை அடக்க வேண்டும்!"

நேருஜியைப் பத்தி இவ்வளவு கடுமையா விமர்சிச்சது யார் தெரியுங்களா? அவருடைய எதிரியோ, அவரைப் பிடிக்காத பத்திரிகைகாரங்களோ இல்லை. அவரேதான்! இப்படி தன்னைத்தானே விமர்சிக்கிற துணிவும், நேர்மையும் பக்குவமும் இருந்த நேருஜிக்கு மதிப்பு குறைஞ்சிருச்சா என்ன?

சிவதாஸ், மதுரை. ஜூலை 26 — ஆகஸ்டு 1; 1991

**என் மகன் என்னைப் போல் கௌரவமான ஆசிரியர் ஆக வேண்டும் என்பது என் விருப்பம். ஆனால், அவன் அது ஒன்றைத் தவிர வேறு எது வேண்டுமானாலும் செய்கிறேன் என்கிறான். எப்படிப் புரிய வைப்பது என்றே புரியவில்லை.**

நீங்க ஆசிரியரா இருக்கறதால, நம்ம மகாத்மா காந்தி வாழ்க்கை உங்களுக்கு தெரிஞ்சிருக்கும்.

காந்திஜி சதா 'ராம், ராம்'னு சொல்ற காலத்துல அவர் புள்ளை இஸ்லாம் மதத்துல சேர்ந்துட்டாரு! அந்த நேரத்துல ஏற்கனவே காந்திஜி மறைமுகமா முஸ்லிம்களுக்கு ஆதரவா செயல்பட்றதா ஒரு குற்றச்சாட்டு வேற புகைஞ்சிட்டு இருந்தது. 'மகனை எப்படி சேர விடலாம்?'னு சிலர் கலாட்டாவே பண்ண ஆரம்பிச்சுட்டாங்க. நல்லவேளை, சர்தார் வல்லபாய் பட்டேல் குறுக்கிட்டு, "இது ஒரு அற்ப பிரச்னை. காந்திஜி புள்ளை ஒருத்தன் இஸ்லாம்ல சேர்றதால இந்து மதத்துக்கு நஷ்டமும் இல்லை. இஸ்லாம் மதத்துக்கு லாபமும் இல்லை"ன்னு முற்றுப்புள்ளி வெச்சாரு.

அதனால, அந்தக் காலத்திலிருந்தே அப்பாவுக்கும், புள்ளைக்கும் கருத்து வேறுபாடு வர்றது சகஜம். அதுலயும் உங்க புள்ளை, வேற வேலைக்கு படிக்கறேங்கறது ஒரு பிரச்னையே இல்லை.

என் நண்பர் ஒருத்தர் வாத்யார்தான். பையன் பேங்க் உத்யோகம் பார்க்கணும்னு படிக்க வெச்சாரு. படிச்சு முடிச்சவன், 'நான் சினிமா டைரக்டர் ஆகணும்'ன்னு சொன்னதும், பெருந்தன்மையா அவன் போக்குல போகட்டும்னு சந்தர்ப்பம் கொடுத்திருக்காரு. அந்த மாதிரி நீங்களும் விட்டுப் புடிங்களேன்.

கமலா தியாகராஜன், தஞ்சை. ஜூலை 26 – ஆகஸ்டு 1; 1991

**மேல்நாடுகளில் இருக்கும் 'தனி மனித சுதந்திரம்' நம் நாட்டிலும் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!**

நம்ம நாட்ல இல்லைன்னு யாருங்க சொன்னது? இருக்கு. ஆனா, அவங்க அளவு நாம பயன்படுத்தறதில்லை. அதுதான் உண்மை.



உதாரணத்துக்கு பாரீஸ் நாட்ல 1927ல நடந்த ஒரு சம்பவம்.

'அகஸ்டி கில்பர்ட்'ன்னு ஒரு வக்கீல். ரயில் நிலையத்துல சாமான்களை பாதுகாப்பா வெச்சிருக்கிற அறைக்குப் போய்,

அங்கிருந்த ஊழியர்கிட்ட ஒரு பல் குச்சிய பத்திரமா வெச்சிருக்கச் சொன்னாரு. ஊழியர் மறுத்துட்டாரு. உடனே வக்கில், "என் பல் குச்சி உனக்கு அவ்வளவு இளக்காரமா போச்சா?"ன்னு கோர்ட்டுல கேஸ் போட்டாரு. 20 வருஷம் கேஸ் நடந்து கடைசியில வக்கிலுக்கு நஷ்ட ஈடா ரயில் நிலையம், 2 லட்சம் கொடுக்க வேண்டி தீர்ப்பாயிருச்சு.

இப்படியெல்லாம் சுதந்திரத்தை நீங்களும் பயன்படுத்தப்போறீங்களா என்ன?

கே. பாலமுருகன், சித்தாத்தூா். ஜூலை 26 – ஆகஸ்டு 1; 1991

**மூட் அவுட், டென்ஷன் – வித்தியாசம் என்ன தலைவா?**

ஒரு இங்கிலீஷ் படம் போறீங்க. கொஞ்சம் பலான சீன்கள் அதிகமா இருக்கு. டென்ஷனோட வீட்டுக்கு வர்றீங்க. வீட்ல, "மூணு நாள் லீவு மாமா"ன்னு மனைவி சொன்னதும் நீங்க.. ஹலோ... என்னாச்சுங்க... ஹலோ!



அ. அன்பு. சங்ககிரி. ஜூலை 26 – ஆகஸ்டு 1; 1991

**தாயின் மடியில், தாரத்தின் மடியில் இவற்றில் யார் மடியில் சுகம் அதிகமாக கிடைக்கும்?**

முன்னதில் உறக்கம்...
பின்னதில் கிறக்கம்!

செல்வன். ஈரோடு. ஜூலை 26 – ஆகஸ்டு 1; 1991

**பழைய நடிகைகளில் உங்களுக்கு சரோஜா தேவியை பிடிக்குமா? இல்லை அஞ்சலிதேவியை பிடிக்குமா?**

ரெண்டு பேரையுமே பிடிக்கும். ஆனா, இவங்களுக்கும் முன்னால துர்கா தேவின்னு ஒருத்தர் இருந்தாங்க. அவங்களைத்தான் என்னால மறக்கவே முடியலை.

அப்ப சுதந்திரப் போராட்ட காலம். அடக்குமுறையின் சின்னமா இருந்த 'சாண்டர்ஸ்'ங்கற வெள்ளைக்கார அதிகாரிய நம்ம பகவத் சிங்கும், இன்னும் ரெண்டு நண்பர்களும் சேர்ந்து கொன்னுட்டாங்க. எப்படியாவது அவங்களை பிடிச்சிரணும்னு வெள்ளைக்கார சர்க்கார் வலை போட்டு அலச ஆரம்பிச்சாங்க.

நம்ம நாட்டு சுதந்திரப் போராட்ட தியாகிகள், மத்த ரெண்டு பேரையும் ஈஸியா மறைச்சுட்டாங்க. பகவத் சிங்கை ஈஸியா மறைக்க முடியலை. எப்படியாவது அவரை பஞ்சாப்லருந்து கல்கத்தாவுக்கு

அனுப்பிட்டா, அதுக்கப்புறம் பாதுகாப்பான இடம் கிடைச்சிரும்னு முடிவு பண்ணாங்க. அதனால அவரை எப்படி கல்கத்தாவுக்கு அனுப்பறதுன்னு யோசிச்சாங்க.

பகவத் சிங் கல்யாணம் ஆகாதவரு. அதனால யாராவது ஒரு பெண் கூட கணவன் — மனைவி மாதிரி செட்டப் பண்ணினா, போலீசுக்கு சந்தேகம் வராதுன்னு முடிவு பண்ணாங்க. அவர் உயரத்துக்கு, ஒரு சுதந்திரப் போராட்ட வீரரோட மனைவி சரியா இருந்தாங்க. ஆனா, குடும்பத்துல ஒரே எதிர்ப்பு! ஒருவேளை வழியில யாராவது பார்த்தாலோ, இல்லை பிடிபட்டாலோ, பகவத்சிங்குக்கும் இந்தப் பெண்ணுக்கும் தொடர்புன்னு ஊர் உலகம் அசிங்கமா பேசி, அதோட அவ வாழ்க்கையே முடிஞ்சிரும். தற்கொலைதான் பண்ணிக்கணும். வேண்டாம்னு தடைபோட்டாங்க. ஆனா, 'துர்கா தேவி'ங்கற அந்தப் பெண், எல்லாரையும் மீறி, "பகவத் சிங்கை காப்பாற்ற, என் கற்புக்கு களங்கம் வந்தாலும் சரி"ன்னு பகவத் சிங்கின் மனைவியா நடிச்சு, கல்கத்தா புறப்பட்டாங்க.



அஞ்சலி தேவி, சரோஜா தேவி நடிப்பு நல்லா இருந்தாலும், ஒரே ஒரு தடவை அடுத்தவன் மனைவியா நடிச்ச துர்கா தேவியோட பெருந்தன்மையான, தேசப்பற்றுள்ள, துணிச்சலான மனசுதாங்க இன்னைக்கும் என் மனசுல நிக்குது!

எம். சக்திவேல், மதுரை—16. ஆகஸ்டு 2 — 8; 1991.

**நகைச்சுவை என்பது மகிழ்ச்சியான சூழலில் மட்டும்தானே வரும்?**

**யா**ர் சொன்னது? கோபத்துல கூட வருங்க. ரயில்ல பிரயாணம் செய்த இரண்டு பெண்கள் பயங்கரமா சண்டை போட்டாங்க.

பிரச்னை, ஜன்னலை மூட்றதா, திறந்து வெக்கறதான்னுதான்

"ஜன்னல் கதவைத் திறந்து வெச்சா, எனக்கு ஜுரம் வரும். நான் செத்துப் போயிடுவேன்"னு ஒருத்தர் வாதம்.

"ஜன்னல் கதவை மூடி வெச்சா, நான் மூச்சுத் திணறி செத்துப் போயிடுவேன்"னு இன்னொருத்தர் வாதம்.

நேரம் ஆக, ஆக சண்டை தீரலை. தீர்க்க முயன்ற கார்டும் என்ன சொல்றதுன்னு புரியாம விழிச்சாரு.

அப்ப இந்தப் பெண்கள் சண்டையால எரிச்சலடைஞ்ச ஒரு சக

பிரயாணி, கார்டைப் பார்த்து, "சார், முதல்ல ஜன்னலைத் திறந்து வையுங்க. ஒரு அம்மா போகட்டும். அப்புறம் ஜன்னலை மூடுங்க. அடுத்த அம்மாளும் போகட்டும். அப்புறம் நாங்க நிம்மதியா பயணம் செய்றோம்"னாரு. கம்பார்ட்மெண்ட் பூராவும் சிரிக்க, ரெண்டு பெண்களும் கப்சிப் ஆயிட்டாங்க.

ஏ. ஹக்கீம், திருப்பூர். ஆகஸ்டு 2 – 8; 1991.

**நம்மை அறியாமலேயே நாம் தவறு செய்வது என்றால் எப்படி சார்?**



1947க்கு முன்னால் இங்கிலாந்துக்காரங்க, நம்ம இந்திய சொத்தையெல்லாம் கொள்ளையடிச்சு கொண்டு போறாங்கன்னு கொதிச்செழுந்து, போராட்டம் நடத்தி, விடுதலை வாங்கினோம். அப்புறம் நாமே நம்ம ஊர்ல இருக்கற தங்கத்தை எல்லாம் டன்டன்னாக விமானத்துல ஏத்தி, இங்கிலாந்துக்கு அனுப்பிட்டு, 'ஏதாவது காசு கொடுங்க'ன்னு கையேந்தி நிக்கறோமே, இது நீங்களும் நானும் அறிஞ்சு செஞ்ச தப்பா என்ன?

எம். கண்ணாயிரம், பழனி. ஆகஸ்டு 2 – 8; 1991.

**அழகான இளம் பெண்களை எதற்கு ஒப்பிடுவது சரியாகப் பொருந்தும்? மலர்கொடி – நிலவு – மயில் – குயில் – மைனா?**

நீங்க சொல்ற மாதிரி எல்லாரும் ஒவ்வொரு மாதிரி ஒப்பிடுவாங்க. ஆனா, அலெக்ஸாண்டரோட தளபதி புது மாதிரியா ஒப்பிட்டாரு.

அதாவது, தளபதி அரண்மனையில ஒரு முக்கியமான வேலையா இருந்தப்ப, அவரோட மகனுக்கு ஜுரம்னு தகவல் வர, அலெக்ஸாண்டரே தளபதிய உடனே வீட்டுக்குப் போய் மகனைப் பார்த்துட்டு வரச் சொன்னாரு.

அப்பா தளபதி வீட்டுக்குள்ள நுழைய, மகன் ரூம்லருந்து ஒரு அழகான இளம் பெண் வெளியே புறப்பட்டு போனாப்பல — கிறக்கத்துல இருந்த பையன் [illegible]ன்னு அப்பா ரூமுக்குள்ள நுழைஞ்சதும் [illegible]யிட்டான்.

[illegible] ஜுரம்னு சொன்னாங்களே?"ன்னு அப்பா கேட்டதும்,

[illegible] ஜுரம் கொஞ்சம் முன்னால இருந்தது வாஸ்தவந்தான். ஆனா, [illegible] போயிருச்சு"ன்னு உளற அப்பா அமைதியா,

"ஆமாம். ஜுரம் உன் ரூம்லருந்து புறப்பட்டுப் போனதை நான் கூட பார்த்தேன்"னாரு!

ஆக, அழகான இளம் பெண் கூட அவங்கவங்க மனோநிலையைப் பொறுத்து, வேற மாதிரி தெரியறதுண்டுங்க.



நாகூர் கனி, மயிலாப்பூர். ஆகஸ்டு 2 — 8: 1991.

**ரிஸ்க் இல்லாத காதல் எது?**

முறையா முதலிரவுக்கு வர பொண்ணுகிட்ட, ஸ்டார்ட் பண்ணுங்க. எந்த ரிஸ்க்கும் இருக்காது.

சி.எஸ். ஊர் ரமாவாணன், செங்குட்டைபாளையம். ஆகஸ்டு 2 — 8: 1991.

**விரக்தி தோன்றி, வெறுமை தட்டும்போது, மனிதன் என்ன செய்ய வேண்டும்?**

நம்ம இந்து மத வேதம் ஒரு தத்துவம் சொல்லுது. அதை கெட்டியா மனசுல பதிய வையுங்க. விரக்தியும், வெறுமையும் விலகிப் போகும்.

"தோட்டத்தில் உள்ள மலர்களை எண்ணுங்கள். பழுத்து விழுந்து விழும் சருகுகளைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டாம். வானத்தில்உள்ள நட்சத்திரங்களை பார்த்து மகிழுங்கள். இருளைப் பற்றி கவலையே வேண்டாம்"

ஏ. சோமசுந்தரம், ஒத்தக்குதிரை. ஆகஸ்டு 2 — 8: 1991.

**ஒரு மனிதனுக்கு எது முக்கியத் தேவை? அறிவா, அழகா, பணமா, குணமா?**

"அன்பு அறிவில் இருந்தால், சத்தியம் பிறக்கும். அன்பு மனதில் இருந்தால், கருணை பிறக்கும். அன்பு உணர்வில் இருந்தால், காதல் பிறக்கும். அன்பு செயலில் இருந்தால், அஹிம்சை பிறக்கும். அன்பு கல்வியில் இருந்தால், தர்மம் பிறக்கும்"

இப்படி பெரியவங்க சொன்னதால, என் தேவை அன்புதான்.

ஏ. செந்தில்நாதன், திருச்செந்தூர். ஆகஸ்டு 2 — 8: 1991.

**என்னைவிட ஒரு அடி உயரம் குறைவான பெண்ணை நிச்சயம் செய்து விட்டார்கள். ஏதாவது இடைஞ்சல் வருமா?**

சினிமா வளர்றதுக்கு முன்னால, ஸ்பெஷல் நாடகங்கள் பெரிய வரவேற்பைப் பெற்றிருந்த காலம்.

ஆலப்புழையில் 'மனோகரா' நாடகம் நடந்தது. அந்தக் காலத்துல, புகழ்பெற்ற ராஜபார்ட் நடிகரான வேலு நாயர் ராஜபார்ட் — அதாவது மனோகரனாக நடிச்சாரு. அவருக்கு ஜோடியாக அந்தக் காலத்தில் புகழ் பெற்ற ஸ்த்ரீபார்ட்டாக இருந்த எஸ்.டி. சுப்புலட்சுமியை நடிக்க வெச்சாங்களாம். அவங்க ரெண்டு பேரும் அப்பத்தான் முதல் முறையா ஜோடி சேர்க்கப்பட்டிருந்தாங்க.



நாடகம் ஆரம்பிச்ச பின்னால, ஒரு சிக்கல் ஏற்பட்டது. வேலுநாயர் ஆறடி உயரம் உள்ளவர். அதற்கு மேல் ஒரு அடி கிரீடம் வேறே! எஸ்.டி. சுப்புலட்சுமி அவ்வளவு உயரம் இல்லை. ஐந்தடிக்குள்ளதான்! போரில் வெற்றி பெற்று வந்த மனோகரனுக்கு (வேலு நாயருக்கு) காதலியான எஸ்.டி. சுப்புலட்சுமி, மாலை அணிவிச்சு வரவேற்கணும். வேலு நாயர் வணங்காமுடியாக, மனோகரனாக வந்து நிமிர்ந்து நின்னார். மாலையோட நின்ன சுப்புலட்சுமியால, மாலை போட முடியலை. நாயரோ வளைந்து கொடுப்பதாக தெரியலை. வேற வழியில்லாம எஸ்.டி.எஸ்., தன் சொந்த வசனமா, "தயவு செய்து தலை குனிந்து மாலை ஏற்றுக் கொள்ளுங்கள்"ன்னு வெளிப்படையாவே சொல்ல, உடனே வேலு நாயர், "மாபெரும் வீரர்களுக்கு முன் தலை வணங்காத இந்த மனோகரன், உன் முன் தலை வணங்குவதா? முடியாது"ன்னு எதிர் வசனம் பேசிட்டு, அரங்கத்துல உட்புறம் கிடந்த ஒரு நாற்காலி மீது ஏறி நின்று மாலையிடு"ன்னாரு. சுப்புலட்சுமியும் அப்படியே செஞ்சாங்களாம். சபை ஆரவாரத்துல குலுங்கியதாம்.

அதனால, நீங்க முத்தம் கித்தம் கொடுக்க நெனைச்சா, முடிஞ்சா குனிஞ்சு போங்க. இல்ல, மனைவிக்கு ஸ்டூல் போட்டுருங்க. வேற ஒரு இடைஞ்சலும் இல்லை!

எம்.எஸ். குமார், ராமேஸ்வரம். ஆகஸ்டு 2 – 8, 1991.

**'அவர் ஒரு வித்தியாசமான ஆளு' என்கிறார்களே, வித்தியாசம் என்பதை எப்படி தெரிந்து கொள்வது?**

உதாரணத்துக்கு, மதுரையிலிருந்து ஒருத்தர் வர்றாருன்னு வையுங்க. அவர்கிட்ட, "உங்க மதுரையில என்ன விசேஷம்?"ன்னு கேக்கறீங்க.

"எங்க ஊர் மீனாட்சியம்மன் பிரசித்தி பெற்றதாச்சே!"ம்பாரு.

இன்னொருத்தர் வர்றாரு.

"எங்க ஊர்ல அழகர் திருவிழா அற்புதமானது"ம்பாரு.

மூணாவது ஒருத்தர்,

"சங்கத் தமிழ் உருவானதே எங்க ஊர் லதா?"ம்பாரு.

திடீர்னு ஒருத்தர்,

"காந்திஜி முதல் முதலா கோட், பேண்ட், சட்டை இதெல்லாம் கழட்டிட்டு இடுப்பு வேட்டிக்கு மாறினதே, எங்க ஊர்லதாங்க. ஏன்னா, எங்க மதுரைக்கு வந்து, ஏழை ஜனங்க இப்படி இருக்கறதைப் பார்த்துத்தான் 'நானும் இவங்கள்ல ஒருத்தன். இவங்க எல்லாருக்கும் முழுசா துணி கிடைக்கிற வரைக்கும் நானும் இப்படித்தான் இருப்பேன்'னு முடிவு பண்ணாரு. இதை எங்க ஊர் ரயிலடியில் கூட பெருமையா எழுதி வெச்சிருக்கோம்"ன்னு சொன்னா, அவர் ஒரு வித்தியாசமான ஆள்ன்னு நினைக்க மாட்டீங்களா?

எஸ். பார்த்திபன், புதுக்கோட்டை. ஆகஸ்டு 2 — 8, 1991.

காவேரி நீருக்காக தமிழ்நாட்டில் 'பந்த்' நடந்ததே.... அதனால் ஒரு



**நாளைய தேசிய வருமானம் இழப்பு ஆனது. தேவையா?**

*1773*ம் ஆண்டு டிசம்பர் 16ம் தேதி நடந்த ஒரு சம்பவம். அப்ப அமெரிக்கா இங்கிலாந்து அரசுக்கு அடிமையா இருந்தது. அப்போ இங்கிலாந்தோட பிடியிலிருந்து விடுதலை பெற அமெரிக்கா பல போராட்டங்களை நடத்திச்சு. போராட்டத்தோட ஒரு அம்சமா, "அன்னியப் பொருட்களை — அதாவது இங்கிலாந்து பொருட்களை அமெரிக்காவுக்குள் விற்பனைக்காக வர விட மாட்டோம்'ன்னு ஒரு திட்டத்தை அமெரிக்கர்கள் செயல்படுத்தினாங்க. இந்த நேரத்துல அமெரிக்க மக்கள் மத்தியில தேயிலைக்கு பெரும் தட்டுப்பாடு வந்தது. இதைத் தெரிஞ்சுட்ட 'ஆங்கிலேய அரசின் வணிகக் குழு' ஒரு கப்பல் நிறைய தேயிலை ஏத்திட்டு... பாஸ்டன்ங்கற துறைமுகத்துல வந்து இறங்கினாங்க. தேவை இருப்பதால், அமெரிக்கர்கள் இதை ஏற்றுக் கொள்வாங்கன்னு எதிர்பார்த்தாங்க. சில அமெரிக்க பண முதலைகளும், தந்திரமாக தேயிலை வாங்கி வினியோகிக்க திட்டம் போட்டு... வாங்கிட்டாங்க. அப்போ, தேயிலை மூட்டைகளை கப்பலிலிருந்து இறக்கும் செவ்விந்தியத் தொழிலாளிகளைப் போல திபுதிபுன்னு பலர் நுழைஞ்சு, மாலுமிகளை கட்டிப் போட ஆரம்பிச்சப்பதான், 'அமெரிக்க சுதந்திரப் போராட்ட வீரர்கள்தான் அவர்கள்'ன்னு புரிஞ்சது.

மாலுமிகளை கட்டிப் போட்டு, அமெரிக்க மக்களுக்கு மிகவும் அத்தியாவசியமான, தேவையான அந்த தேயிலை மூட்டைகளை தூக்கி கடல்ல வீசிட்டாங்க! இதை அமெரிக்க வரலாற்றில்,'பாஸ்டன் தேநீர் விருந்து'ன்னு இன்னைக்கும் குறிப்பிடறாங்க.

சில லட்சியங்களுக்காக போராடும்போது, சில நஷ்டங்களையும் தாங்கிக் கொள்ள வேண்டியதுதான்!

டி. தாமஸ், அயன்புரம். ஆகஸ்டு 9 — 15; 1991.

**'என் அடி மனசு சொல்லுது' என்கிறார்களே, அப்ப மேல் மனசு எது?**

ஒரு மேல்நாட்டு சம்பவம்.

ஒரு எலெக்ட்ரானிக் கடைக்கு புதுசா ஒருத்தன் வந்தான். 'ரொம்ப காலமா வேலை இல்லாம தவிக்கறேன்'னு புலம்பினான். முதலாளி ரொம்ப கண்டிப்பான பேர்வழி. 'ஒரு டாலர் நஷ்டம் வந்தாக்கூட உன் சீட்டை கிழிச்சிருவேன்'னு வார்னிங் கொடுத்து, உள்ளே சேர்த்திட்டாரு. அப்ப ஒரு வாடிக்கையாளர் வந்து ஒரு அயிட்டம் கேட்க, முதலாளி புதுசா வேலைக்குச் சேர்ந்தவர்கிட்டே, 'உள்பக்கம் டேபிள் மேல அந்த

அயிட்டம் இருக்கு. பத்திரமா எடுத்து இவருக்கு எப்படி வேலை செய்யும், என்னன்னு விளக்கம் கொடு'ன்னாரு.

கஸ்டமரை கூட்டிட்டு நம்ம நண்பர் உள்ளே போனாரு. ஏதோ பேசிட்டே பொருளைக் கையிலெடுக்க 'டமால்'ன்னு சத்தம். அயிட்டம் பீஸ் பீஸா தரையில சிரிச்சது!



வெளியிலிருந்து முதலாளி, 'என்னய்யா உடைச்சே?'ன்னு கத்த, உள்ளிருந்து நம்ம நண்பர் மேல் மனசுக்காரரா இருந்திருந்தா, எலக்ட்ரானிக் கருவியை உடைச்சுட்டேம்பாரு. ஆனா, நம்மவர் அடி மனசுக்காரர். ரொம்ப வேதனையோட, வெக்ஸாகி, 'இந்தக் கடையில எனக்கு இருந்த எதிர்காலத்தையே உடைச்சிட்டேன் முதலாளி'ன்னு சத்தம் போட்டுச் சொல்லி, கண்கலங்கினாரு!

அவர் அடி மனசோட பேசினதுல முதலாளி மனசு இறங்கி, 'பரவாயில்லை. இன்னொரு தடவை உன் எதிர்காலத்தை உடைக்காம வேலை பாரு'ன்னாரு.

எம்.கே. தினகரன், எம்.ஏ., கோவை—18. ஆகஸ்டு 9 — 15; 1991.

**தந்தை சன்னியாசி ஆவதுண்டு. தாய் சன்னியாசி ஆனதுண்டா?**

நம்ம ஊர் தாய்க்குலம் எல்லாம் ஏற்கனவே சன்னியாசிகளாத் தாங்க இருக்காங்க! அவங்களுக்குன்னு ஆசாபாசம், சுதந்திரம், உரிமை போதுமான அளவு இருக்கா என்ன?

"போதுண்டி. இதுக்கு மேல பொண்ணு படிச்சா, நாளைக்கு அதுக்குத் தகுந்த மாப்பிள்ளை கிடைக்காட்டி என்ன பண்றது?"

"பையனுக்கு பொண்ணைப் பிடிக்கலையாங்க!"

இப்படிப்பட்ட வசனம் இன்னும் நாட்ல கேட்டுட்டுதான் இருக்கு.

ஆர்க். எழிலன், திருச்சி—2. ஆகஸ்டு 9 — 15; 1991.

**திறமையுள்ளவர்கள் எளிதில் முன்னேற முடியாமைக்கு காரணம் என்ன சார்?**

"மனிதர்கள் தங்கள் ஆற்றலைப் பயன்படுத்தாமல், பிறர் உதவியை எதிர்பார்த்து நிற்கிறார்கள்"

*— மான் டெய்ன்.*

"நீ உனக்குள்ளே உற்றுப் பார். பீறிட்டுக் கொண்டிருக்கும் ஆற்றலின் ஊற்றுக் கண் தெரியும்"

– கவிஞர் எமர்சன்.

"நான் எல்லா உதவிகளுக்கும் என்னையே நம்புகிறேன்"

– கவிஞர் வர்ஜில்.

"நம் கையே நமக்கு உதவி!"

– நம்ம ஊர் பழமொழி.

(நன்றி: திரு. மெர்வின்)

லாங்டன். திருநெல்வேலி. ஆகஸ்டு 9 – 15; 1991.

**உங்கள் வீட்டு மனைவியின் தொணதொணப்பு உண்டா?**

யார் வீட்டுல இல்லைன்னு நினைக்கறீங்க?

பெர்னாட்ஷா பெரிய மேதைன்னு பேர் எடுத்தவரு. அவர் நண்பர்களோட பேசிட்டிருந்தப்போ, சம்சாரம் பக்கத்து ரூம்லருந்து கடகடன்னு தையல் மிஷினை இரைச்சலோட ஓட்டுனாங்க.



நண்பர்கள் போய் ஷா மனைவிகிட்டே, "உங்க கணவர் இவ்வளவு சுவாரஸ்யமா பேசறாரு. உங்களுக்கு அதுல ஈடுபாடே இல்லையா?"ன்னாங்க.

"என் கைக்கு மட்டும் இப்ப இந்த தையல் மிஷின் கிடைக்கலைன்னா... நேரா அவர் கழுத்து திருகியிருக்கும். வீட்டுக்கு உபயோகமா ஏதாவது பண்ணாம, எப்பப் பாரு தொணதொணத்துக்கிட்டு"ன்னு அவரை திட்டுனாங்களாம்.

நான் மியூஸிக்ல உட்கார்ந்தா, எங்க வீட்லயும் இது நடக்கறதுண்டு. குடும்ப நிர்வாக அக்கறையில அப்பப்ப சில சலசலப்பு வரும். அட்ஜஸ்ட் பண்ணிக்கோங்க.

என். ஜே.எ. ராஜு. கோவை. ஆகஸ்டு 9 – 15; 1991.

**பொறுமையை எப்படி தலைவா வளர்ப்பது?**

"நீ நினைக்கிறதுதான் கரெக்ட். நீ சொல்றதை எல்லாரும் கேக்கணும்" – இப்படி நினைப்பவனுக்கு கோபம் வருகிறது. இதை மாற்று. கோபம்

வராமல், பொறுமைசாலி ஆகலாம்'ன்னு ஒரு புத்தகத்துல படிச்சேன். முயற்சி பண்ணுங்க. ஆனா, இந்த விஷயத்துல நானே கொஞ்சம் வீக். அப்பப்ப கோபப்பட்றேன்.

ஜெயா சீனிவாசன், கீழப்பளையூர். ஆகஸ்டு 9 — 15; 1991.

**ஏகப்பட்ட டென்ஷன். குடும்பம் அமைதியாய், கோவிலாய் இருக்க எது வேண்டும் தலைவா?**

நண்பர் நடிகர் ராஜேஷ் ஒரு இங்கிலீஷ் கதை சொன்னாரு.

அதாவது, ஒரு பெரிய பணக்காரனுக்கு ரொம்ப காலம் கழிச்சு ஒரு குழந்தை. பாசமா வளர்க்கிறார். ஒருநாள் குழந்தையை கோவிலுக்கு கூட்டிட்டு போறாரு. காரை நிறுத்தி, பூட்றதுக்குள்ள குழந்தை பக்கத்து தெப்பக்குளம் பக்கம் போய், படியில உருண்டு விழற நிலைமை. ஒரு டாக்டர் ஓடிவந்து காப்பாத்திட்டாரு. பணக்காரன் ஓடிவந்து நன்றி சொல்லி, தொகை நிரப்பப் படாத ஒரு செக்கை கையெழுத்து போட்டு டாக்டர்கிட்டே நீட்டி, 'எவ்வளவு பணம் வேணும்னாலும் நீங்களே எழுதி எடுத்துக்கலாம். ஆனா ஒண்ணு. பேங்க்ல 50 லட்சம்தான் இருக்கு. அதுக்கு மேல போகாம பார்த்துக்கங்க''ன்னு போயிட்டான்.



டாக்டர் அன்னைக்கு டிஸ்பென்ஸரில வேலை பார்க்கும்போது, கம்பவுண்டர், 'வீட்ல செலவுக்கு கொஞ்சம் தட்டுப்பாடு. பணம் வேணும்'னாரு. டாக்டர், பாக்கெட்லருந்து பணக்காரன் கொடுத்த செக்கை எடுத்து நீட்டி, 'நீயே எவ்வளவு வேணுமோ, அவ்வளவு எழுதி எடுத்துக்கோ. அதுல லட்சக்கணக்குல பணம் இருக்கு'ன்னாரு. கம்பவுண்டர் 50 ரூபா மட்டும் எழுதி எடுத்துட்டு புறப்பட்டாரு.

இது கதை. கதையோட பெயர் `Good - Better - Best' அதாவது 'நல்லவன் — ரொம்ப நல்லவன் — ரொம்ப ரொம்ப நல்லவன்'.

உதவிக்காக 50 லட்சத்துக்கு செக் கொடுத்த பணக்காரன் நல்லவன். உதவிக்கு கைமாறு எதிர்பார்க்காம கம்பவுண்டருக்கு செக் கொடுத்த டாக்டர் ரொம்ப நல்லவன். தேவைக்கு எவ்வளவோ, அதை மட்டும் வாங்கிட்டு திருப்தியோட போன கம்பவுண்டர் ரொம்ப ரொம்ப நலல்வன்னு கருத்து.

அதனால நமக்கு வேண்டிய தேவைகளை ஒரு கட்டுப்பாட்டுல வைக்கிறதும், கிடைச்ச வசதிகள்ல திருப்தி அடையறதும்தாங்க ஒரு

குடும்பத்துக்கு அமைதியைக் கொடுக்கும். தப்பா எடுத்துக்காதீங்க.

இ. ஷாநவாஸ். திண்டுக்கல். ஆகஸ்டு 9 — 15; 1991.

**முதல் இரவைப் பத்தி தமாஷாக ஏதாவது சொல்லுங்களேன்?**

எங்கே நம் நாட்டைப் போல முன்னேற்றம் இல்லாமல் போய்விடுமோ என்ற பயத்தில் ஒரு இந்தியன் தன் முதல் இரவை பகலில் நடத்தினான்.

எம். சண்முகசுந்தரம். புதுக்கோட்டை. ஆகஸ்டு 9 — 15; 1991.

**உங்கள் சினிமாத்துறையில் நிறைய பேர் விளம்பரத்தால்தான் தாக்குப் பிடிப்பதாகத் தெரிகிறது?**

குதிக்காலை உயர்த்தி, கட்டை விரல் நுனியில நிக்கறவன் உயரமா இருக்கிற மாதிரி தெரியும். ஆனா, ஸ்ட்ராங்கா நிக்கறானா? தட்டினா விழுந்துட மாட்டான்? விளம்பரத்தாலே உயரமா காமிக்கறதும் அப்படித்தான்!

ஆர்.கே.கங்கா சீனிவாசன். திருவெண்ணெய்நல்லூர். ஆகஸ்டு 9 — 15; 1991.

**மனிதன் கடைசி வரை அடைய முடியாதது எது?**

திருப்தி. அது அடைஞ்சுட்டா அவன் மனிதன் இல்லை, மகான்! மகான் — பணம், புகழ், பற்று, பாசம் எல்லாத்தையும் துறந்து போயிட்டே இருப்பான்.



அ.ராஜாராம். தென்காசி. ஆகஸ்டு 9 — 15; 1991.

**ரிக்ஷா தொழிலாளியின் மகன் 'டாட்டா' ஆக முடியுமா?**

முடியும்!

அமெரிக்க சீமான் ராக்பெல்லர் தினம் ரெண்டு ரூபா கூலியிலதான் வாழ்க்கையையே ஆரம்பிச்சாராம்! சிக்கனம், விடாமுயற்சி, அக்கறை இதெல்லாம்தான் அவர் உயர்வுக்கு காரணம்.

சந்திரசேகரன். திருத்தணி. ஆகஸ்டு 16 — 22; 1991.

**சாமியார்களை நம்பலாமா?**



இது தர்மசங்கடமான கேள்விங்க. ஏன்னா, நாட்ல யாரு நிஜ சாமி? யாரு போலி சாமி ங்கறது பிரச்னையா இருக்கு.

டெல்லியில சடாச்சாரின்னு ஒரு சாமியார் ரொம்ப ஃபேமஸ். பெரிய பெரிய பெரிய புள்ளிங்க எல்லாம் கூட்டம் கூட்டமா பக்தியோட வருவாங்க. அந்த சாமியார், வர்ற பக்த கோடிகளோட கைய தொட்டா போதும். ஒரு புதுவித உணர்வு நம்ம உடம்புல ஏறும்! பிரமை இல்லை. உண்மையிலே சுறுசுறுன்னு ஒரு நிஜ உணர்வு. ஆஹா! நமக்கு சாமியோட அருள் கிடைச்சிருச்சுன்னு எல்லாரும் சொக்கிப் போவாங்க.

ஒருநாள் சாமியார் பெட்டுக்கு பேக் சைடு பார்த்தா, ஒரு சின்ன பேட்டரி. அதிலேர்ந்து ஒரு வயர்! அது சாமியார் உடம்புல மாட்டப்பட்டிருக்கு. அதாவது ஆளுக்கு ஏதும் ஆகாத அளவு மிக மிகக் குறைந்த வோல்டேஜ் கரெண்ட் சாமியார் உடம்புல ஏற, சாமியார் யாரைத் தொட்டாலும் அது அவங்களுக்கும் ஏறும்! இந்த குட்டு உடைஞ்ச மறுநாளே சாமியார் சடாச்சாரி எங்கே போனார்ன்னு தெரியலை!

அதனால, காஞ்சி சுவாமிகள், வாரியார், குன்றக்குடி அடிகளார், சுவாமி சின்மயானந்தா இப்படிப்பட்ட சாமியார்களை நம்பலாம். ஏன்னா, மக்களை ஏமாத்தற சர்க்கஸ் வித்தை எதும் காட்டாமே, நியாயமா பக்தி மார்க்கத்தை போதிக்கிறாங்க.

கே.ரமேஷ், பள்ளிப்பாளையம். ஆகஸ்டு 16 — 22, 1991.

**தொழிலுக்கு தேவை வருமானமா? மனத் திருப்தியா?**

ரெண்டுமில்லை!

அந்தத் தொழில்ல உங்களுக்கு உண்மையான ஈடுபாடு இருந்தாத்தான், நீங்க கேட்ட ரெண்டுமே கிடைக்கும்.

எம். சுப்பையா, காரைக்குடி. ஆகஸ்டு 16 — 22, 1991.

**தினம் பாலுக்கும், கூழுக்கும் ஏழைகள் அலைகையில் ஆயிரம் கோயில்கள் தேவையா?**

ஒரு பக்தன் வேக வேகமா ஈஸ்வரன் கோயிலை நோக்கி ஓடி வந்துட்டிருந்தான். அப்ப ஈஸ்வரன், பார்வதிகிட்டே, 'கைலாயம் புறப்படலாம் நட'ன்னு கூப்புட்டாரு.



பார்வதி, 'அதோ ஒரு பக்தன் வர்றான்'னு கை காட்ட,

'அட! டயத்தை வேஸ்ட் பண்ணாதே'ன்னு ஈஸ்வரன் எழும்பி வானத்துல கிளம்ப, பார்வதி, 'அந்த பக்தனது கோரிக்கையை கேட்காமலே புறப்பட்டது நியாயமா?'ன்னாங்க.

அதுக்கு ஈஸ்வரன், 'அந்த பக்தன் தன் குழந்தை உடம்புக்கு சுகமில்லாம கிடக்குது, எப்படியாவது காப்பாத்துங்கன்னு கேக்க வந்தாப்பல. ஆனா இந்நேரம் அந்தக் குழந்தைக்கு சுகமாகியிருக்கும்"ன்னாரு.

பார்வதி அதிர்ச்சியோட, 'அவர் கோரிக்கைய உங்ககிட்ட சொல்லவே இல்லை. நீங்க அருள் புரியவும் இல்லை. பின்ன எப்படி குழந்தைக்கு சுகமாகியிருக்கும்?"ன்னு குழம்ப,

ஈஸ்வரன், 'அவன் வர்ற வழியில, "ஐயா! கைக்குழந்தை ரெண்டு நாளா பட்டினி"ன்னு ஒரு அம்மா புலம்ப, அதை செவி கொடுத்துக் கேட்டு, தன்னாலான தர்மத்தை செய்துட்டு வந்தான். அதனால எங்கிட்ட கோரிக்கையை வைக்கறதுக்கு முன்னாலேயே தர்மதேவதை குழந்தையை சுகப்படுத்திட்டா'ன்னு சொன்னாரு.

ஆயிரம் கோவில் இருந்தும், ஏழைகள் துயரப்பட்றதுக்கும், ஆயிரம் கோயில் ஏறி இறங்கியும் எதுவுமே நடக்கலையேன்னு சிலர் புலம்பறதுக்கும் காரணம் மேல உள்ள தர்மத்தை புரிஞ்சுக்காததுதான்!

வி.எல்.பழனியப்பன். கோவை—17. ஆகஸ்டு 16 – 22; 1991.

**கதை சொல்ல முடியாத கேள்வி! வாதத்திற்கு மருந்து உண்டு. மொடவாதத்திற்கு (முட்டாள்தனமான வாதத்திற்கு) மருந்து உண்டா?**

**உ**ண்டுங்க!

ஒரு ராஜா. நீங்க கேட்ட மாதிரி அவர் மொடவாதக்காரர். ஒருநாள் மந்திரிய கூப்புட்டு,

"நாளைக்கு நான் சாமிய பார்த்தாகணும். நீ காட்டு. காட்டலை... உன் தலை போகும்"ன்னு சொல்லிட்டாரு.

மந்திரி மண்டைய பிச்சுக்கிட்டாரு. மறுநாள் ராஜா, மந்திரிகிட்ட வந்து "எங்கே சாமி?"ன்னு கேட்க, மந்திரி, ராஜாவை ஒரு டேபிள்கிட்டே கூட்டுட்டு போய், அங்கிருந்த ரெண்டு டம்ளரைக் காட்டினார். ரெண்டுலயும் தண்ணீர் இருந்தது.

"ராஜா! இதுல ஒண்ணு சர்க்கரை கரைஞ்ச தண்ணி. ஒண்ணு உப்பு கரைஞ்ச தண்ணி. எது உப்புத்தண்ணி எது சர்க்கரைத் தண்ணின்னு கண்ணுல பார்த்து சொல்லுங்க"ன்னாரு.

"மடையா! இதை கண்ணுல பார்த்து எப்படி சொல்றது? குடிச்சாதானே தெரியும்"ன்னாரு.

உடனே மந்திரி, "அதேமாதிரிதான்... சாமிய நான் காட்னா உங்களுக்கு தெரியுமா? நீங்களா போய் தேடிப் பார்த்து, அருளை அனுபவிச்சாத்தானே தெரியும்"ன்னாரு.

இது மொடக்கவாதத்திற்கு சரியான மருந்தா தெரியுதுங்களா?

டி.எல். சிவக்குமார், வந்தவாசி. ஆகஸ்டு 16 — 22; 1991.

**காதலியுடன் சினிமாவுக்குப் போவது, மனைவியுடன் சினிமாவுக்குப் போவது... இதில் எது கிக்?**

மன்னிக்கணும்.

தாழ்ப்பாள் இல்லாத பாத்ரூம்ல ஆனந்தமா குளிக்க முடியும்னு எனக்குத் தோணலை. அந்த அனுபவமும் இல்லை. அதனால, மனைவி கூட போன கிக் மட்டும்தான் நமக்கு உண்டு.

ராஜேந்திரன், சிவகாசி. ஆகஸ்டு 16 — 22; 1991.

**சூப்பர் ஸ்டார் ரஜினியைப் போல் மனம் பக்தி மார்க்கத்தில் போகிறது. கல்யாணம் அவசியமா என்று யோசிக்கிறேன்.**

நல்ல ஆள் சார் நீங்க!

மந்தபாலர்ன்னு ஒரு ரிஷி.

வாழ்க்கை பூராம் கடும் பிரம்மச்சாரியா பக்தி மார்க்கத்துல இருந்துட்டு, சொர்க்கத்துக்குப் போனா, கதவை திறக்க மாட்டேன்னுட்டாங்க.



"பூலோகம் போய் புத்திர சந்தானம் இல்லாம வந்தா உள்ளே விட மாட்டோம். போய் ஏதாவது பண்ணிட்டு வாங்க"ன்னுட்டாங்க!

வேற வழியில்லாம ரிஷி கீழே வர, நாரதர் பார்த்து, "என்ன வருத்தம்?"ன்னு கேட்க, ரிஷி, "சீக்கிரமா குழந்தை பெத்துக்க ஒரு ஐடியா சொல்லுங்களேன்"ன்னாரு.

"பூலோகத்துல ரொம்ப சீக்கிரமா வம்ச விருத்தி பண்றது பறவைகள்தான்"ன்னாரு.

உடனே ரிஷி சாரங்கப்பறவையா மாறி, படபடன்னு ரெண்டு மூணைத் தள்ளி விட்டுட்டு, மேலே போனாராம். நீங்க சாரங்கப் பறவையா மாற முடியுமா என்ன?

காலா காலத்துல ஒண்ணைக் கட்டி, கச்சேரிய அமர்க்களமா ஆரம்பிங்க சாமி!

எல். கார்த்திக், சீர்காழி. ஆகஸ்டு 16 — 22; 1991.

**'சின்னப் பயல். தப்பு பண்ணிட்டான். விடுங்க' என்கிறார்களே... யார் தப்பு செய்தாலும் தப்புதானே?**

ஒரு மாணவன், ஒரு கட்டுரை எழுதிட்டிருந்தான். அதுல ஒரு வரி, எங்கோ மனம் பறந்தது'ன்னு எழுதியிருந்தான். ஆனா, எழுதின விதம் எப்படி தெரியுமா?

ஒரு வரியோட கடைசி பகுதியில 'எங்' எழுதிட்டு, அடுத்த வரியில 'கோமணம் பறந்தது'ன்னு எழுதிட்டான்! ஆசிரியர் தமாஷா,

"ஏண்டா.. இப்படி எழுதினா உன் கோமணம் பறந்ததுன்னு அர்த்தம் வராதா'ன்னு சிரிச்சாரு.

இது சின்னவங்க தப்பு.

ராஜீவ்காந்தி பிரதமரா இருந்தப்போ, பன்சிலாலை அமைச்சரவையில சேர்த்துட்டாரு. ஆனா, என்ன பொறுப்புன்னு இன்னும் முடிவு செய்யாம இருந்தது.

அதை டில்லி வானொலி நிலையத்துல தமிழ் செய்தி வாசிக்கிற பெரியவர், 'பன்சிலால் பொறுப்பில்லாத மந்திரியாக நியமி க்கப்பட்டிருக்கிறார்'னு வாசிச்சாராம்.

இப்ப வித்தியாசம் தெரியுதுங்களா?

ரேவதிப்ரியன், ஈரோடு—1.

**எதிர்ப்பு இல்லாத வாழ்க்கை எப்படி இருக்கும்?**

வெறும் இனிப்புன்னா திகட்டும்.

ராஜப்பன், சென்னை—102. ஆகஸ்டு 16 — 22; 1991.

**இலையில் சாதம் மீதம் வைத்தால் தகப்பனார் திட்டுகிறார். எது கரெக்ட்? மீதம் வைப்பதா? வைக்காமல் இருப்பதா?**

உங்க அப்பா அம்மாகிட்டே பாக்யராஜ் சொன்னாப்புலன்னு சொல்லுங்க. சாப்பாட்டுல மிச்சம் வச்சாலும் தப்பில்லை. வைக்காட்டியும்

தப்பில்லை. ஆனா வேற சில விஷயங்கள்லதான் கண்டிப்பா மிச்சம் வைக்கவே கூடாது. அது எதுன்னு ஒரு நீதி நூல் சொல்லுது.

1. பகையில மிச்சம் வைக்கக்கூடாது. ஒன்று — பகையாளியை அறவே ஒழித்து விட வேண்டும். அல்லது பகையாளியிடம் சமாதானமாகி விடவேண்டும். அவன்தான் எச்சரிக்கையான மனிதன்.

2. தீயில் மிச்சம் வைக்கக்கூடாது. அவளே எச்சரிக்கையான குடும்பப் பெண்மணி. ஒரு பொறித் தீயை அணைக்காமல் விட்டாலும், வீடு எரிந்து போக வாய்ப்புண்டு.

3. கடனில் மிச்சம் வைக்கக்கூடாது. அவன்தான் உஷாரான குடும்பத் தலைவன். சிறு அளவு கடன் மிச்சம் இருந்தாலும், அது வளர்ந்து மூழ்கடித்து விடும்.

ஆர். எஸ். ராஜு, காரைக்கால். ஆகஸ்டு 16 — 22; 1991.

**இதுவரை நீங்கள் சாதித்தது என்ன? சாதிக்க நினைப்பது என்ன?**

**உ**ங்கள் மனதில் இடம் பிடித்தது. தொடர்ந்து அதை தக்க வைப்பது!

டி.கே ராஜா, சென்னை—17. ஆகஸ்டு 23 — 29; 1991.

**'காரியம் ஆக வேண்டுமானால் காலைப் பிடி' இது அறிவுக்கு பொருத்தமான அறிவுரையா?**



**த**த்துவஞானியான அரிச்டபஸ், அப்போ கிரேக்க நாட்டை ஆண்ட கொடுங்கோல் அரசனான டயோனிசஸ்ங்கறவர்கிட்ட பொதுமக்கள் சார்பா ஒரு கோரிக்கை மனு கொடுத்தார்.

கொடுங்கோலன் அதை பரிசீலிக்கவே இல்லை.

பொறுத்திருந்து பார்த்த அரிச்டபஸ், கடைசியில கோரிக்கையை நிறைவேற்றச் சொல்லி கொடுங்கோலன் கால்ல விழுந்து கேட்டார். இதைப் பார்த்த மக்கள் வேதனை அடைஞ்சு, "பேரறிஞரான நீங்கள் கேவலமாக அக்கொடுங்கோலனின் காலில் விழலாமா?"ன்னு கேட்டாங்க.

அதுக்கு அவர், "என்ன செய்வது? தன் காதுகளை காலில் மாட்டி வைத்திருக்கும் அரசரிடம் விஷயத்தை இப்படித்தான் எட்ட வைக்க வேண்டியிருக்கிறது"ன்னார்.

அன்னைக்கு அந்த ஞானி சொன்ன சமாச்சாரம்தான் நம்மூர்ல இப்படி ஒரு பழமொழியா உலவுகிறதோ என்னவோ?

ஜான்சிராணி, பெருங்களத்தூர். ஆகஸ்டு 23 – 29; 1991.

**எம்.எல்.ஏ., எம்.பி., கட்சித் தலைமை — இப்படி பல பதவிகள் நாட்டில் நிரந்தரமின்றி தத்தளித்துக் கொண்டிருக்கிறதே... காரணம் என்ன?**

ஆபிரகாம் லிங்கன் அமெரிக்க ஜனாதிபதியா பதவி ஏற்றிருந்த சமயம்.

அவரை சந்திக்க அவருடைய செயலாளர் போனாரு. அங்கே புது ஜனாதிபதியான லிங்கன், எத்தனையோ பணியாட்கள் இருந்தும், தன் பூட்ஸ்களுக்கு தானே பாலீஷ் போட்டுக் கொண்டிருந்த காட்சியைக் கண்டு அதிர்ச்சியுற்றவராய், "உங்கள் பூட்ஸுகளுக்கு நீங்களே பாலீஷ் போடுகிறீர்களா?"ன்னு கேட்க,

லிங்கன் அமைதியாக, "ஆமாம்... நீங்கள் யாருடைய பூட்ஸ்களுக்கு பாலீஷ் போடுவீர்கள்?"ன்னு சிரிச்சுட்டே கேட்டார்.

இது ஜோக்கா, அறிவுரையான்னு புரியாம குழம்பி நின்னார் செயலாளர்.

இப்படி உயர்ந்த பதவியில உக்காரும்போது, அடக்கம் அந்தப் பதவியை விட உயர்ந்ததுன்னு லிங்கன் சொல்லியிருக்காரு.

முத்துராமன், செங்கல்பட்டு. ஆகஸ்டு 23 – 29; 1991.

**காலத்தின் காற்றை சுவாசிக்கத் தெரிந்தவனே புத்திசாலி! எப்படி?**

தாடி வைத்த சந்திரசேகர் பிரதமர் பதவி ஏற்றிருந்த சமயம்.

அப்ப ஒரு சவர பிளேடு கம்பெனி, தன் விளம்பரத்துல, "ஷேவ் செய்து கொள்ளுங்கள். இல்லையேல் உங்களை பிரதமராக்கி விடுவார்கள்"ன்னு பயமுறுத்தியிருந்தது!

பிளேடு கம்பெனி, காலத்தின் காற்றை இப்படி நகைச்சுவையாக சுவாசிச்சதை எல்லாரும் ரசிச்சாங்க!

சின்னப்பா, வைத்தியநாதன்பேட்டை. ஆகஸ்டு 23 – 29; 1991.

**'நமஸ்காரம்' என்று சொல்லப்பட்டதை மாற்றி, 'வணக்கம்' என்று கூறச் செய்தது திராவிட இயக்கத்தினர்தானே?**



'வணக்கம்' என்ற சொல்லைக் கையாண்டவர் கம்பர்.

காடு சென்ற சீதை தன் அத்தைமார்க்கு மந்திரி மூலமாக வணக்கத்தைத்தான் தெரிவிச்சு அனுப்பறாங்க.

'அன்னவள் கூறுவாள் அரசர்க்கு அத்தையர்க்கு
என்னுடை 'வணக்கம்' முன் இயம்பி...'

— இது கம்பர் வாக்கு.

அதை புதுப்பிச்ச பெருமை திராவிட தமிழ் இயக்கத்துக்கு உண்டுங்கறது உண்மை!

எஸ்.கே. சந்திரசேகரன், கும்பகோணம். ஆகஸ்டு 23 — 29; 1991.

**`Charity begins at home' — 'தனக்கு மிஞ்சினதுதான் தான தர்மம்' என்பதை ஒப்புக் கொள்கிறீர்களா?**



'மனைவிக்கு உயர்ந்த ஆடை, அணிகலன்களை எடுத்துக் கணவன் தருகிறான். அது அன்பினால் அல்ல... தான் கண்டு மகிழ வேண்டும் என்றும், அவள் மகிழ்ச்சியடைந்து தனக்கு இன்பம் தர வேண்டும் என்றும் பிரதிபலன் எதிர்பார்த்துச் செய்வது. அப்படியே மகனை நன்றாக படிக்க வைப்பது, முதுமைப் பருவத்தில் தம்மைக் காப்பாற்றுவான் என்ற எதிர்பார்ப்பினால்தான். இதுவும் அன்பு அல்ல. பிரதிபலன் எதிர்பார்ப்பதுதான். நண்பர்களுக்கு உதவுவதும் இப்படியொரு எதிர்பார்ப்பே! கோயிலுக்குச் சென்று அர்ச்சனை காணிக்கை செலுத்துவதும், கடவுள் அருளை எதிர்பார்த்துச் செய்வதே. இப்படி, நம்மைச் சுற்றியுள்ளவர்களுக்கு செய்வது எதுவும் அன்பும் அல்ல, தர்மமும் அல்ல. பயன் கருதாமல் தேவையானவர்களுக்குச் செய்வதே தர்மம்!

இப்படி வாரியார் சுவாமிகள் சொல்லியிருக்காரு.

க. இளங்கோ, நந்தியநல்லூர். ஆகஸ்டு 23 — 29; 1991.

**ஒரு நல்ல கதை எழுதுவது எப்படி? அல்லது சினிமா எடுப்பது எப்படி?**

கதை, சினிமா மட்டுமல்ல... எந்தத் தொழிலுக்குமே அடிப்படையான நாலு விஷயத்தை சொல்றாங்க.

1. முதலில் சம்பந்தப்பட்ட துறைக்குரிய விபரங்களை சேகரியுங்கள்.
2. பின்னர் அந்த விபரங்களைப் பற்றி ஆராயுங்கள்.
3. ஆராய்ந்த பின், தீர்மானமான ஒரு முடிவுக்கு வாருங்கள்.
4. முடிவை திடமான நம்பிக்கையுடன் செயல்படுத்துங்கள்!

ரோகிணி, சிவகாசி. ஆகஸ்டு 23 -- 29; 1991.

**உங்கள் மனதில் இடம் பெற்ற பெண்?**

ஹிட்லர் ஒரு கொள்கை வெறியர். பிடிவாதக்காரர். ஜெர்மானியர் அல்லாதோரை அடக்கி ஆள்வதுங்கற பிடிவாதத்தைப் போல, சொந்த வாழ்க்கையில பெண்கள் விஷயத்துலயும் அப்படி ஒரு அடக்குமுறையாளராகவே இருந்தார்.

சில்வியா, சிந்தியா, ரானட் முல்லர்ங்கற நடிகை, கெலிரோ ஃப்ராளின் கிறிஸ்டர் இப்படி பல பெண்களோட உறவு கொண்டு தன்னோட உடல் தேவைக்கு அவங்களை பயன்படுத்தினாரே தவிர, யாரையும் திருமணம் செஞ்சுக்க மறுத்துட்டார்.



'குழந்தைகள் என்றாலே எனக்குப் பிடிக்கும். ஆனால் அது மற்றவர்களுடைய வாரிசாக குழந்தை பிறப்பதை நான் அனுமதிக்க மாட்டேன்'ங்கறது அவரோட கொள்கையா இருந்தது.

அவரை ஈவா பிரான்ங்கற பெண் விழுந்து விழுந்து காதலிச்சா. அவங்க ரெண்டு பேருக்கும் 23 வயசு வித்தியாசம்! காதலிச்சது மட்டுமில்ல, அவரோட 12 வருஷம் திருமணம் செஞ்சுக்காமலே மனைவியைப் போல வாழ்ந்தாள்!

'ஹிட்லர் என்னை காதலிக்கிறார். கல்யாணமும் செய்து கொள்வார்'ன்னு எல்லார்கிட்டயும் அவ சொல்லிக்கிட்டு இருந்தாலும் ஹிட்லருக்கு அந்த எண்ணமே இல்லை.

ஈவா பிரானும், என் நாய்க்குட்டி பிளாண்ட்டியும்தான் இறுதி வரை எனக்கு விசுவாசமாக இருந்தார்கள்'ன்னுதான் சொன்னாரே தவிர, அவளுக்கு மனைவிங்கற அந்தஸ்து கொடுக்காமலே இருந்தார்.

கடைசியில அவரோட அரசியல் வாழ்வு வீழ்ச்சி அடைஞ்சு, அவரால் பயனடைஞ்ச பல பேர் ஓடிப் போயிட்டாங்க. தனக்கு தற்கொலை செஞ்சுக்கறதைத் தவிர வேற வழியே இல்லேன்னு ஹிட்லர் முடிவு செஞ்சபோது, 'நானும் உங்களோடு சாகிறேன். வாழந்தாலும், வீழ்ந்தாலும்

உங்களோடுதான்'னு துணிஞ்சு நின்னா ஈவா பிரான்!

அப்போதான் ஹிட்லரோட கல் மனசு கரைஞ்சது. அப்போ, அதாவது சாகறதுக்கு சரியா 16 மணி நேரத்துக்கு முன்னாடி அவளை முறைப்படி திருமணம் செஞ்சுக்கிட்டு, மனைவிங்கற அந்தஸ்தை அளிச்சாரு.

அந்த ஈவாபிரான்தான் இன்னும் என் மனசுல இருக்காங்க!

சந்திரசேகரன், சென்னை—34. ஆகஸ்டு 30 — செப் 5; 1991.

**'ஐஸ்' வைப்பதில் கெட்டிக்காரர்கள் யார்?**



நம்ம ஊர் புலவர்கள்தாங்க!

ஒரு ராஜா, ராத்திரில ஊர்வலம் வந்தாரு. அந்த நேரத்துலயும் ராஜாவுக்கு மரியாதைக்காக குடை பிடிச்சிட்டு வந்தாங்க.

அந்த சமயம் வேடிக்கை பார்த்துட்டிருந்த ஒரு பெண் கிண்டலா, 'ராஜா அர்த்த ராத்திரியிலயும் குடை பிடிக்கச் சொல்றாரே'ன்னு சொல்ல, ராஜாவுக்கு என்னவோ மாதிரி ஆயிடுச்சு.

உடனே பக்கத்திலிருந்த புலவர் அசத்தலா ஒரு பாட்டு பாடினார்.

அதாவது, 'ராஜாவே! உமக்கு உலகத்திலுள்ள எல்லா பெண்களின் கற்பையும் காப்பாற்றும் பொறுப்பு இருக்கிறது. வானுலகத்தில் கற்புக்காக பெயர் பெற்ற 'அருந்ததி' நட்சத்திரமாக இருக்கிறாள். இரவில் மின்னும் அவள், உன் அழகைப் பார்த்தால், சலனமுற்று, அவளுடைய கற்புக்கு பங்கம் வந்துவிடக் கூடும். அப்படி நேராத வண்ணம், நீ குடையை பிடித்து உன் அழகு முகத்தை மறைத்துக் கொண்டிருந்தாய்'ன்னு கருத்துபட பாடினாரு. அரசர், ஜலதோஷத்துல 'அச்'ன்னு தும்மி ட்டாருங்க!

பி.கு: இப்ப நிறைய புலவர்கள் அரசியல்ல பூந்துட்டாங்க!

எல். முருகேசன், பொள்ளாச்சி. ஆகஸ்டு 30 — செப் 5; 1991.

**சினிமாவில் உள்ளவர்களுக்கு மட்டும்தான் நகைச்சுவை உணர்வு இருக்குமா?**

இங்கிலாந்து பிரதமரா இருந்த லாயிட் ஜார்ஜ் ஒரு கூட்டத்தில் பேசிட்டிருந்தப்போ, அவரை கேவலப்படுத்த விரும்பின ஒருத்தன்,

"நீங்க இன்னைக்கு பிரதமரா இருந்தாலும் உங்க தாத்தா ஒரு

காலத்துல கழுதை வண்டி ஓட்டினவர்தான். இது உங்களுக்கு ஞாபகமிருக்கா?"ன்னு கேட்டான்.

பிரதமர் பொறுமையா சிரிச்சுட்டே, "நல்லா ஞாபகம் இருக்குங்க.. தாத்தாவோட வண்டிய இப்பக் கூட நான் நினைவுச் சின்னமா வீட்ல வச்சிருக்கேன். ஆனா, வண்டிய இழுத்த கழுதைதான் எங்கியோ காணாம போயிருச்சு. ஆனா, அது இந்த கூட்டத்துல உட்கார்ந்துட்டிருக்கிறது இப்பத்தாங்க எனக்குத் தெரியுது"ன்னு ஒரு போடு போட்டாரு!

பிரதமருக்குக்கூட நகைச்சுவை உணர்வு இருக்கறது புரியுதல்ல?

வி. பாபு, போளூர். ஆகஸ்டு 30 – செப் 5; 1991.

**உங்களைத் தாக்கி வரும் செய்திகள் உங்களுக்கு என்ன பாதிப்பைக் கொடுக்கும்?**

விறகு கிளறப்பட்டால்தான் தீ கொழுந்து விட்டு எரியும். சீண்டி விடப்பட்ட பாம்புதான் சீறிப் படம் எடுக்கும். மனிதனும் எதிர்ப்பின் பரபரப்பால்தான் புதுபலம் பெறுகிறான்!"

இது தத்துவம். இதை அமைதியா அசை போட்டுக்குவேன்.

எஸ். சியாமளா, செங்கல்பட்டு. ஆகஸ்டு 30 – செப் 5; 1991.

**'கவர்ச்சி' எதில் இருக்கிறது?**



உட்ரோ வில்ஸன்னு ஒரு அறிஞர், ஒரு அமெரிக்க பல்கலைக்கழகத்தோட தலைவரா இருந்தாரு.

பெண்கள் மட்டுமே படிக்கற ஒரு கல்லூரியை ஆணும், பெண்ணும் சேர்ந்து படிக்கிற 'கோ எஜுகேஷன்' கல்லூரியா மாத்தணும்ன்னு ஒரு பெண் உறுப்பினர் அவர்கிட்ட கோரிக்கை வெச்சாங்க.

"ஏன் அப்படி மாத்தணும்?"ன்னு உட்ரோ வில்ஸன் கேட்டாரு.

"மாணவர்களும் மாணவிகளும் ஒருவரையொருவர் ஒரு பிரமையுடன் பார்க்கறாங்க. இருபாலரும் நெருங்கிப் பழகினா, அந்த பிரமை ஒழிந்து சகஜமாயிடுவாங்க. அதுக்குத்தான்"னு அந்தப் பெண் உறுப்பினர் சொன்னாங்க.

அதுக்கு வில்ஸன்,

"அந்த பிரமைதான் ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையே இருக்கும்

'கவர்ச்சி!' ஒருவரையொருவர் சரியாகத் தெரிந்து கொள்ளாத அந்த மயக்கமான கவர்ச்சி இருக்கறதுலதான் சுவாரஸ்யமே இருக்கு. அது அழிஞ்சுட்டா, ஆண், பெண் உறவே சப்புன்னு ஆயிடும். அதனால பிரமையை எப்பாடு பட்டாவது காப்பாத்த விரும்பறேன்"னு பெண் உறுப்பினரோட கோரிக்கையை நிராகரிச்சுட்டாரு.

நேத்துகூட வீட்ல இருந்து வர்றப்போ, 'பத்மா சேஷாத்ரி ஸ்கூல்' வாசல்ல வயசு வந்த மாணவர்களும் மாணவிகளும் ஜாலியா பேசிட்டிருந்ததை கவனிச்சேன்.

"அடடா! நம்ம காலத்துல இப்படி ஸ்கூல்ல ஒரு புள்ளைகிட்டே கூட பேச அனுமதிக்கலையே"ன்னு ஏக்கப்பட்டேன்.

கூட இருந்த உதவியாளருக்கும் அதே ஃபீலிங் வந்ததாம். அதனால, பெண்களை கொஞ்சம் இடைவெளி விட்டு பழகற சிஸ்டத்துல எப்பவுமே ஒரு 'கிக்' இருக்குங்க!

கணேசன், உதகமண்டலம். ஆகஸ்டு 30 — செப் 5; 1991.

**உலகில் கொடுமையானது என்று எதை நினைக்கிறீர்கள்?**

ஒருத்தர் இறந்து , மேல் உலகம் போனாரு.

அவரை தேவதூதன் ஒரு மாளிகைக்கு கூட்டிப் போய், "பிரபு! நீங்க இங்கே சுகமா இருக்கலாம். சாப்பிட எது வேணும்னாலும் அட்சய பாத்திரத்தில் வரும்"னுட்டு போயிட்டான்.

பிரபு ஆனந்தமா விருப்பமானதெல்லாம் அட்சய பாத்திரத்துல கேட்டாரு. வந்தது. சாப்பிட்டாரு. தூங்கினாரு.

ஒருநாள், ஒரு வாரம், ஒரு மாசம்.. தலையை சொறிஞ்சாரு. யாராவது வருவாங்களான்னு பார்த்தாரு. யாரும் வரலை. மண்டையை பிச்சுட்டாரு.

"யோவ்... யாராவது வாங்க"ன்னு கத்தினாரு.

தேவதூதான் வந்தான்.

"சாப்பிட்டு, சாப்பிட்டு தூங்கறது எனக்கு பைத்தியம் புடிக்கிற மாதிரி ஆயிருச்சு! ஏதாவது வேலை வேணும்"னாரு.

அது இங்கே கிடைக்காதுன்னு தேவதூதன் சொல்ல,

"அப்ப இங்க இருக்கறதைவிட நரகத்துக்கே போறேனே"ன்னு பிரபு கத்த,

தேவதூதன், "இப்ப நீங்க



இருக்கறது நரகம் இல்லாம.. வேற என்னன்னு நினைச்சீங்க?"ன்னு மறைஞ்சுட்டான்.

அதனால, உலகத்துலயே கொடுமையானது... ஒரு மனிதன் சாப்பிட்டு, எந்த வேலை வெட்டியும் செய்யாம சும்மா இருக்கறதுதான்.

கே. கார்த்திகேயன், தஞ்சாவூர். ஆகஸ்டு 30 – செப் 5; 1991.

**குடும்பத்தில் புருஷன் உசத்தியா? பொண்டாட்டி உசத்தியா?**

விளக்கு உசத்தியா? எரியற திரி உசத்தியா?

வானம் உசத்தியா? அதுல இருக்கற நட்சத்திரம் உசத்தியா?

புல்லாங்குழல் உசத்தியா? அதுல வர்ற இசை உசத்தியா?

சிவன் உசத்தியா? சக்தி உசத்தியா?

என்ன பார்க்கறீங்க? எல்லாத்துலயும் ரெண்டும் சேர்ந்திருந்தாத்தான் உசத்தி! தனித்தனியா பிரிச்சு பார்த்தா, ஏதும் உசத்தியில்லை!

ப. அம்பிகாபதி, ஒரத்தநாடு. ஆகஸ்டு 30 – செப் 5; 1991.

**அயல்நாட்டில் பெண் உரிமை எந்த அளவில் உள்ளது?**



விம்பிள்டன் வீராங்கனையாக, டென்னிஸில் கொடி கட்டிப் பறந்தவங்க கிறிஸ் எட்வர்ட்!

அந்தம்மாவுக்கு கணவரா இருந்தவர் லாயிட். வீராங்கனைக்கு கணவரைத் தவிர வேறு காதலர்களும் இருந்தாங்களாம்.

அந்தம்மா விளையாடும் போது பார்வையாளர்களா அவருடைய கணவர் பயிற்சியாளர் தவிர காதலர்களும் இருக்கணுமாம். அப்படி காதலர்களும் ஆட்டத்தை பார்க் வந்தாத்தான், கிறிஸ் எட்வர்ட்டின் ஆட்டத்தில் சூடு பிடிக்குமாம்!

அதுக்காக அவர் கணவரே, மனைவியின் காதலர்களை அழைச்சுட்டு வந்து, உடன் உக்கார வச்சு, மனைவிக்கு ஊக்கமூட்ட ஒப்புக் கொண்டு வாழ்க்கை நடத்தியிருக்காராம்!

நம்ம அந்த லெவலுக்கும் போக வேண்டாம். அதுக்காக இப்ப இருக்கற மாதிரி ஒரேயடியா அடுப்படியிலயும் தள்ள வேண்டாம். இரண்டுக்கும் நடுவுல ஒரு சம உரிமைய கொடுப்போமே!

பணத்தை இறைவன் மதித்திருந்தால்,
மகான்களைப் பார்த்தன்றோ
கொடுத்திருப்பான்?

எஸ். ஹரிஹரன்



# தேன்கூடு

நீங்கள் நீங்களாகவே இருங்கள்.
அப்போதுதான் மற்றவர்களால்
உங்களை குற்றம் சொல்ல முடியாது.

ஜேம்ஸ் லியோ
பாலநிவாஸ்.

உங்களைத் தவிர வேறு யாராலும்
உங்களை தாழ்ந்தவராக்க முடியாது.

எம்.எஸ். கிரிஜாத்தம்பி.

உணர்ச்சிகளை கட்டுப்படுத்தாத
மனிதன் தன் திறமைகளை வெற்றியாக
மாற்ற முடியாது.

யாரோ
கீதா கிருஷ்ணன்.

குழப்பமில்லாமல் வாழ
வேண்டுமானால், அதற்குத் தேவை
ஒழுங்குமுறை. இது இருந்தால்
பொறுமை பிறக்கும். பொறுமை
பிறந்தால், வாழ்க்கையில் ஒரு அழகு
ஒளிவிடும். அழகு ஒளி விடும் போது
அன்பு, தூய்மை, நேர்மை, மனித நேயம்,
அறிவு ஆகியவை வெளிப்பட்டு,
வாழ்க்கை இன்பமயமாகும்.

கார்லைல்
மீனா முத்து.



குருடர்களும் பார்க்கலாம்... ஊமைகளும்
பேசலாம்... செவிடர்களும் கேட்கலாம்!
அது என்ன தெரியுமா? அன்பு
ஒன்றுதான்!

மார்க் ட்வைன்
ஆர். தமிழ்ச்செல்வன்.

சே ரஞ்சித், பசப்பைக்காடு. ஆகஸ்டு 30 – செப் 5; 1991.

**வாத்தியாரே! மனிதனின் பலம் எது? பலவீனம் எது?**

ஒரு மனிதனுக்கு பலம், பலவீனம் ரெண்டும் அறிவுதான்.

அறிவை பயன்படுத்தாதவன் பலவீனமாகிறான். பயன்படுத்தறவன் பலவான் ஆகிறான்!

பாமாபாஸ், ஒத்தக்குதிரை. செப்டம்பர் 6 – 12; 1991.

**ஒரு மனிதனின் உயர்ந்த, உன்னதமான லட்சியம் எதுவாக இருக்க முடியும்?**

சாக்ரடீஸ் சமுதாயத்தையே கெடுக்கறார்ன்னு குற்றம் சாட்டப்பட்டு ஜெயில்ல அடைக்கப்பட்டாரு. பொழுது விடிஞ்சா விஷம் சாப்பிட்டு சாகணும். அன்னைக்கு நைட் அவர் இருந்த அறைக்கு பக்கத்து அறையில வேற யாரோ ஒரு கைதி ஆனந்தமா பாட்டு பாடினான்.



சாக்ரடீஸ் அந்த கைதிகிட்டே, "அப்பா... இப்ப நீ பாடுன பாட்டை இன்னொரு தடவை திருப்பிப் பாடேன்"னாரு.

"ஏய்யா! நீ விடிஞ்சா சாகப் போறவன். இந்தப் பாட்டைக் கேட்டு என்ன செய்யப் போறே?"ன்னு கைதி கேட்க, சாக்ரடீஸ்,

"இல்லப்பா. நீ பாடுன பாட்டு மட்டுமல்ல. பாட்டோட பொருள் கூட புதுசா இருந்தது. சாகறதுக்கு முன்னால ஒரு புது விஷயத்தை தெரிஞ்சுக்கலாமேன்னு ஒரு நப்பாசை"ன்னாரு.

அதனால கடைசி வரை உலகத்தில் புதிது புதிதாக எதையாவது ஒண்ணைக் கத்துக்கிட்டே இருக்கறதுதான் ஒரு மனிதனோட உயர்ந்த லட்சியமா இருக்கணும்ங்கறது என் தனிப்பட்ட அபிப்ராயம்.

எஸ். குருசாமி, திண்டுக்கல். செப்டம்பர் 6 – 12; 1991.

**குழந்தைகளை அடித்து வளர்ப்பது சரியா?**

'ரகுவம்சம்' காவியத்துல காளிதாசன் ஒரு அழகான உவமை சொல்லியிருக்காரு.

"புதர் மண்டிக் கிடக்கும் பூமியை வெட்டித் திருத்துவதும், அதில்

தேவையில்லாமல் வளர்ந்து கிடக்கும் புல், பூண்டுகளை தீயிட்டு சாம்பலாக்குவதும்... அந்த நிலத்தை பண்படுத்தி பயிர் வளரச் செய்யும் நோக்கத்தில்தான்!

அதனால குழந்தைகளை பெரியவங்க கண்டிப்பதும், தண்டிப்பதும் அவர்களுடைய குணநலங்கள்ல சரியில்லாததை சரிப்படுத்தத்தான். அதுக்காக ஓரேயடியாக அடிச்சுட்டும் இருக்கக்கூடாது. அப்பப்ப ஒண்ணு ரெண்டு போடணும். போட்டதும் உடனே கொஞ்சி, எதுக்காக போட்டோம்னு புரியவும் வைக்கணும்!

எஸ். வைத்தியநாதன், கௌரிவாக்கம். செப்டம்பர் 6 — 12; 1991.

**உங்களை மிகவும் கவர்ந்த வாசகர் யார்?**

'அம்முலு சோனு' யாரை ரொம்ப பிடிச்சிருக்குன்னு ரெண்டு வாரம் முன்னால ஒரு வாசகர் கேள்வி கேட்ட மாதிரி இருக்கு நீங்க கேக்கறது. எல்லா வாசகர்களுமே என் பாசத்துக்குரியவர்கள்தான்.

எம். சக்திவேல், மதுரை — 16. செப்டம்பர் 6 — 12; 1991.

**மேல்நாடுகளைப் போல் நாமும் — ஆணும், பெண்ணும் கை குலுக்கினால் தவறா?**



"மனிதர்கள் சில புலன்களின் உணர்வுகளால் பாதிக்கப்படுபவர்கள். நாக்கு ருசி, பார்வை, கேட்பது, நுகர்வது, தொடுவது (ஸ்பரிசம்) போன்றவை புலன் இன்பங்கள். இவற்றில் கையால் தொடுகிற உணர்வுதான் செக்ஸ் வேகத்தை ஏற்படுத்தக்கூடிய சக்தி வாய்ந்த ஆயுதம். நம் முன்னோர்கள் ஆணும், பெண்ணும் கைகுலுக்கிக் கொள்வதை அனுமதிக்காமல் 'நமஸ்காரம்' என்றோ, 'வணக்கம்' என்றோ கும்பிடும் வழக்கத்தை ஏற்படுத்தினார்கள்."

எம். முத்துசாமி, அரகண்டநல்லூர். செப்டம்பர் 6 — 12; 1991.

**மனைவியை ஒரு நாளைக்கு எத்தனை முறை முத்தமிடலாம்?**

சமீபத்துல நடந்த ஒரு நிகழ்ச்சி.

'மோல்'ன்னு ஒரு கனடா நாட்டுக்காரர். ஏழை, எளியவர்களுக்கு அங்கங்கே பணம் திரட்டி உதவி பண்றவரு. திடீர்ன்னு ஒருநாள் பத்திரிகையில ஒரு விளம்பரம் கொடுத்தாரு.



"ஒரு நல்ல காரியத்துக்கு எனக்கு பணம் தேவைப்படுது. அதனால இத்தனாம் தேதி, இன்ன இடத்துல நான் பப்ளிக்கா நிக்கறேன்.. ஒரு டாலர் கொடுத்துட்டு, என்னை யார் வேணும்னாலும் முத்தமிடலாம்"

இதைப் படிச்ச பல பேர், ஒரு ஆம்பளைக்கு போய் யார் முத்தம் வைப்பாங்க? ஆனாலும் இந்த ஆளுக்கு இப்படி ஒரு ஆசையான்னு நினைச்சாங்க.

ஆனா, அன்னைக்கு அவருக்கு 8 மணி நேரத்துல் 3069 டாலர் வசூல் ஆச்சு! அதாவது, 3069 பேர் அவருக்கு முத்தம் கொடுத்தாங்க!

முத்தம் அவ்வளவு கொடுத்தே அவருக்கு ஒண்ணும் ஆகலை. அதனால நீங்க பயப்பட வேண்டாம். நான் ஒரு நாளைக்கு 15, 20 முத்தம் குழந்தைகளுக்கு.மனைவிக்கு... இரண்டோ, மூணோதான்!

ஏ. ரெங்கநாயகி, திருநெல்வேலி. செப்டம்பர் 6 – 12; 1991.

**தந்தை பெரியாருக்கு முன்னால் சாதிப் பிரச்சனைக்காக தீவிரமாக போராடியவர்கள் யார்?**

ஔவையார்!

"சாதி இரண்டொழிய வேறில்லை. இட்டார் பெரியோர், இடாதோர் சிறியோர்"ன்னு எப்பவோ இப்படி பாடிட்டாங்களே!

கோ. இஸ்மாயில். ஒட்டன்சத்திரம். செப்டம்பர் 6 – 12; 1991.

**'கண்ணீர் அஞ்சலி' என்று சிலர் கடிதம் எழுதுகிறார்களே.. துக்கம் கண்ணீராக வருவது சரி... காகிதத்தில் எழுத்தாக வருவது சரியா?**

நாதஸ்வர சக்கரவர்த்தி ராஜரத்தினம் பிள்ளை தோடி ராகத்தை வாசிச்சா கேட்டுட்டே இருக்கலாமாம். அவ்வளவு லயிப்பும், ஈர்ப்பும் அதுல இருக்குமாம்.

அவர் இறந்துட்டார்ன்னு கண்ணதாசன் சார்கிட்டே சொன்னதும் உதவியாளரை கூப்புட்டு, ஒரு பேப்பரை எடுத்து எழுதுன்னு சொல்லிட்டு கண்ணீரோட,

**'செவியினில் ஓடி**
**எங்கள் சிந்தையில் ஓடி**
**இந்தப் புவியெல்லாம் ஓடி**



நின்பால் பொங்கிய தோடி
வேறெங்கெவரிடம் போகும்?'ன்னு

சொல்லி அழ, எழுத ஆரம்பிச்சவரும் அழுதாராம்!

'ஐயையோ! எங்களையெல்லாம் விட்டுட்டுப் போயிட்டீங்களே...'ன்னு குடும்பத்தார் அழுதது ஒருவிதம்னா, கவிஞர் அழுதது இன்னொரு விதம்.

ஆக, உணர்வுல ரெண்டும் ஒண்ணுதான்!

எஸ். பார்த்திபன், புதுக்கோட்டை—2. செப்டம்பர் 6 — 12; 1991.

**அடி உதவற மாதிரி அண்ணன் தம்பி கூட உதவ மாட்டான்' இது பழமொழி. அப்படியானால், ஒரு மனிதனைத் திருத்துவது அடியா?**

சில பழிமொழிகள் சில சூழ்நிலைகளுக்குத்தான் பொருந்தும்.

நீங்க குறிப்பிட்ட பழமொழியை ஒரு மனிதனைத் திருத்தறதுக்கு எடுத்துக்கக்கூடாது. சில ஆத்மார்த்தமான அன்பு, பாசம்தான் மனிதனைத் திருத்தும். உதாரணத்துக்கு நம்ம ஊர்லயே நடந்த ஒரு கோர்ட் கேஸ்.

ஒரு அப்பா. ஆறு பிள்ளைகள். ஆறு பேருக்கும் சொத்தைப் பிரிச்சுக் கொடுத்துட்டாரு. ஆனா, அவரை சாப்பாட்டுக்கு இல்லாம தவிக்க விட்டுட்டாங்க. அப்பா கோர்ட்டுக்குப் போய், புள்ளைங்க மேல கேஸ் போட்டாரு.

"உங்களுக்கு மாதம் எவ்வளவு தேவைப்படும்?"ன்னு நீதிபதி கேட்டாரு.

"1000 ரூபாய்"ன்னு அப்பா சொல்ல, நீதிபதி,

"ஒரு ஆளுக்கு சாப்பாட்டுக்கு ஆயிரமா?"ன்னு கேட்டாரு.



அதுக்கு அப்பா, "என் சாப்பாட்டுக்கு மீறிப் போனா இருநூறோ முன்னூறோதான் ஆகும். மீதிக்காசை எனக்கு பொறக்கப் போற பேரக் குழந்தைகளுக்கு ஏதாவது செய்ய சேர்த்து வைக்கணும்"ன்னாரு. பசங்க அழுது, அப்பா காலை புடிக்க, கேஸ் வாபஸ் ஆயிருச்சு!

எம். ஜெகன்னாதன், திருச்சி—4. செப்டம்பர் 6 – 12; 1991.

**பெண்களை 'வலது காலை எடுத்து வைத்து வா' என்று சொல்வதற்கு ஏதாவது காரணம் இருக்கிறதா?**

அண்டவெளியில உலகம் வலது புறமாத்தான் சுத்துது. அதனால, உலகத்தோட ஒட்டி, குடும்பத்து நாயகியா செல்படணும்ன்னு 'வலது காலை எடுத்து வச்சு வா'ன்னு ஏதோ ஒரு அறிவியல் குறிப்புல படிச்சதா ஞாபகம்.

அயன்புரம் சிவாஜிபாபு, சென்னை—23. செப்டம்பர் 6 – 12; 1991

**குழந்தைகள் தங்களை 'அம்மா, அப்பா' என்று அழைப்பதை விட, 'மம்மி, டாடி' என்று அழைப்பதில் பெற்றோர் பெருமை கொள்வது ஏன்?**

ஆங்கில அறிவு இருந்தாத்தான் வேலை கிடைக்கும். அப்பதான் பிழைக்க முடியும்ங்கறது நாட்டு சூழ்நிலை. அந்த சூழ்நிலைதான் 'மம்மி, டாடி'ங்கற பாதிப்பை ஏற்படுத்தி இருக்குங்கறது என் தனிப்பட்ட அபிப்ராயம்.

ஜேம்ஸ், கடலூர். செப்டம்பர் 6 – 12; 1991.

**மனைவியிடம் சந்தோஷமாக இருக்க பகல், இரவு என்று கணக்கு உண்டா?**

இரவு, பகல் கணக்கு இருக்கோ என்னவோ, மனோநிலையில் கணக்கு உண்டுங்கறது என் அபிப்ராயம்.



ஒருத்தர் ஏதோ பிரச்னையில மண்டையை பிச்சுக்க, இன்னொருத்தர் 'இதை' ஒரு பிரச்னையா நினைச்சு இழுத்தா, அது அவ்வளவு சுவாரஸ்யமா இருக்காது. அதோட, இந்த பிரச்சனை, பிறக்கப் போற குழந்தைகளைக் கூட பாதிக்கும்ன்னு ஒரு கதை இருக்கு.

ஒரு முனிவர் அதிகாலை நேரம் பூஜை, புனஸ்காரத்துல மூழ்கியிருக்க அவர் சம்சாரத்துக்கு சந்தோஷமா இருக்கணும்ங்கற மூடு வந்துருச்சு. 'வா, வா'ன்னு கூப்புட, முனிவர்,

"அம்மா.. இது பூத கணங்கள் ஆட்சி நடத்தற வேளை. கொஞ்சம்

உலகில் கடுமையான வேலை இருக்கிறதென்றால், அது சும்மா இருப்பதுதான்.

நஹோர் தாரீ வாலா

கி. தினகரன்.

கோபத்தோடு எழுந்திருப்பவன், நஷ்டத்தோடு உட்காருவான்.

ருமேனிய பழமொழி!

ஆர். சுப்ரமணியன்.

சட்டத்திற்கு உட்பட்டு அமையும் சுதந்திரமே உண்மையான சுதந்திரம்.

பர்டன்

சீர்காழி எஸ். மகேஷ்பாபு.

பிறருக்கு சொந்தமானதை அவர்களுக்கே அளிப்பதில் இடைவிடாமல் காட்டும் ஆர்வமே நீதி.

ஜெண்டினியன்

தேவிமனோ.

பணம் சேர்ப்பவன் ஒருபோதும் களைப்படைய மாட்டான். களைப்படைகிறவன் ஒருபோதும் பணம் சேர்க்க மாட்டான்.

ராட் கினிப்

ஏ. நிஷான் ஷலீம்.

எதிரியின் பலத்தைப் பற்றியே சிந்தித்தாலும், அதை உன் செயலுக்கும் ஆதரவாக உபயோகிக்க சிந்தி!

டி. பழனிக்குமார்.

விட்டுக் கொடுக்க நினைப்பவன் கெட்டுப் போவதில்லை, கெட்டுப் போக நினைப்பவன் விட்டுக் கொடுப்பதில்லை.

(கேரளாவில் ஒரு டீக்கடையில் எழுதியிருந்த வாசகம்)

ஆர். அண்ணாமலை.

சகோதரர்களாக இருங்கள். ஆனால் கணக்கு வைத்துக் கொள்ளுங்கள்.

அரேபியப் பழமொழி

எம். மணி.



பொறு"ன்னாரு. சம்சாரம் 'முடியாது'ன்னு முனிவரை குடிசைக்குள்ள இழுத்துட்டாங்க!

அதுல பொறந்த ரெண்டு குழந்தைகளும் பயங்கர அசுரர்களா மாற, அப்புறம் பகவான், வராக (பன்றி) அவதாரம் எடுத்து ஒண்ணையும் நரசிம்ம அவதாரம் எடுத்து இன்னொண்ணையும் கொன்னு மோட்சம் கொடுத்தாராம்.

எம். அப்துல், விழுப்புரம். செப்டம்பர் 6 – 12; 1991.

**எங்கேயோ இருந்து கொண்டு நாங்கள் உயிரை விட்டு உங்களுக்கு கடிதங்களை எழுதுகிறோம். நீங்கள் படிப்பதுண்டா?**



மேகம் எங்கேயோ இருக்கு... மயில் தோகை விரிக்குது.

சூரியன் எங்கயோ இருக்கு. தாமரை மலருது.

சந்திரன் எங்கயோ இருக்கு. அல்லி மலருது.

ரசிகர்கள், வாசகர்கள் நீங்க எங்கேயோ இருக்கீங்க... ஆனா, உங்க கடிதங்களாலே என்னை மாதிரி கலைஞர்கள், ஆசிரியர்கள் நெஞ்சு குளிருது.

இதைவிட எங்களுக்கு ஆனந்தம் வேற என்னங்க இருக்க முடியும்?

ஏ. ராணி, நெய்க்காரப்பட்டி. செப்டம்பர் 13 – 19; 1991.

**லட்சியக் கணவன் எப்படி இருக்க வேண்டும்?**



பிரபல ஆங்கில நாவலாசிரியரான மேரி கொரேல்லிங்கற அம்மா திருமணம் செய்துக்கலை. ஏன்னு கேட்டாங்க. அதுக்கு அந்தம்மா,

"நான் நாய் வளர்க்கிறேன். கிளி வளர்க்கிறேன். பூனை வளர்க்கிறேன். இந்த மூணும், கணவன் செய்யற காரியங்களைச் செய்துடுது. அப்புறம் ஏன்

திருமணம்?'ன்னாங்க!

"அப்படின்னா?"

"நாய் காலைல குரைக்குது. கிளி பகலெல்லாம் கத்துது. பூனை ராத்திரியானா திருட்டுத்தனமா வெளிய போயிட்டு வருது. இதைத்தானே ஒரு புருஷன் செய்வான்!"னு சொன்னாங்க.

அதனால இப்படி எந்தப் பொண்ணும் சொல்றதுக்கு வம்பில்லாம நடந்துட்டா, அவன் லட்சியக் கணவன்!

ஜி.ராமதுரை. காங்கேயம். செப்டம்பர் 13 — 19; 1991.

**பணத்திற்கும், குணத்திற்கும் என்ன வித்தியாசம்? அல்லது எதற்கு மரியாதை அதிகம்?**

பணத்தை நாம பாதுகாக்கணும். ஆனா, குணம் நம்மளை பாதுகாக்கும்.

பணம் வச்சிருக்கறவனுக்கு எதிரிகள் அதிகம். குணம் உள்ளவனுக்கு நண்பர்கள் அதிகம்.

பணம் செலவு பண்ணப் பண்ண குறையும். குணத்தை செலவு பண்ண, மரியாதை பெருகும்.

பணத்தை எண்ண முடியும். குணம் உள்ளவனோட மதிப்பு எல்லையில்லாதது.

பி. குமார். சேலம் — 60. செப்டம்பர் 13 — 19; 1991.

**ஒரு குடும்பத்தில் கணவரின் கடமை என்ன? மனைவியின் கடமை என்ன?**

அனுசரித்துப் போவது... அனுசரித்துப் போவது!

லலிதா ராமநாதன். திருச்சி—1. செப்டம்பர் 13 — 19; 1991.

**ஒரு திரைப்பட வெற்றியில் ஒரு நடிகரின் பங்கு என்ன?**

லூயி பாஸ்டர். நோய்க் கிருமிகளைக் கண்டுபிடித்த மேதை. அவரோட வாழ்க்கை வரலாற்றை படமா எடுத்தாங்க.

'பால்முனி'ன்னு ஒரு ஹாலிவுட் நடிகர்தான் லூயி பாஸ்டரா நடிச்சுட்டிருந்தாங்க.



படத்தில் ஒரு சிச்சுவேஷன். பாஸ்டருக்கு நோபல் பரிசு வருது. அதை வாங்கும்போது யார் யாருக்கு எப்படி நன்றி தெரிவிச்சுப் பேசணும்னு கதாசிரியர், வசனகர்த்தா, இயக்குனர் மூணு பேரும் 'டிஸ்கஸ்' பண்ணி, கிட்டத்தட்ட ஒரு பக்க அளவு ஒரு வசனத்தைக் கொடுக்க, வாங்கிப் பார்த்த பால்முனி,

"இந்த இடத்தில் நான் வேற மாதிரி பேசறேன். நேரா டேக்குக்கே போகலாம்"ன்னாரு.

ஷூட்டிங் தொடங்கிச்சு.

பரிசை வாங்கின பால்முனி, மைக் அருகே வர்றாரு. ஷாட் க்ளோசப்பா படமாகுது. பால்முனி கனிவா பாக்கறார்.

அப்புறம் ஏதோ பேச முயற்சிக்கிறார். உதடுகள் துடிக்குது. ஆனா, பேச முடியலை. கண்ணீர் மாலையா பொங்குது. அங்கே இருந்த டைரக்டர் 'ஓ.கே.' சொல்லி அவரை கட்டிப்பிடிச்சு பாராட்டினாரு.

குறிப்பிட்ட படத்துல 'பால்முனி மிகச் சிறப்பா நடிச்சது இந்த காட்சியிலதான்'னு உலகம் முழுவதும் விமர்சனங்கள் எழுதினாங்க.

எஸ். பத்மினி, அரக்கோணம். செப்டம்பர் 13 – 19; 1991.



**வெளிநாட்டிலும் பெண்கள் வீட்டில் 'வாசல் தெளித்து' கோலம் போடும் பழக்கம் உண்டா?**

நமக்கு பெரியவங்க நமக்கு ஏற்படுத்தியிருக்கும் சாஸ்திர சம்பிரதாயங்கள் எல்லாமே ஒரு விஞ்ஞானப் பின்னணியில் அமைஞ்சு இருக்கிறதா இப்போ கண்டுபிடிச்சிருக்காங்க.

விடியற்காலை நேரத்துல வீசற காத்துல கலந்திருக்கிற 'ஓசோன்' சக்தியை சுவாசிப்பது ஆரோக்கியமானது. பழைய காலத்துல பெண்கள் அதிகமா வீட்டுக்கு வெளியே வருவதில்லை.

அதனால பெண்களை சாணி தெளிக்கிற சாக்கிலும், கோலம் போட்ற சாக்கிலும் அந்த விடியற்காலை நேரத்துல வீதிக்கு வரச் செஞ்சாங்களாம் பெரியவங்க.

மேல் நாடுகள்லதான் பெண்களுக்கு வெளியே வர்றதுல சர்வ சுதந்திரமும் இருக்கே! அதனால வாசல் தெளிப்பு, கோலம் என் கண்ணுக்கு அகப்பட்டவை.



பி.டி. ஊமைத்துரை, ஆபாளையம். செப்டம்பர் 13 – 19; 1991.

**பெத்த புள்ளை உசத்தியா? வளர்ப்பு பிள்ளை உசத்தியா?**

ரெண்டு பேரையும் ஒரே மாதிரி நடத்தற அம்மா, அப்பாதான் உசத்தி!

எம். சக்திவேல், மதுரை—16. செப்டம்பர் 13 – 19; 1991.

**'எல்லாம் கால நேரம்' என்கிறார்களே... அது என்ன?**

ரஷ்யாவில் கம்யூனிஸப் புரட்சியைக் கொண்டு வந்த லெனின், கிரெம்ளின் மாளிகையில ஓட் கஞ்சி (நம்மூர் கேப்பைக் கூழ் மாதிரி) குடிச்சிட்டிருந்தாரு.

"இந்த மாளிகையில் இருந்துட்டு, தரையில உட்கார்ந்து கஞ்சி குடிக்கறீங்களே?"ன்னு ஆச்சரியமா கேட்டாங்க.

அதுக்கு லெனின், "என்று என் மக்கள் ரொட்டி சாப்பிட்றாங்களோ, அப்போதான் நானும் ரொட்டி சாப்பிடுவேன்"னு சொன்னாராம். இன்னைக்கு அதே லெனின் சிலையை கீழே தள்ளி, காலால மிதிக்கற காட்சி பத்திரிகையில வெளியாகியிருக்கறதைப் பார்க்கறப்போ, 'இதுதான் கால நேரம்'ன்னு தோணுச்சு.

திருமாவளவன், சேலம்.

**வாழ்க்கைத் துணையை தேர்ந்தெடுக்கும போது எந்த அம்சத்தில் அதிக கவனம் தேவை?**

கடைசி வரைக்கும் இவளை கண் கலங்காம காப்பாத்தணும்ங்கற அம்சத்துலதாங்க அதிக கவனம் தேவை.

நெல்சன், திருநெல்வேலி. செப்டம்பர் 13 – 19; 1991.

**செக்ஸ் எதில் இருக்கிறது? ஒரு பெண்ணின் கண்களிலா, உதட்டிலா, அல்லது... லா?**

"ஒருவன் கண்ணுக்கு ரதியைப் போல் தோன்றும் ஒரு பெண், இன்னொருவன் கண்ணுக்கு அருவருப்பாக காட்சி அளிக்கிறாள். ஒருவன் ரசிக்கும் மாமிச உணவை இன்னொருவன் பார்க்கவே அசிங்கப்படறான். சிகரெட் பிடிக்கும்போது ஒருவன் அடையும் ஆனந்தம், அருகில் இருக்கும் இன்னொருவனுக்கு வயிற்றைக் குமட்டி எடுக்கிறது.

ஆக, இந்த ரசனைக்கெல்லாம் காரணம் எதிரே உள்ள விஷயங்கள்

அல்ல. ஒவ்வொருவனின் மனம்தான். மனம் சோர்வாக இருந்தால் அழகான மனைவியிடமும் ஈடுபாடு ஏற்படுவதில்லை. உற்சாகமான மனநிலையில் இருக்கும் போது, வெறும் ரசம் சாதம் கூட ருசியாக இருக்கிறது!"

*இப்படிக்கு சுவாமி சின்மயானந்தர்*

ஜி. வெங்கடேஷ், சென்னை—33. செப்டம்பர் 13 – 19, 1991.

**இந்த உலகத்தில் மனிதன் மிகவும் விரும்புவது, வெறுப்பது எது?**



இரண்டுக்குமே ஒரே பதில்தாங்க. 'வாழ்க்கை'யை!

எஸ். குருசாமி, திண்டுக்கல். செப்டம்பர் 20 – 26, 1991.

**'தாய் எட்டடி பாய்ந்தால், குட்டி பதினாறு அடி பாயும்' பாய்ஞ்சிருக்கா?**

கர்நாடக தேசத்தில் நடந்த கதை ஒண்ணு.

மன்னர் விஷ்ணுவர்த்தனர் கட்டளைப்படி சிற்பி ஜக்கணாச்சாரியர், குடும்பத்தை விட்டு 200 மைல் தொலைவிலுள்ள பேலூருக்கு வந்து, 15 வருஷங்களா பல சிற்பிகள் துணையோட விஜயநாராயணர் ஆலயத்தை கட்டி, சுவாமி சிலையும் செய்து, கும்பாபிஷேகம் செய்ய நாளும் குறிச்சாரு.

இதற்கிடையில் ஜக்கணாச்சாரியாரோட மகன் பிறந்ததுல இருந்து அப்பா முகத்தையே பார்க்காம வளர்ந்திருந்தான். அவனும் சிற்ப சாஸ்திரம் பயின்றவன். அப்பாவைப் பார்க்கிற ஆவல்ல பேலூருக்கு புறப்பட்டு வந்தான். அப்பாவைப் பார்க்கறதுக்கு முன்னால தற்செயலா அவர் செய்த சிலையைப் பார்த்தும், அது அப்பா செய்த சிலைன்னு தெரிஞ்சும், "இந்தச் சிலை அற்புதமா அமைஞ்சிருந்தாலும், தோஷமுள்ள கல்லில் அமைக்கப்பட்டிருக்கு"ன்னான்.

பையன் பேச்சைக் கேட்ட எல்லாருக்கும் அதிர்ச்சி. தலைமைச் சிற்பி ஜக்கணாச்சாரியாரும், மன்னரும் அவன் சொன்ன குறையை அலட்சியப்படுத்தாம "சொன்னதை நிரூபி"ன்னாங்க.

உடனே பையன் ஒரு சிறு உளியை எடுத்து, சிலையோட ஒரு பகுதியில தட்டினான். அதுக்குள்ளிருந்து மணலும், தேரை ஒண்ணும் வெளியே வந்தது.

அப்பதான் தலைமை சிற்பிக்கே தெரிய வந்தது தன் மகன்கிறதும், 'குட்டி பதினாறு அடி பாய்ஞ்ச' சந்தோஷமும் கிடைச்சது!

எஸ். கமலா, புதுக்கோட்டை. செப்டம்பர் 20 – 26, 1991.

**பிறர் நம் பேச்சை மதித்துக் கேட்க வேண்டுமானால், என்ன செய்ய வேண்டும்?**

'நன்றாகத் தெரிந்ததைப் பற்றி மட்டும் விவாதம் செய். பிறர் அபிப்ராயங்களையும் செவி கொடுத்து மதிக்க கற்றுக் கொள். உன் முடிவுகளை பிறர் மேல் திணிக்காதே. எதையும் அன்போடும், இனிமையாகவும் சொல். உன் பேச்சைக் கேட்க ஒவ்வொருவரும் துடிப்பார்கள்'

*– ஒரு மேதை சொன்னது.*

எம். சிவகாமி, திருப்பூர். செப்டம்பர் 20 – 26: 1991.

**'அஷ்ட கோணலாக முகம் மாறியது' என்று சில எழுத்தாளர்கள் வர்ணிக்கிறார்களே... அப்படி முகம் மாறுமா?**

என்னோட ஃபேவரிட் ரியாக்ஷனே அதாங்க!

'சின்ன வீடு' படத்துல நான் சம்சாரத்துகிட்டே, "நீ எம்.காம்.. நான் பி.காம்ன்னா உன் தம்பி என்னை ஒரு மாதிரி பார்ப்பான். அதனால உன தம்பிகிட்ட நானும் எம்.காம்ன்னு சொல்லிரு"ன்னு சொல்லிட்டு நான் திரும்புவேன். தம்பி பக்கத்துலயே நின்னுட்டிருப்பான். அப்ப என் முகத்துல நீங்க கேட்ட ரியாக்ஷன் வரும்!



இதே மாதிரி ஒரு நிஜ நிகழ்ச்சி.

பிரிட்டீஷ் எட்டாவது எட்வர்ட் மன்னர் பேரக் குழந்தைகளோட உட்கார்ந்து டைனிங் டேபிள்ல சாப்டுட்டிருந்தாரு. ஒரு பேரக் குழந்தை கொஞ்சம் வாயாடி! சதா ஏதாவது பேசிட்டே இருப்பான். மன்னர் சாப்பிட ஆரம்பிச்சதும் பேரன் ஏதோ பேச வாயெடுத்தான். மன்னர் ரொம்ப கண்டிப்பானவர்.

"இதோ பார் ஆல்பர்ட்! சாப்பாட்டு டேபிள்ல பேச்சே இருக்கக்கூடாது. அது ராஜ குடும்பத்துல அநாகரீகமான விஷயம். சாப்பிடு. அப்புறம் பேசுவோம்"ன்னாரு.

அமைதியா சாப்புட்டதுக்கப்புறம் எழுந்தவர், 'அப்பவே என்னமோ சொல்ல வந்தியே... என்ன அது?"ன்னு கேட்க,

பையன், "இனி அதைச் சொல்லி புண்ணியமில்லை"ன்னான்.

மன்னர், "பரவாயில்லை. சொல்லு"ன்னாரு.

பையன் கூலா, "நீங்க சாப்பிட்ட பிளேட்ல ஒரு பூச்சி செத்துக் கிடந்தது. அதைத்தான் சொல்ல வந்தேன். நீங்க என்னையும் அடக்கிட்டு சாப்பாட்டோட பூச்சியையும் முழுங்கிட்டீங்க!"ன்னான்.

அப்ப மன்னர் முகம் நீங்க கேட்ட ரியாக்ஷன்ல மாறியிருக்காதா?

சரவணன், கோவை – 17. செப்டம்பர் 20 – 26; 1991.

**வட்டிக்கு விடுவது தப்பா?**



ஆஞ்சநேயர், மூலிகை பேரை மறந்ததால, சஞ்சீவி மலையையே தூக்கிட்டு வந்தாரு. ஆனா, முதல் தடவை மலையை தேட்றதே பெரிய பிரச்னையாகி, லேட்டா தூக்கிட்டு வந்தாராம்.

ரெண்டாவது தடவை, போன வேகத்துலயே தூக்கிட்டு வந்தாராம். அதை கம்பர் குறிப்பிட்றப்போ, "அடகுக் கடையில் பல பொருட்களுக்கு இடையில் ஒரு குறிப்பிட்ட பொருளை, அதில் குறிப்பிடப்பட்டிருக்கும் எண்ணை அடையாளம் வைத்து எடுத்து விடுவது போல் ஆஞ்சநேயர் சஞ்சீவி மலைக்கு ஏற்கனவே அடையாளம் இட்டு வைத்ததால், உடனே எடுத்து வந்து விட்டார்"ன்னு சொல்றாரு.

அதனால, அடகு, வட்டி காலம் காலமா இருக்குன்னு தெரியுது. ஆனா, தப்பு ரைட்டுங்கறது அவங்கவங்க கஷ்டத்தைப் பொறுத்து அபிப்பிராயம் சொல்லுவாங்க.

த. சரவணன், மதுக்கூர். செப்டம்பர் 20 – 26; 1991.

**சீதை போன்ற பெண்களை இக்காலத்தில் காண முடிவதில்லையே... ஏன்?**

எனக்கு டௌரி வேண்டாம். உனக்காக வில்லை ஒடிக்கறேன்னு நீங்க சொல்லுங்க. ஆயிரம் சீதையை நான் காட்றேன்!

வத்சலா, அரக்கோணம். செப்டம்பர் 20 – 26; 1991.

**பணத்தை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று விழித்த அனுபவம் உண்டா?**

நீங்க வேறே! இடம் மாறி கேட்டுட்டீங்க. நாம இன்னும் தட்டுப்பாட்லதாங்க இருக்கறோம். 'விரலுக்குத் தகுந்த வீக்கம்'ன்னு சொல்வாங்களே... அதுதான் நம்ம சூழ்நிலை. வேற ஒருத்தர் முழிச்ச அனுபவத்தைச் சொல்றேன்.



'சாமர்ஸெட் மாம்' உலகப் புகழ்பெற்ற எழுத்தாளர். அவரோட புத்தகங்களுக்கு பல நாடுகள்லேர்ந்தும் ராயல்டி வரும்.

ஒரு தடவை ஸ்பெயின் நாட்லேர்ந்து பெருந்தொகை வர வேண்டியிருந்தது. ஆனா, அதை ஸ்பெயின் நாட்டுக்குள்ளிருந்து வெளியே கொண்டு வர முடியாத சூழ்நிலை. அதனால ஸ்பெயின் நாட்டுக்கே போய் அங்க தங்கி, ஓய்வெடுத்து அதை செலவழிக்க திட்டமிட்டு, அங்குள்ள ஒரு ஓட்டல்ல போய் தங்கினாரு எழுத்தாளர்.

தன் ராயல்டி அளவுக்கு பில் ஆனதும், ஓட்டலை காலி செய்துட்டு, பணம் நீட்டினா, ஓட்டல் முதலாளி,

"எங்கள் ஓட்டலில் நீங்கள் தங்கியதில் எங்களுக்குத்தானே விளம்பரம்!"ன்னு சொல்லி, பணத்தை வாங்க மறுக்க...

நீங்க சொன்ன மாதிரி, "இனி என்ன பண்றது?"ன்னு தெரியாம முழிச்சாரு!

ஜி. மணிகண்டன், தேனி. செப்டம்பர் 20 – 26; 1991.

**மேல்நாட்டில் ஜாதிப் பிரச்னைகள் உண்டா?**

சாதனைகளை உருவாக்கிக் காட்றவங்க முதல் ஜாதி, சாதனைகளை வேடிக்கை பார்த்துட்டிருக்கறவங்க இரண்டாவது ஜாதி. உலகத்துல என்ன நடக்குதுன்னே தெரியாம வாழ்றவங்க மூணாவது ஜாதி.

இந்த ஜாதிப் பிரச்னை எல்லா நாட்லயும் உண்டுங்க!



சிவக்குமார், பொள்ளாச்சி. செப்டம்பர் 20 – 26; 1991.

**'சாக்கு போக்கு சொன்னாலும் சாமர்த்தியமாக சொல்லவும்' — ஒரு உதாரணம் ப்ளீஸ்?**

காங்கிரஸ்காரரா இருந்த ராஜாஜி, அந்தக் கட்சியை விட்டு வெளியேறி, அதுக்கு எதிரா மாற்றுக் கட்சிகளை இணைச்சு தேர்தல்ல மோதினாரு.

அப்போ ஒரு மூத்த பத்திரிகையாளர், ராஜாஜிகிட்ட,

"சென்ற ஆண்டு ஆதரித்த கட்சியை இந்த ஆண்டு அகற்ற எண்ணியது ஏன்? தங்களுக்கு

நிலையான கொள்கை இல்லை என்று ஆகிவிடாதா?"ன்னு கேட்டாரு.

அதுக்கு நம்ம ஆளு, "சென்ற ஆண்டு வரை எனக்குப் பொருத்தமாக இருந்த சட்டை, இந்த ஆண்டு சின்னதாக சுருங்கி விட்டதால், நான் புதுச்சட்டை தைத்துக் கொண்டேன். இதிலென்ன தப்பு?"ன்னு சாமர்த்தியமா சமாளிச்சாராம்.

பெ. சுப்பிரமணியன், பெரியபனங்காடு. செப்டம்பர் 20 – 26: 1991.

**பெண்களின் கற்பு எதில் உள்ளது — உடம்பிலா, உள்ளத்திலா?**

ஆம்பளைங்க யோக்கியமா இருக்கறதுலதாங்க இருக்கு.

நாராயணன், எ.வி.எம். காலனி. செப்டம்பர் 20 – 26: 1991.

**சென்சார் இல்லா விட்டால் சினிமாவின் தரம் எப்படி இருக்கும்?**

உதாரணத்துக்கு ஒரு சீன்.

ஒரு ரெண்டாம் கிளாஸ் பையனை வாத்தியார்,

"4ம், 3ம் எவ்வளவுடா?"ன்னாரு.

பையன் எந்திரிச்சு நின்னு, வலது கைல 4 விரலை நீட்டி, இடது கைல மூணு விரலை நீட்டி ஒவ்வொரு விரலா தொட்டு, '5, 6, 7'ன்னான்.

வாத்தியார், "டேய், விரலைத் தொட்டு கூட்டக் கூடாது. கையை பின்னால கட்டு"ன்னாரு.

பையன் கட்டிட்டான்.

"5ம் 4ம் எவ்வளவு?"ன்னாரு.

பையன், பின்னால கட்டியிருந்தபடியே நைசா விரலைத் தொட்டுத் தொட்டு, '6, 7, 8, 9'ன்னான்.

வாத்தியாருக்கு கோபம். பின்னாலயும் விரல் நீட்டி தொட்றான்னு, 'ரெண்டு கையையும் பாக்கெட்ல விட்றா'ன்னாரு.

பையன் டவுசர்ல ரெண்டு சைட்லயும் ரெண்டு பாக்கெட்ல கையை விட்டுட்டான்.

இப்ப வாத்தியார், "5ம் 5ம் எத்தனை?"ன்னாரு.

பையன் ரகசியமா உள்ளேயே எண்ண ஆரம்பிச்சு, "11"ன்னான்!

புரிஞ்சதுங்களா? சென்சார் இல்லாட்டி, சினிமா இப்படியெல்லாம் போயிரும்!

பி.கு: இது நம்ம சீன் இல்லை. டைரக்டர் சுந்தர்ராஜன் சொன்னது.

ஜீவானந்தம், தஞ்சாவூர்—4, செப்டம்பர் 20 – 26, 1991.

**பண்பாடு காப்பது எப்படி?**

அகலிகை, இந்திரன்கிட்டே ஏமாந்த சமாச்சாரம் வால்மீகி ராமாயணத்திலயும் வருது. கம்ப ராமாயணத்துலயும் வருது.

வால்மீகி எழுதினதுல, தன் கணவன் வேடத்தில் வந்தவன் இந்திரன்னு அகலிகைக்கு தெரிஞ்சும், தேவேந்திரனே தன்னைத் தேடி வந்திருக்கிறான்ங்கற குதூகலத்துல அவனோட கூட்றதுக்கு சித்தமானாள்ன்னு எழுதி, கூடிய பின்னால, (தேவர்கோனே! கிருதார தாஸ்மி') "காரியம் நிறைவேறப் பெற்றேன். அவர் வரப் போகிறார். விரைவில் போய்விடும்"ன்னு சொல்ல, தேவேந்திரன் அவளைப் பார்த்து, ('அடி சுச்ரோணி! பரி துஷ்டோஸ்மி) "சிறந்த பின் பாகத்தை உடையவளே! உன்னால் நன்கு மகிழ்ச்சி அடைந்தேன்"னு சொல்லிட்டுப் போற மாதிரி எழுதியிருக்காரு!



(இதை மொழிபெயர்த்தவர் பிரபல நாவலாசிரியரான சாண்டில்யன்)

இதே காட்சியை கம்பன் எப்படி குறிப்பிட்றாரு தெரியுமா?

"இந்திரன் கௌதமர் வேடம் தரித்து வந்தான். முதலில் அவன் இந்திரன் என்று அகலிகை அறியவில்லை. பாதிக் கூடலில் அவன் இந்திரன் என்று உணர்ந்தாள். ஆனால், காம வேகத்தில் தாழ்ந்திருந்தாள்."ன்னு சொல்லியிருக்காரு.

அதாவது, ஒரு பெண்ணின் வீழ்ச்சியை கொச்சைப்படுத்தாம, முடிஞ்ச அளவு அனுதாபத்தோட எழுதி, கம்பன் பண்பாடு காத்திருக்காரு.

சி.பி. குயில் குமார், காரைக்குடி—2, செப்டம்பர் 20 – 26, 1991.

**ஒருவன் சினிமா அதிகம் பார்த்தால், கற்பனைக் கதை எழுத முடியுமா?**

சினிமாவும் பார்க்கணும். சுத்தி வரவும் பார்க்கணும்.

எ. தேவராஜ, திருநெல்வேலி, செப்டம்பர் 20 – 26, 1991.

**நான் விமானத்திலேயே பயணம் செய்ததில்லை. அது ஒரு குறையாக இருக்கிறது...**

ஒருத்தர் தென்னாப்பிரிக்கா, இங்கிலாந்து, எல்லாமே கப்பல்லதான் போனாரு. இந்தியா முழுக்க ரயில்லதான் சுத்தினாரு. கடைசி வரைக்கும் விமானமே ஏறலை. ஆனா அவர் ஃபேமஸ் ஆகி, 'காந்திஜி'ன்னு பேர்

வாங்கலையா? நீங்களும் குறையைப் பத்தி கவலைப்படாம, காந்திஜி மாதிரி பேர் வாங்க முயற்சி பண்ணுங்க!

விக்கிரமபுரம் ஸ்ரீனிவாசன், செப்டம்பர் 27 — அக்டோபர் 3; 1991.

**எதிரியை ஜெயிக்க சிம்பிளான வழி ஏதாவது இருக்கிறதா?**

“விஷத்தை விஷம் என்று கருதாமல், அமிர்தம் என்று எப்பொழுதும் எண்ணிக் கொண்டே இருப்பதனால் விஷமும் அமிர்தமாகி விடுகிறது. எப்போதும் நட்புறவோடு இருந்து வந்தால், நம் பகைவனும் நமக்கு நண்பனாகி விடுவான்!”

யோக வாசிட்டம்ன்னு ஒரு நீதி நூல் இப்படி சொல்லுது. இதைவிட சிம்பிளான வழி இருக்கற மாதிரி தெரியலை.

எம். குமார், ராமேஸ்வரம், செப்டம்பர் 27 — அக்டோபர் 3; 1991.

**‘இந்தியாவைப் பற்றி’ வெளிநாட்டினர் பெருமையாக ஏதாவது பேசுவதுண்டா?**



எல்லா தேசங்களும் கடைபிடிக்கத்தக்க சர்வதேச சட்டங்கள்ன்னு சிலது உண்டு. அதுல நிபுணரா விளங்கியவர் ஜோசப் பர்பர். அவருக்கு இந்தியா பேர்ல ரொம்ப மரியாதை உண்டு.

அவர்கிட்டே ஒரு ஆராய்ச்சி மாணவர், “உங்களுக்கு இந்தியா பேரில் இவ்வளவு சோகம் ஏன்?”னு கேட்டாரு. அதுக்கு அவர் ஒரு சம்பவத்தைச் சொன்னார்.

“ரெண்டாவது உலக யுத்த காலம். ஜெர்மனியின் தலைநகரான பெர்லினை எதிரிகள் குண்டு மழை பொழிஞ்சு தாக்கிட்டிருந்தாங்க. தரைக்கு அடியிலுள்ள பாதுகாப்பு அறை ஒன்றில் நான் நின்று கொண்டிருந்தேன். அப்போ ஒரு குண்டு, பாதுகாப்பு அறையின் மூலையில் விழுந்தது. அந்தப் பக்கமா இருந்தவங்க பதறியடிச்சு வெவ்வேற இடங்களுக்கு ஓடினாங்க. ஆனா ஒரு பெண் மாத்திரம் குண்டு விழுந்த இடத்தருகே நின்னுட்டிருந்தாங்க.

அவங்க முகத்துல பயமோ, பரபரப்போ இல்லை! ஓடவும் இல்லை. எனக்கு அது ஆச்சரியமா இருந்தது. அவங்ககிட்டே போய், ‘மேடம்... நீங்கள் பாதுகாப்பான இடத்தைத் தேடி ஓடாமல், இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?”ன்னு கேட்க, அந்தப் பெண், ‘ஜனங்கள் ஓடும்

வேகத்தை வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறேன்'னாங்க. 'ஏங்க மனதில் பயம் இல்லையா?'ன்னு கேட்டதுக்கு 'எனக்கு பயணம் தோணலை. ஏன்னா, நான் இந்தியாவின் பகவத் கீதை படிச்சிருக்கேன். அதனால மரணமும், வாழ்வும் ஒண்ணு போலத்தான் எனக்கு தோணுது'ன்னாங்க. எனக்கு பேராச்சர்யமாக இருந்தது. அதனாலேயே இந்தியாவுக்கு வந்து, இந்திய வேதங்களையும், சிறப்புகளையும் தெரிந்து கொண்டேன்"னு ஆராய்ச்சி மாணவருக்கு பதிலளிச்சாராம்!

அகிலாம்பாள், மதுரை. செப்டம்பர் 27 — அக்டோபர் 3; 1991.

**என் பையனுக்கு 17 வயதுதான். செய்யக்கூடாத தவறுகளை செய்கிறான். திருந்துவானா என்று பயமாக உள்ளது...**

காட்டாங்குளத்தூர் சிவானந்தா அனாதைகள் ஆஸ்ரமத்துக்கு 'ருத்ரா' பட பாட்டு படப்பிடிப்புக்கு போயிருந்தேன். ஷாட் இடைவெளியில ஆசிரம செகரட்டரி ரூம்ல உட்கார்ந்திட்டிருந்தப்போ, அங்கே சில புத்தகங்கள் இருந்தது. அதுல ஒண்ணு சுவாமி சிவானந்தா எழுதினது. மனித வாழ்க்கையைப் பத்தி ஒரே வரியில ஒரு தத்துவம் எழுதியிருந்தார். அவ்வளவு பிடிச்சிருந்தது!

'நேற்று பாவி... இன்று மகான்' — இதுதான் அது!

அதனால உங்க பையனைப் பத்தி கவலைப்படாதீங்க. பக்குவமா அன்போட மெல்ல மெல்ல தவறுகளை புரியற மாதிரி சுட்டிக் காட்டுங்க. பலன் கிடைக்கும்.

ராஜரத்தினம், வேலூர். செப்டம்பர் 27 — அக்டோபர் 3; 1991.

**'விளையும் பயிர் முளையிலே' இது உண்மையா?**

"நான் சின்ன வயசுல இந்தத் தெருவுலதான் பிச்சை எடுத்தேன். இதோ இந்தத் தெரு மூலையிலதான் நைட்ல குளிருக்கு ஒண்டிக் கிடப்பேன். இதோ இந்த பொந்து மாதிரி இருக்கறதுதான் என் வீடு. இந்த வீட்டுக்கு கூட வாடகை கொடுக்க முடியாததாலே கதவை வெளியே பூட்டிட்டு இதோ, பின்னால இந்த சந்து வழியா வீட்டுக்குள்ள பூந்து படுத்துக்குவேன். இதோ, இந்த சுவர் சந்து வழியா பார்த்தா அடுத்த வீட்டு பாத்ரூம்! தினம் அந்த வீட்டுப் பெண்கள் குளிக்கறதை இந்த சந்துலதான் பார்ப்பேன்"



லண்டன்லருந்து அமெரிக்காவுக்குப் போய்

உலகப் புகழ் வாங்கி, மறுபடியும் ஒருநாள் தன் பிறந்த ஊரான லண்டனுக்கு வந்த' சார்லி சாப்ளின் பத்திரிகைக்கு கொடுத்த பேட்டி இது!

எந்த முள் எப்படி பயிராகும்னு போகப் போகத்தான் சொல்ல முடியும்.

கே. செல்வன், காசிபாளையம். செப்டம்பர் 27 – அக்டோபர் 3; 1991.

**எளியாரை வலியார் ஏறி மிதிப்பது எதனால்?**

தன்னைவிட வலிமையான சிங்கத்தையோ, புலியையோ என்னைக்காவது அடிச்சு சாப்புட்ருக்கானா? ஆடு, மாடு, கோழி, மீன்னு இளைச்சதையே தேட்றது மனுஷன் ரத்தத்துல ஊறிப் போச்சு. அதனால!

எஸ். பார்த்திபன், புதுக்கோட்டை. செப்டம்பர் 27 – அக்டோபர் 3; 1991.

**'மண்வாசனை' என்பது போல் 'பெண் வாசனை' உண்டா?**



கோவலன் மாதவியை விட்டுப் பிரிஞ்ச பின்னால மாதவி தன் தோழி வசந்தமாலை மூலமா அவனுக்கு ஒரு கடிதம் அனுப்பினா. அவங்க ரெண்டு பேரும் சேர்ந்து அனுபவிச்ச இன்பங்களை எல்லாம் நினைவூட்டி, அந்தக் கடிதத்துல எழுதியிருந்தா. அதைப் பார்த்ததும் கோவலன் மனம் திருந்திருவான்னு எதிர்பார்த்தா. ஆனா கோவலனும் அதை வாங்காமலேயே திருப்பி அனுப்பிட்டான்.

மறுபடியும் ஒரு கடிதம் எழுதி. அதை கௌசிகன் மூலமா அனுப்பினா ஆனா இந்த முறை புதுசா ஒரு உத்தியோட கடிதத்தை அனுப்பினா. அதாவது தன் தலைமுடியை எடுத்து கடிதத்தை ஒரு முத்திரையோட அனுப்பினா.

அதைப் பார்த்ததும், பளிச்சுன்னு மாதவியோட 'பெண் வாசனை' கோவலன் மனசை தொட்டுச்சு. அவளோட தான் கூடியிருந்த காலத்தில் ஏற்பட்ட இன்பச் சம்பவங்கள் மனசை பாதிக்க, அவளோட கடிதத்தை வாங்கி அதை பிரிச்சுக் கூட பார்க்காம, நுகர்ந்து வாசனை பார்த்தான். அந்த வாசனையை கொஞ்ச நேரம் அனுபவிச்சுட்டுதான் கடிதத்தை பிரிச்சுப் பார்த்தானாம். இது இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்துல காட்டியிருக்கிற ஒரு காட்சி.

ஜி. மேரி, பாளையங்கோட்டை. செப்டம்பர் 27 — அக்டோபர் 3; 1991.

**வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுவது போல் சொல்ல வேண்டும் என்றால்?**



மதுவிலக்கு பிரச்சாரத்துக்காக குடிகாரர்கள் நிறைஞ்ச ஒரு பகுதிக்கு சிலர் போனாங்க. மேடை போட்டு முதன் முதலா ஒருத்தர் எழுந்து, "நீங்கள் எல்லாம் குடித்து வீணாகிப் போகிறீர்கள். உங்கள் குடும்பத்தை அழிக்கிறீர்கள்" என்று வேகமா ஆரம்பிக்க, "சரிதாம்பா. எல்லாம் எங்களுக்குத் தெரியும். உட்கார்.. உட்கார்"ன்னு ஒரே கத்தல். உட்கார்ந்து விட்டார்.

அடுத்தவர் எழுந்து தொண்டையை கனைச்சுட்டு, அக்கம் பக்கம் பார்த்தார். சோடா பாட்டில் வைக்கப்பட்டிருந்தது. அதைப் பார்த்து,

"நண்பர்களே! இங்கே சோடாபாட்டில் வைக்கப்பட்டிருக்கிறது. இதை எடுத்துவிட்டு யாராவது தயவு செய்து ஒரு குவார்ட்டர் விஸ்கி வைத்தால் தேவலாம்! அது இருந்தால்தான் எனக்கு பேச வரும்"ன்னாரு.

உடனே ஒரே ஆரவாரம். "நம்ம ஆளுடா!"ன்னு உற்சாகமா கோஷம். கைதட்டல்!

அவர் தொடர்ந்து "நான் காலேஜில் படிக்கும் போதே குடித்து விட்டுத்தான் போவேன்"ன்னாரு.

உற்சாகம் களை கட்டுச்சு.

"நான் என்ன கெட்டா போய் விட்டேன்? காலேஜில் ஃபெயிலானேன். வேலை கிடைக்கவில்லை. அதனால என்ன குடியா மூழ்கிப் போய் விட்டது?"

ஆரவாரம் கொஞ்சம் குறைஞ்சது. அவர் தொடர்ந்தாரு.

"வேலை கிடைக்கவில்லை என்றதும் பூர்வீகச் சொத்துக்களை விற்றேன்.. போனால் போகிறது! என் குடிப் பழக்கத்தைப் பார்த்து என் மனைவி என்னை விட்டுப் போய்விட்டாள். போனால் போகிறாள்"

கூட்டம் அமைதியா கேக்க ஆரம்பிச்சது.

"மனைவி போனால் ஒரு நஷ்டமா? குடித்ததினால் என் குடல் வெந்து விட்டது என்று டாக்டர் சொன்னார். இது ஒரு பிரச்னையா? மிஞ்சிப் போனால் உயிர் போகும். போனால் போகிறது" இப்படி நீண்டது, அவர் பேச்சு.

அடுத்தநாள் அவருடைய பேச்சுக்கு கணிசமான பலன் இருந்ததா

எதுலயோ படிச்ச ஞாபகம்.

ராஜா ரஹீம், கடலூர். செப்டம்பர் 27 – அக்டோபர் 3; 1991.

**ஒருவன் எந்த வயதில் சாதனை செய்ய முடியும்?**

வடநாட்ல 'சத்தியத்தின் குரல்'ன்னு ஒரு இஸ்லாமிய பத்திரிகை ஆரம்பிக்கப்பட்டு, ஜனங்களால ஓஹோன்னு பாராட்டு பெற்றது. அதுல வந்த இஸ்லாமிய மத தத்துவக் கட்டுரைகள் எல்லாரையும் அசர வச்சது.

லாகூர்ல இருக்கற ஒரு இலக்கிய சங்கம், அந்த பத்திரிகை ஆசிரியரை பாராட்ட ஒரு மிகப்பெரிய விழா ஏற்பாடு செஞ்சது. விழாவுல ஒரு 16 வயசுப் பையன் ஆசிரியரா வந்து உட்கார்ந்தாரு! எல்லாரும் நம்ப முடியாம சந்தேகமா பார்க்க, வந்த பையன், 'மதத்தின் அடிப்படையான பகுத்தறிவு'ங்கற தலைப்புல பேச ஆரம்பிச்சாரு.

பெருந்தலைகள் கூட மூக்குல விரல் வைக்கக் கூட்டத்துல கலந்துக்கிட்ட புகழ்பெற்ற கவிஞர் 'அல்தாப் ஹுசேன் ஹாலி' எழுந்திருச்சு, 'இளம் தோள்களில் முதிர்ந்த தலை'ன்னு அங்கயே பாராட்டினாரு. பின்னால தலைசிறந்த சுதந்திரப் போராட்ட வீரரான 'மௌலானா அபுல்கலாம் ஆஸாத்தான் அந்தப் பையன்!

அதனால, சாதனைக்கு வயசை விட அறிவுதாங்க முக்கியம்!

வி. சங்கரன், நாகர்கோவில். செப்டம்பர் 27 – அக்டோபர் 3; 1991.

**அப்பா அவ்வப்போது 'கழுதை, கழுதை' என்று என்னை திட்டுகிறார். அவருக்கு 'சுருக்' என்று ஏதாவது சொல்லுங்களேன்?**

தாஜ்மஹாலை கட்டின ஷாஜஹான் ஒரு தடவை தனது பரிவாரங்களோட வேட்டைக்குப் போனவர், தனியா பிரிஞ்சு தடம் மாறி வந்துட்டாரு.

வர்ற வழியில ஒரு குடிசை. ரொம்ப நேரம் அலைஞ்ச களைப்புல தாகத்துல தவிச்ச மன்னர், குடிசைகிட்டே இறங்கி, அங்கே உட்கார்ந்திருந்த ஒரு பெரியவர்கிட்டே தான் மன்னர்ன்னு காட்டிக்காம, 'கொஞ்சம் தண்ணி கொடு'ன்னு கேட்டாரு.



பெரியவர் ஒரு குவளையில தண்ணி கொடுத்ததும் தாகத்துல தவிச்ச மன்னர் வாங்கி, 'மடக் மடக்..'ன்னு குடிக்க ஆரம்பிக்க,

பெரியவர் தடுத்து, கீழே இருந்து கொஞ்சம் புல் நறுக்குகளை தண்ணிக்குள்ள போட்டுக் கொடுத்தாரு.

மன்னருக்கு எரிச்சல். இருந்தாலும் தாகத்தை தீர்க்க நிதானமா, புல் நறுக்கு வாயில வராம ஊதி ஊதி தண்ணி குடிச்சு முடிச்சுட்டு, "ஏங்க திடீர்னு புல் நறுக்கை உள்ள போட்டீங்க?"ன்னாரு.

அதுக்கு பெரியவர், "அப்பா! என்னதான் தாகம்ன்னாலும் தண்ணி இப்படி 'மடக் மடக்'ன்னு குடிச்சா வயித்தை வலிக்கும். முதல்ல என் கழுதை கூட அப்படி குடிச்சு, அவஸ்தைப்பட்டது! அப்புறமாத்தான் நான் புல் நறுக்குகளை உள்ளே போட்டதும், அது வாய்க்கு வராம இருக்க, கவனமா நிதானமா குடிக்கும். நீ வேகமா குடிச்சதுனால என் குழந்தை ஞாபகம் வர, அதனால புல் நறுக்கை போட்டேன்"னாரு.

அந்த நேரம் மன்னரோட பரிவாரங்கள் அங்கே வர, வந்தவர் மன்னர்ன்னு தெரிஞ்ச பெரியவர் பதற, மன்னர் சிரிச்சுட்டே, "பரவாயில்லை பெரியவரே! நீங்க கழுதை வைத்தியம் பண்ணாலும் என் நன்மைக்குத்தானே பண்ணீங்க"ன்னு பாராட்டி, பரிசு கொடுத்தாரு!

அதனால உங்க அப்பா உங்க நன்மைக்குத்தான் கழுதை வைத்தியம் பண்றாருன்னு நினைச்சு சந்தோஷப்பட்டு இன்னும் கொஞ்சம் பாசமா இருங்க.

ரமணி, திருவாரூர். செப்டம்பர் 27 — அக்டோபர் 3; 1991.

**குழந்தையிடம் தாய் அதிகம் பாசம் காட்ட வேண்டுமா? இல்லை, தந்தை அதிகம் பாசம் காட்ட வேண்டுமா?**

**&**



ஆ. விஜயராஜ், பட்டுக்கோட்டை. செப்டம்பர் 27 — அக்டோபர் 3; 1991.

**உங்களை மிகவும் கவர்ந்த ஆள் யார்?**

பஞ்சாப் சிங்கம் மாவீரன் பகத்சிங் சுதந்திரப் போராட்டத்துல ஈடுபட்டு, வெள்ளைக்காரங்களால ஜெயில்ல அடைக்கப்பட்டு, தூக்கு தண்டனை நிர்ணயம் ஆயிருச்சு. விடிஞ்சா தூக்கு. அப்ப ஜெயில்ல இருந்த சில அதிகாரிகளை அவரோட நண்பர்கள் கைக்குள்ள போட்டுட்டு, அதிகாரிங்க மூலமாவே பகத்சிங்குக்கு ஒரு துண்டு சீட்டு அனுப்பினாங்க.

அதுல, "நைட்டோட நைட்டா நீ சீட்டு கொண்டு வந்த அதிகாரி கூடவே தப்பி வந்துடலாம்'ன்னு தகவல் இருந்தது. பகத்சிங் வாங்கிப் பார்த்துட்டு இன்னொரு துண்டு சீட்ல ஏதோ எழுதி அதை

அதிகாரிகிட்டயே கொடுத்து, நண்பர்கள் கிட்டே கொடுக்கச் சொன்னாரு!

அந்த சீட்ல, "உயிர் மேல எனக்கும் ஆசை இருக்கு. ஆனா, புரட்சியாளனான நான் தப்பிச்சுட்டா, 'புரட்சிக்காரங்க பயந்தவங்க'ன்னு புரட்சி மங்கிடும். அஸ்தவிட, காலையில தைரியமா சாகறேன். அப்ப நாட்ல இருக்கற ஒவ்வொரு பெற்றோர்களும் 'ஆஹா! புரட்சி எவ்வளவு மகத்தானது'ன்னு உணர்ந்து தங்களோட ஒவ்வொரு குழந்தைக்கும் தாய்நாட்டுப் பாசத்தை ஊட்டி வளர்த்து பகத்சிங் மாதிரி வரணும்னு வீரமா சொல்லுவாங்க. அதனால, அதுக்காக சாகறேன்"ன்னு எழுதியிருந்தாரு.

அதனால, இப்ப இருக்கற நிலைமைக்கு தாயும், தகப்பனும் சேர்ந்து நாட்டுப் பாசத்தை ஊட்டினா நல்லது.

எஸ். ரஜினிபாபு. பேராவூரணி. செப்டம்பர் 27 – அக்டோபர் 3; 1991.

**முதலிரவில் முதலில் எதைப் பற்றி பேச வேண்டும்?**

சாப்டறதைப் பத்தி!

சி. எட்டி. இராவத்தநல்லூர். செப்டம்பர் 27 – அக்டோபர் 3; 1991.

**நம் நாட்டில் புழக்கத்தில் உள்ள லஞ்சம், வல்லரசு நாடுகளிலும் புழக்கத்தில் உள்ளதா?**

வாட்டர்கேட் ஊழல் மாதிரி வரிசையா அடுக்கிட்டே போகலாங்க.

கே. இஸ்மாயில். பழனி. அக்டோபர் 4 – 10; 1991.

**'எதை இழந்தாலும் கௌரவத்தை இழக்கக் கூடாது' இழக்காமல் இருப்பது எப்படி?**



ஒருத்தருக்கு வேலையே கிடைக்கலை. படாத பாடெல்லாம் பட்டும் கடைசியில் குடியிருந்த ரூம் வாடகை கூட கட்ட முடியலை. வீட்டுக்காரர் ரெண்டு மாசம் பொறுத்துப் பார்த்துட்டு, கழுத்தைப் புடிச்சு வெளியே தள்ளினாரு. தள்ளும்போது வாடகை பாக்கி. அவர் போட்டிருந்த பூட்ஸ்களை புடுங்கிட்டாரு. அப்புறம் அவர் பார்க், வீதின்னு அலைஞ்சு,

அப்புறம் சர்வராகி, அதுக்கப்புறம் நைட் கிளப்ல டான்ஸ் ஆடி, அதுல ஒரு ப்ரொடியூஸர் அவரைப் பார்த்து சான்ஸ் கொடுத்து, அப்புறம் உலகப் புகழ்பெற்ற ஹாலிவுட் நடிகராகிட்டார்! நம்ம சூப்பர் ஸ்டார் ரஜினி ஸ்டைல் மாதிரி, அவர் ஸ்டைலை 'வாலண்டினோ ஸ்டைல்'ன்னு உலகம் பாராட்டிச்சு.

அப்படி வந்தவர் ஒருநாள் செகரட்டரியை கூப்புட்டு, "ஒரு வீட்டு ஓனர்கிட்டே என்னோட பழைய பூட்ஸ் இருக்கு. பணத்தைக் கொடுத்து வாங்கிட்டு வா"ன்னார்.

செகரட்டரி, "ஏங்க அது எத்தனை வருஷமான பூட்ஸ்! இப்ப உங்ககிட்டே எத்தனையோ டிஸைன்ல பூட்ஸ் இருக்கு!"ன்னாரு.

அதுக்கு அந்த நடிகர், "அடேய்! அது பழைய பூட்ஸ்ன்னு நினைக்காதே.காசில்லாம என் கௌரவத்தை விட்டுட்டு வந்ததா நினை! அந்த கௌரவத்தை பழையபடி மீட்டுட்டு வரணும். போடா"ன்னாரு.

செகரட்டரி வீட்டு ஓனரை தேடிப் பிடிச்சு பூட்ஸைக் கேட்க, "அப்பா சாமி.. அது பழைய பூட்ஸ்ன்னு நீ நினைக்கலாம். ஆனா ஒரு ஹாலிவுட் நடிகரோட பழைய நினைவுச் சின்னம் என் வீட்ல இருக்கறதை கௌரவமா நான் நினைக்கறேன். அதனால என் கௌரவத்தைக் காப்பாத்த நடிகருக்கு இன்னும் எத்தனை ஆயிரம் பணம் வேணும்ன்னு கேட்டுட்டு வா"ன்னாரு.

ஆக ரெண்டு பேருமே கௌரவத்தை இழக்கலை பார்த்தீங்களா?

கே. ரவிசாரதி, சென்னை–34. அக்டோபர் 4 – 10; 1991.

**தியாகத்தில் பெரிய தியாகம் எது?**



ஒரு பிரெஞ்சு அரசியல்வாதி. அவர் நல்ல எழுத்தாளர். கவிஞர். 1800லிருந்து 1866 வரை அவர் காலகட்டம். பேரு பெர்டினன்ட் பிளாகன். அவர் தன்னோட நாட்டு அரசியல் சட்டத்தை கவிதையா பாடணும்னு ஆசைப்பட்டு, ஒரு லட்சத்து இருபதாயிரம் வார்த்தைகளை வெச்சு அழகா கவிதை எழுதி முடிக்க, உலகப் புகழ் கிடைச்சது.

பின்னாலதான் அவருக்கு தன்னோட நாட்டு அரசியல் சட்டத்துல நிறைய ஓட்டை இருக்கறதும், அரசும் அதுல இருக்கறபடி சரியா நடக்கிறதில்லேன்னும் தெரிஞ்சது.

அந்த மன வெறுப்புல அரசியல்லருந்து விலகி, வறுமையில வாழ்ந்து இறந்துட்டாரு.

பின்னால அவருடைய மனைவிகிட்ட அரசு வந்து ஒரு பெருந் தொகையை பென்ஷனா கொடுக்க வந்தாங்க. அப்ப அவர் மனைவி, "என் கணவருக்கு அரசோட கொள்கைகள்ல கருத்து வேறுபாடு இருந்தது. அதனால அரசு தர்ற இந்த பென்ஷனை நான் வாங்கினா, அது என் கணவருக்கு செய்யற துரோகமா என் மனசாட்சி உறுத்தும். வேண்டாம்"னாங்க.

அதனால, மனசாட்சிக்கு ஒத்துக்காத எந்த விஷயத்தை செய்யாம இருந்தாலும், அது மிகப்பெரிய தியாகம்தான்.

சி.எஸ். குமார், கும்பகோணம். அக்டோபர் 4 – 10; 1991.

**கதை, கவிதை எழுத குறைந்தபட்சம் எவ்வளவு படித்திருக்க வேண்டும்?**

ஸ்காட்லாந்து நாட்ல ஒரு புகழ்பெற்ற கவிஞர். 'டங்கள்மாக் இன்டைர்'ன்னு பேரு(1724—1812) அவரோட கவிதைகளை தேசிய சொத்தா இன்னைக்கும் போற்றி, பாதுகாக்கறாங்க.

அவருக்கு எழுதப் படிக்கத் தெரியாது! அவர் வாய்ல சொல்றப்போ கவிதைகளை சீடர்கள்தான் எழுதினாங்களாம்!

ஏ. ராஜாமணி, நாட்டரசன். அக்டோபர் 4 – 10; 1991.

**முதல் இரவுக்கு 'பால் நிலவு' என்றால் ஓரளவுக்கு பொருந்தும். அது என்ன 'தேன் நிலவு?' (பால், பழம் வைப்பதால் எதார்த்தமாக குறிப்பிட்டேன்)**

நானும் எதார்த்தமாகவே பதில் சொல்லிட்றேங்க.

முதலிரவுக்கு முன்னால தேன் கலந்த ஒயினை வீரியமூட்றதுக்காக அருந்தறது வட ஐரோப்பிய நாடுகள்ல உண்டான வழக்கமாம்! அதனால 'தேன் நிலவு'ங்கறது இந்த பழக்கத்திலிருந்து உருவானதுதானாம்! இது ஒரு ஆராய்ச்சியாளரோட கருத்து.



எல். பாலகிருஷ்ணன், தாராசுரம். அக்டோபர் 4 – 10; 1991.

**சத்தியத்தை சாமர்த்தியமாக மீற முடியுமா?**

நாரதர், கிருஷ்ணர் இந்த மாதிரி விஷயங்கள்ல பயங்கர ஐடியா கொடுப்பாங்க. நம்மகிட்டே போய் கேக்கறீங்களே! எதுக்கும் நான் படிச்ச ஒரு குட்டிக் கதையை சொல்லி வைக்கிறேன்.

ஒரு வீட்ல ஒரு பெரியவர். ரொம்ப சத்தியவான். வீட்ல இருக்கற எல்லாரையும் கூப்புட்டு சத்தியம் வாங்கிட்டார். அதாவது, யார், என்ன தப்பு பண்ணாலும், சத்தியம் தவறாம இந்த வீட்ல இருக்கற உண்டியல்ல ஒரு ரூபா போட்றணும்ன்னாரு. வீட்ல ஆள் மாத்தி ஆள் யாராவது ஒரு தப்பு பண்ணுவாங்க.

அதனால மாசம் 150, 200 ரூபாய் சேரும். அதை அப்படியே கொண்டு போய் கோவில் உண்டியல்ல போட்ருவாரு.

ஒரு தடவை அவர் உடம்பு சுகமில்லாம 30 நாள் ஆஸ்பத்திரியில படுத்து அப்புறம் திரும்பினாரு. வீட்ல வந்து உண்டியலை திறந்தா, அதுல ஒரே ஒரு ரூபாய்தான் இருந்தது! பெரியவருக்கு ஒரே சந்தோஷம்.

"இந்த மாசம் யாரோ ஒருத்தர் மட்டும்தான் தப்பு பண்ணியிருக்காங்க யாரு?"ன்னு கேட்டாரு.

நம்மளை மாதிரி இருக்கற அவங்க பையன் வந்து நின்னான்.

"என்ன தப்பு பண்ணே?"ன்னாரு.

"என் ஃப்ரெண்ட்ஸ்களோட ஜாலியா ஊர் சுத்த வேண்டியிருந்தது. அதனால நேத்து இந்த உண்டியல்லருந்து 200 ரூபாய் எடுத்துட்டு, நான் பண்ண தப்புக்காக சத்தியம் தவறாம இன்னைக்கு காலையில இந்த உண்டியல்ல ஒரு ரூபா போட்டேன்"னான்.

உஷாராணி, பாளையங்கோட்டை. அக்டோபர் 4 — 10; 1991.

**ஒரு தப்பும் செய்யாதவருக்கும் கஷ்டம் வருகிறதே?**

ஆம்லெட் சாப்புடணும்ன்னா முட்டையை உடைச்சுதான் ஆகணும். சந்தோஷத்தை அனுபவிக்கணும்னா கஷ்டப்பட்டுத்தான் தீரணும். அதன்ால பொறுமையா, தன்னம்பிக்கையோட உழையுங்க.

சலங்கை துரை, சென்னை—78. அக்டோபர் 4 — 10; 1991.

**சட்டசபையில் 'அண்ணா பிராமணனை எதிர்க்கவில்லை... பிராமணியத்தை எதிர்த்தார்'ன்னு அமைச்சர்கள் பேசினார்களே! 'பிராமணியம்' என்றால் என்ன?**

'உபநிஷத்துகள்!'

இதுலதான் இந்து மதத்தோட வேதாந்தக் கருத்துகள் அடங்கியிருக்கு. அந்த உபநிஷத்துகள் ரிஷிகளால நமக்கு கிடைச்சதாம். அதுல 'வஜ்ர சூசிக உபநிஷதம்'ன்னு ஒண்ணு. நீங்க கேட்ட 'பிராமணன் யார்?'ங்கற கேள்விக்கு அதுல கீழே வர்ற மாதிரி பதில் சொல்லியிருக்கு.

'ஒருவன் பிறப்பால் பிராமணன் என்றால், அது ஏற்றுக் கொள்ளத்தக்கதல்ல. பல பிராமண முனிவர்களின் பிறப்பு பல மாதிரி அமைந்திருக்கிறது. ரிஷ்யசிருங்கர் மானிடமிருந்து பிறந்தார். கௌசிகர் ஒரு



சூசப் புல்லில் இருந்து பிறந்தார். வால்மீகி எறும்பு புற்றிலிருந்தும், ஜாம்புகள் ஒரு நரியிலிருந்தும் பிறந்தார். வியாசர் மீனவப் பெண்ணிடமிருந்தும், கௌதமர் ஒரு முயலின் முதுகிலிருந்தும் பிறந்தவர்கள். வசிஷ்டர், ஊர்வசி என்ற கந்தர்வப் பெண்ணிடமிருந்தும், அகஸ்தியர் ஒரு மண் குடுவையிலிருந்தும் பிறந்தார்கள். இப்படி பிறந்தவர்கள் பிராமணர்கள் என்று மதிக்கப்பட்டார்கள்.

அறிவினால் ஒருவன் பிராமணன் என்றால் அதுவும் சரியல்ல. பிராமணன் அல்லாத மற்ற இனத்தவரும் அறிவில் சிறந்தவர்களாக இருந்திருக்கிறார்கள். கோயில் பணி செய்வதால் பிராமணன் உயர்ந்தவன் என்று சொல்வதும் தவறு. கோயிலைக் கட்டும் பணியாளர் (சூத்திரர்) கோயிலை நிர்வகிக்க பணம் தரும் வைசியர், காத்து வரும் ஷத்திரியர் எல்லோருமே கோயில் பணி செய்கிறார்கள். 'உண்மையான பிராமணன் யார்?'

ஆத்மாவை (தன் உள் மனதை) அறிந்து அதைச் சுத்தமாக வைத்திருப்பவன்! பிறப்பு, இறப்பு செயல் இவற்றால் உயர்நிலை அடைந்து பலவீனங்களுக்கு இடங் கொடுக்காமல் உண்மை, அறிவொளி, மகிழ்ச்சி அழிவின்மை இவற்றின் வடிவமாக எல்லோராலும் போற்றிப் புகழப்படுபவனே பிராமணன்!"

இப்படி வேதாந்த உபநிஷத் சொல்லுது! ஆக, நீங்களும் பிராமணராக முயற்சி பண்ணலாம்.

ஜே. ராபர்ட் ராஜன், தூத்துக்குடி. அக்டோபர் 4 – 10: 1991.

**வெட்கப்படாத பெண் யாரேனும் உண்டா?**

ஓர் இலக்கியப் பாடல் காட்சி.

"கணவனுடன் மனைவி கூடும் நேரம். மோகத்தால் மனைவி நாணத்தை (வெட்கத்தை) துறந்து விடுகிறாள். வெட்கத்தை துறந்ததும், ஆடையை அகற்றினாள். அணிகலன்களை அகற்றினாள். மேகலையை அகற்றினாள். உடம்பில் தடையாக இருந்த அனைத்தையும் அகற்றினாள். இப்படி தன்னையே துறக்கும் தன்மை காமத்துக்கும் உண்டு!"

இப்படி ஒரு கவிஞர் சொல்லியிருக்காரு. அவர் யாருமில்லை. கம்பர்தான்.

கே. மணிகண்டன், தேனி. அக்டோபர் 4 – 10; 1991.

**புரியாத புதிர் சொல்லுங்களேன்?**

லண்டன்ல ஒரு ராணுவ டாக்டர். 'ஜேம்ஸ் பாரி'ன்னு பேரு. ரொம்ப கவர்ச்சியானவர். இளமையானவர். அவர் லண்டன்ல மட்டுமில்லாம இந்தியா, மேற்கிந்தியத் தீவுகள், தென்னாப்பிரிக்கா இப்படி பல நாடுகள்லயும் வேலை பார்த்தவரு. அவர் வேலை பார்த்த ஒவ்வொரு நாட்லயும் எத்தனையோ பெண்கள் 'நீ, நான்'னு பேட்டி போட்டு அவரை காதலிச்சாங்க. ஆனா, அவர் கடைசி வரைக்கும் யாரையுமே காதலிக்கவும் இல்லை. கல்யாணமும் பண்ணிக்கலை. தன்னோட 72வது வயசுல லண்டன்ல இறந்துட்டாரு. ஈமக்கிரியை செய்ய அவர் உடம்பை சரி பண்ணும்போதுதான் அந்த டாக்டர் ஆம்பளை இல்லை.. பொம்பளைன்னு தெரிஞ்சது. எதுக்காக கடைசி வரைக்கும் ஆம்பளையா நடிச்சார்ங்கறது இன்னைக்கு வரைக்கும் யாரும் புரியாத புதிராம்!

எஸ். ராமச்சந்திரன், ராம்நாட். அக்டோபர் 4 – 10; 1991.

**புருஷன் மீது பொண்டாட்டி கால் படலாமா?**

கை, கால் படாட்டி எந்த வேலையும் நடக்காதுங்க!

எஸ். சிவகாமி, திருப்பூர். அக்டோபர் 4 – 10; 1991.

**குழந்தையின் குறும்பு இனிக்குமா? குமரிப்பெண்களின் குறும்பு இனிக்குமா?**

கண்ணன் குழந்தையா இருந்தப்ப எல்லா யாதவர் வீட்லயும் போய் வெண்ணெய், பால் திருடி சாப்பிட்றது வழக்கம். ஒரு நாள் கண்ணன் ஒரு வித்தியாசமான குறும்பு செய்தாப்பல. ஒரு ஆய்ச்சியின் மாட்டுத் தொழுவத்துக்குப்போய் பசுவோட மடியில நேரா வாய் வச்சு தானே பாலை உறிஞ்சு சாப்புட்டாரு. இதை பார்த்த கோபிப் பெண் ஓடிப்போய், கண்ணனின் வளர்ப்புத் தாயான யசோதையை கையோட கூப்பிட்டு வந்து காமிக்க யசோதை,



"ஏண்டா இப்படி பண்ணே?"ன்னு கேட்டாங்க. அதுக்கு குழந்தை கண்ணன், "அம்மா... அம்மா! இந்த கன்னுக் குட்டிக்கு எப்படி தாய்ப் பசுகிட்ட பால் குடிக்கணும்னு தெரியலை. அதான் எப்படி மடியில் பால் குடிக்கணும்னு நான் அதற்கு செய்து காட்டினேன்"னு குறும்புத்தனமா

பதில் சொல்ல, மாட்டுக்கு சொந்தக்கார கோபியே சிரிச்சுட்டு, கண்ணனை எடுத்து முத்தமிட்டு கொஞ்சினாங்க.

அதனால, குழந்தை குறும்பு எப்பவும் எல்லாருக்கும் இனிக்கும். குமரிக் குறும்பு சில நேரங்கள்ல, சில சூழ்நிலைக!ள்ல ஆளைப் பொறுத்து.. பண்றதைப் பொறுத்து!

க. இளங்கோ, சென்னை—17. அக்டோபர் 11 – 17; 1991.

**அடிக்கடி மனதில் பயம் வருகிறது. அதை எப்படி போக்குவது?**



1937 ஒரு சமாச்சாரம் நடந்தது.

'ஹெர்மிஸ்'ன்னு ஒரு குட்டி கிரகம் திடீர்ன்னு பிச்சுக்கிட்டு வேகமா ஒரு திசையில வர ஆரம்பிச்சது. அந்தக் கிரகத்தோட எடை 5 லட்சம் டன். வந்த ஸ்பீடு, ஒளியோட வேகம். (ஏறத்தாழ நொடிக்கு மூணு லட்சம் கிலோ மீட்டர்) அப்படி வந்தது, எங்கே வந்தது தெரியுமா? நேரா பூமியைக் நோக்கி! அதோட வெயிட்டுக்கும், ஸ்பீடுக்கும் அது பூமி மேல மோதுனா, மூணு செகண்டுல இந்த உலகம் சுக்கல் சுக்கலா சிதறியிருக்கும். நல்லவேளை, கிட்ட வரும் போது டைரக்ஷன் மாறி, வேற எங்கயோ போயிருச்சு.

இருந்தாலும் இந்த மாதிரி ஏதோ ஒரு கிரகம் எப்ப வேணும்னாலும் பூமி மேல மோதி, எல்லாமே காணாமப் போக வாய்ப்பு உண்டுன்னு விஞ்ஞானிகள் கருத்து சொல்றாங்க!

உலகத்தோட நிலைமையே நிலையில்லை. இதுல நம்ம... புழு, பூச்சி மாதிரி! பயப்பட்றதுக்கு என்னங்க இருக்கு?

சின்னப்பா, திருவையாறு. அக்டோபர் 11 – 17; 1991.

**'அம்மா, அப்பா' என்பதற்கும், 'தாய், தந்தை' என்பதற்கும் ஏதாவது வித்தியாசம் உண்டா?**

இருக்குங்க! தாய், தந்தை எப்படி வந்ததுங்கறதுக்கு ஒரு விளக்கம் இருக்கு.

தாய், குழந்தையை தாவி எடுத்து அணைத்துக் கொண்டதால் 'தாய்!'

தந்தை — குழந்தையைத் தந்தவன் என்பதால் 'தந்தை'

'அம்மா, அப்பா'ங்கறது — குழந்தையோட மழலை உச்சரிப்பிலிருந்து உருவானது. உணர்ச்சிகரமானது. பாச நெருக்கத்தை உணர்த்துவதுன்னு விளக்கம் சொல்றாங்க.

ரவிச்சந்திரன். ஆண்டிப்பட்டி. அக்டோபர் 11 — 17; 1991.

**செக்ஸில் ரசனையான அம்சம் எது?**

நான் ஏதாவது சொன்னா, 'இந்த பாக்யராஜ் எப்பவுமே இப்படித்தான்'னு அலறுவாங்க. அதனால, கலிங்கத்துப் பரணி பாடின ஜெயங்கொண்டான் சொன்னதை சொல்லி தப்பிச்சுக்கறேன்.

ஒரு மனைவி, கணவன்கிட்டே தனக்கு பவள மாலை வேணும்னு கேட்டாளாம். கணவனுக்கு கொஞ்சம் தட்டுப்பாடு போலிருக்கு. யோசிச்சான்.

அன்னைக்கு நைட் சந்தோஷமா இருக்கற நேரத்துல நகத்தாலயும், பல்லாலயும் கழுத்தை சுத்திவர மார்க் பதிச்சு அவளுக்கு இன்பத்தைக் கொடுத்துட்டு, காலையில மனைவியை கண்ணாடி முன்னால் நிறுத்தி, 'நீ கேட்டியே பவள மாலை... அது, இப்ப கழுத்துல இருக்கற மாலை அளவுக்கு இருக்குமா?"ன்னு கேட்க, மனைவி கண்ணாடியைப் பார்க்க, கழுத்தைச் சுத்தி அழகா மாலை மாதிரி 'மார்க்' பதிஞ்சிருந்தது. ஆக, செக்ஸ்ல 'மார்க்' பதியறதுதான் ரசனையானதா ஜெயங்கொண்டான் நினைக்கறார் போலிருக்கு.

பொன் முத்து. நாகர்கோவில். அக்டோபர் 11 — 17; 1991.

**ஒரு தவறு செய்து விட்டேன். மனது உறுத்திக் கொஷண்டே இருக்கிறது...**

மனுஷன். காத்து மாதிரி.

காத்துக்குன்னு தனி வாசம் கிடையாது. பக்கத்துல பூந்தோட்டம் இருந்தா மணக்கும். அழுகிப் போனது ஏதாவது இருந்தா வாடை வீசும். சுத்தி வர உள்ளதை வச்சுதான் அதோட தன்மை! உங்க சுத்து வட்டாரத்துல ஏதோ கோளாறு இருந்து தப்பு பண்ணியிருக்கீங்க. இனிமே முடிஞ்ச வரைக்கும் பூந்தோட்டம் பக்கமாவே இருக்க முயற்சி பண்ணுங்க. 'நிலத்தியல்பால் நீர்திரிந்தற்று' பழந்தமிழ் வாக்கு. அர்த்தம் — காத்து மாதிரிதான் தண்ணியும்!

ராம்ஸ், சேயூர். அக்டோபர் 11 — 17; 1991.

**திருடனிடம் திருடுவது சிரமம் என்கிறார்களே?**

'திருடனுக்கு தேள் கொட்டுன மாதிரி'ன்னு பழமொழியே இருக்குங்களே!

நம்ம பொருள் காணாம போனா, எவனோ திருடிட்டான்னு தைரியமா கம்ப்ளெயிண்ட் பண்ணுவோம். திருடன்கிட்ட இருக்கறது காணாப் போனா, அவன் யாருகிட்டே போய் கம்ப்ளெயிண்ட் பண்ணுவான்?

சினிமாவுல இது சகஜங்க. சில பேர் இங்கிலீஷ் படம் பார்த்து தமிழ்படம் பண்றாங்க. இன்னும் கெட்டிக்காரங்க, அந்த தமிழ் படத்துலருந்தே இன்னொரு தமிழ் படம் பண்றாங்க!



கிருஷ்ணன், ஈரோடு—1. அக்டோபர் 11 — 17; 1991.

**நான் எவ்வளவோ கடினமாக உழைக்கிறேன். ஆனால் அலுவலகத்திலும், வீட்டிலும் என்னை குறை கூறிக் கொண்டே இருக்கிறார்கள்.**

ஒருத்தரோட அப்பா இறந்துட்டாரு. அவர் உழைப்பை நிறுத்தலை. கொஞ்ச மாசத்துல அவரோட பெண் குழந்தை இறந்தது. அவர் உழைப்பை நிறுத்தலை.

அடுத்த வருஷம், வயசுக்கு வந்த ஒரு மகள் விஷக் காய்ச்சலில இறந்துருச்சு. அப்பவும் அவர் உழைச்சுட்டே இருந்தாரு. கடைசியில நாய் கடிக்கு மருந்தை கண்டுபிடிச்சாரு. இப்ப யாரையாவது நாய் கடிச்சதுன்னு கேள்விப்பட்டாலும், நாயை பார்த்தாலும் எனக்கு லூயி பாஸ்டரோட உழைப்புதான் ஞாபகம் வருது.

அதுமாதிரி யாரைப் பத்தியும் கவலைப்படாம உங்க உழைப்புனால ஏதாவது ஒரு சாதனை நிகழ்த்துங்க. உலகத்துல யாரோ ஒருத்தர், எப்பவும் உங்களைப் பத்தி பேசிட்டே இருப்பாங்க.

ஆர். விக்ரமன், முசிறி. அக்டோபர் 11 — 17; 1991.

**பெண்களைப் பார்த்து பாவப்படலாமா?**

10 கார்டுல 10 கேள்வி கேட்டிருக்கீங்க. பத்தும் பெண்களைப் பத்திதான்!

அவங்களால ஏதோ ஒரு பாதிப்பு உங்களுக்கு வந்திருக்கிறது புரியுது. அதைப் பத்தி பர்சனலா லெட்டர் போடுங்க. பதில் எழுதறேன்.

சாவித்ரிப்ரியன், விருத்தாசலம் – 1. அக்டோபர் 11 – 17; 1991.

**வெற்றிக்கு தடைக்கல்லாக இருப்பது எது?**

கர்வமுள்ளவன் கடவுளை இழக்கிறான்.

பொறாமைக்காரன் நண்பனை இழக்கிறான்.

கோபக்காரன் தன்னையே இழக்கிறான்.

ஆக, இதுல எதையும் நீங்க இழக்காம இருந்தாலே, வெற்றி நிச்சயம்.

ஜே.ஏ. ராஜேஷ், சென்னை—15. அக்டோபர் 11 – 17; 1991.

**துன்பத்திலும் நம்பிக்கை இழக்காமல், மனோதைரியத்துடன் இருக்க ஒரு நல்ல வழி சொல்லுங்களேன்?**

&

அன்பழகன், பெங்களூர். அக்டோபர் 11 – 17; 1991.

**வறுமை ஏழைகளின் தலையெழுத்தா?**



அப்படி எல்லாம் ஒண்ணுமில்லீங்க.

'மாரீஸ் மைனர்' கார் தயாரிச்ச ஓனர் உலகத்துலயே மூணாவது பணக்காரர். ஆரம்பத்துல அவர் சாதாரண சைக்கிள் கடையில தினக்கூலிக்கு வேலை பார்த்தவர்.

நம்ம மனசுல நம்பிக்கையும், வைராக்கியமும் வந்துட்டா, வறுமைங்கற தலையெழுத்தை நிச்சயமா மாத்தலாம்.

பி. குமார், சேலம்—6. அக்டோபர் 11 – 17; 1991.

**எது அழகு?**

பெற்றோர் பெரியோரை மதிப்பது அழகு.

பிறருக்கு உதவுதல் அழகு.

எல்லோரிடமும் அன்புடன் இருப்பது அழகு.

ஜி. ராஜேஸ்வரி, திண்டுக்கல். அக்டோபர் 11 – 17; 1991.

**சக்ஸஸ் கொடுத்தும், நீங்கள் ஏன் மீண்டும் ஹிந்திக்குப் போகவில்லை?**

சின்னப்புாளை சீக்கிரம் கொடுக்கும். ஹிந்தி கொஞ்சம் பெரிய பாளைங்க!



முறையூர் சி. கரிகாலன், கோவை—1. அக்டோபர் 11 – 17; 1991.

**அண்ணே! பள்ளி, கல்லூரி நாட்களில் 'பலான' சேட்டைகள் செய்து அடி வாங்கியதுண்டா?**

ஸ்கூல்லருந்து மலம்புழா டேமுக்கு எக்ஸ்கர்ஷன் கூட்டிட்டு போனாங்க. பசங்க, பொண்ணுங்க எல்லாரும் பஸ்ஸுலருந்து இறங்கிப் போக, லேடி டீச்சர் மட்டும் பஸ்ஸுலயே உக்கார, நான், "ஏன் டீச்சர்.. நீங்க வரலையா?"ன்னு கேட்டேன்.

"டயர்டா, ஜுரம் வந்த மாதிரி இருக்குடா"ன்னாங்க.

"நான் வேண்ணா தொட்டுப் பார்க்கட்டுமா டீச்சர்?"ன்னு சிரிச்சுட்டே கழுத்துப் பக்கம் கையைக் காட்டி வாங்கி கட்டிக்கிட்டேன். (அப்ப 9வது வகுப்புப் பையன்!)

எஸ். கணபதி, மதுரை—16.

**'சினிமாக்காரர்கள் என்றாலே ஒரு மாதிரி' என்று நண்பன் முணுக்கிறான்?**

சந்தன மரக் காட்டுல சர்ப்பம் இருக்கறது சகஜம். அதுக்காக சந்தன மரக்காட்டுக்கு மரியாதை போகாதுன்னு சொல்லுங்க.

ஆர். ஸ்டீபன், கடலூர். அக்டோபர் 11 – 17; 1991.

**நினைச்சு நினைச்சு சிரிச்ச விஷயம் ஏதாவது?**

நம்ம ஜூனியர் சோனு ஒருநாள் திடீர்னு, "டாடி.. நான் ஆக்ட் பண்ணணும்"னான். ஏதோ விளையாட்டா பேசறான்னு, "சரி.. பண்ணலாண்டா..."ன்னு படுக்கப் போனேன்.

"ஏதாவது சொல்லுங்க டாடி... நான் இப்பவே ஆக்ட் பண்றேன்"னான். எனக்கும் ஒண்ணும் புரியலை. 'நிஜமாவாடா?'ன்னேன். 'ஆமா'ன்னான்.

# தேன்கூடு



மனிதன் கல்லை விட கடினமானவன். அதே சமயம், ரோஜா மலரை விட மென்மையானவன்.

டாவின்சி
இரா. ஜோதி கிருஷ்ணா.

வலியிலும், வேதனையிலும் வருவதுதான் வீரம். வாழ்க்கையில் எல்லாம் நல்ல விதமாக அமைந்து விட்டால், நீ ஒரு பெரிய கோழையாகத்தான் இருப்பாய்.

மேரி டைலர்
பாலநிவாஸ்.

மனித இனத்தை மாற்றுவதற்கு எல்லோரும் முயல்கிறார்கள். தன்னைத் தானே மாற்றிக் கொள்ள எவரும் முன்வருவதில்லை.

டால்ஸ்டாய்
எஸ். ஹரிஹரன்.

மூப்பை வெல்வதற்கு உண்மையான வழி, உள்ளத்தின் இளமையை போற்றிப் பாதுகாப்பதே.

மார்டிமர் காலின்ஸ்
அ. இராஜப்பன்.

பெண்ணிற்கு ஒரு கடமையை சொல்லுமுன், அவள் செய்த மூன்று நற்செயல்களை பாராட்டிய பிறகு கடமையைப் பற்றி சொல்.

பாரி வெபின்
சீதா கிருஷ்ணன்.

பணமிருந்தால் உன்னை உனக்கே தெரியாது. பணமில்லா விட்டால் உன்னை உலகுக்கு தெரியாது.

ஸ்பெயின் பொன்மொழி
வடுகை ஆர். விவேக்.

அவன் கூறிய பதில்களைக் கொண்டு அவனின் புத்திசாலித்தனத்தை சொல்லி விட முடியாது. அவனிடமிருந்து எழுகின்ற கேள்விகளிலேயே அவனது கூர்மையான புத்திசாலித்தனம் புலப்படும்.

வால்டேர்
டி.எம். சவுமி.

'சரி, கதவுக்கு வெளியே நில்லு. நான் ஆக்ஷன் சொன்னதும் நேரா உங்க அம்மாகிட்டே வந்து, மேடம்... உங்களை எங்க க்ளாஸ் டீச்சர் கூப்புட்றாங்க... வாங்க'ன்னு சொல்லச் சொன்னேன். 'ஆக்ஷன்'னதும் வந்து கரெக்டா சொன்னான். 'அடுத்து சொல்லுங்க'ன்னான். நான் எழுந்து உட்கார்ந்துட்டேன். 'டெலிபோனை எடுத்து, 'ஹலோ யார் பேசறீங்க? டாடியா? டாடி வெளியே போயிருக்காங்க. ஈவினிங் வருவாங்க. உங்க பேர் சொல்லுங்க. வந்ததும் சொல்றேன்'னு சொல்லுன்னேன்.

கரெக்டா எடுத்து சொன்னான்.

'குட்'ன்னு பாராட்டிட்டு விட்டுட்டேன். சாயங்காலம் 'சுந்தர காண்டம்' படத்துக்கு ஒரு ஆர்ட்டிஸ்ட்டுக்கு வீடியோ டெஸ்ட் எடுக்க புறப்பட்டேன்.

'நானும் வந்து ஆக்ட் பண்றேன்'னான். 'கூட்டமா இருப்பாங்களே'னனேன். 'பரவாயில்லை'ன்னாங்க.

அவங்கம்மா துடிக்க ஆரம்பிச்சுட்டாங்க. பாட்டி அதுக்கு மேல!

'சரி, புறப்படு'ன்னதும் குடும்பமே ஆபீஸுக்கு வந்தாச்சு.

லைட் பண்ணி, காமிரா செட்டப் பண்ணதும் சோனுவை கூப்புட்டு, "அந்த ரூமுக்குள்ள நில்லு. ஆக்ஷன்னதும் வெளியே வந்து இங்க நின்னு இவங்களைப் பார்த்து, காலையில சொன்ன 'மேடம், உங்களை எங்க க்ளாஸ் டீச்சர்' டயலாக் சொல்லு"ன்னேன்.

சோனு ரூமுக்குள்ள போய் நின்னான். காமிரா ஸ்டார்ட் பண்ணி. 'ஆக்ஷன்' சொன்னேன். வந்து கரெக்டா நின்னு 'மேடம்'ன்னு ஆரம்பிச்சவன், திடீர்னு ட்ராயர் சென்டர்ல கையை வச்சுட்டு நிறுத்திட்டான்.

'என்னடா'ன்னா, 'டாடி... அவசரமா 'பிஸ்' போகணும்'னான். ஆபீஸே சிரிச்சிருச்சு!

யோகாம்பாள், தூத்துக்குடி. அக்டோபர் 18 — 24; 1991.

**விஞ்ஞான ரீதியாக நம் நாடு முன்னேறாமல் இருப்பதற்கு காரணமே இன்னும் நாம் புராணக் கதைகளையே பேசிக் கொண்டிருப்பதுதான். தெரிந்தும் நீங்கள் உங்கள் பதில்களில்?**



ஒரு மகாபாரதக் காட்சி.

சுபத்திரையின் வயிற்றில் 'அபிமன்யு' சிசுவாக இருக்கும்

போது நடந்தது.

'போரில் எப்படி வியூகம் அமைக்கணும்?'ன்னு அர்ஜுனன், மனைவி சுபத்திரை கிட்டே சொல்லிட்டிருந்தாரு. அதை சுபத்திரையோட வயித்துல கருவில் சிசுவா இருந்த அபிமன்யூ கேட்டிட்டிருந்தான். பத்ம வியூகத்தை உடைச்சு உள்ள போற வரை அர்ஜுனன் கூற, அபிமன்யு கேட்டுட்டான். அதுக்குள்ள சுபத்திரை தூங்கிட்டதால அர்ஜுனன் மேலே சொல்லாம நிறுத்திட்டாரு. அபிமன்யுவுக்கு அதுக்கு மேல தெரிஞ்சுக்க முடியாம போச்சு.

பின்னால போர்க்களத்துல அர்ஜுனன் இல்லாதப்போ எதிரிகள் அந்த வியூகத்தை அமைக்க, அபிமன்யு முன்வந்து, "இந்த வியூகத்தை உடைத்து எதிரிப் படைக்குள் ஊடுருவிச் செல்ல எனக்குத் தெரியும். நான் சிசுவா இருந்தபோது எங்கம்மா கிட்டே அப்பா சொன்னதைக் கேட்டுட்டு இருந்தேன்'னு வேகமா உள்ளே போயிட்டு வெளியே வரத் தெரியாம மாட்டிக்கிட்டான்.

'இந்த புராணக் கதையை நம்ப முடியுமா? வெளியே பேசறதை வயித்துல இருக்கற சிசு தெரிஞ்சுக்குமா?"ன்னு நான் கூட நினைச்சேன். ஆனா, இப்ப அமெரிக்க விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செஞ்சு, 'தாயின் வயிற்றில் இருக்கும் குழந்தைகளால் கேட்கவும், கற்றுக் கொள்ளவும் முடியும்'னு கருத்து தெரிவிச்சிருக்காங்க.

அப்படி இல்லாம ராம, ராவண யுத்தத்துலயும், மகாபாரத யுத்தத்துலயும் விட்ட எதிர் எதிர் பாணம் மாதிரி ஈராக் போர்ல ஸ்கட்டும், பேட்ரியாட்டும் விட்டிருப்பாங்க!

சுந்தரம், தோழத்தூர். அக்டோபர் 18 – 24; 1991.

**உண்மையான வாழ்க்கை எது?**

ஒரு 'டு—இன்—ஒன்' பதில்!

கிரிக்கெட் மேட்ச், ஃபுட்பால் மேட்ச் இதெல்லாம் நடக்கறப்போ டி.வியில நேரடியா ஒளிபரப்புவாங்க. நாமளும் வெச்ச கண்ணு வாங்காம பந்து எங்க போகுது. எங்க வருது. யாரு, அசத்தப் போறாங்கன்னு உத்துப் பார்த்துட்டிருப்போம். யாருக்கு வெற்றி, தோல்விங்கற வரைக்கும் உற்சாகத்தோடு மேட்ச் போயிட்டே இருக்கும். அதையே வீடியோவுல ரெக்கார்டு பண்ணி மறுநாள் பார்த்தா இந்த உற்சாகம் இருக்காது!

அதுபோல, நாளைக்கு என்னன்னு தெரியாத சுவாரஸ்யமான விளையாட்டுதாங்க வாழ்க்கை! ஆண்டவனோட அற்புதமான சிருஷ்டியில இதுவும் ஒண்ணு!

த. ரவீந்திரன், புதுவண்டிப்பாளையம். அக்டோபர் 18 – 24; 1991.

**ஒரு சந்தேகம் தலைவா! எங்களுக்கு சந்தேகம் வந்தால் உங்களை கேட்கிறோம். உங்களுக்கு சந்தேகம் வந்தால் யாரை கேட்பீர்கள்?**

எதுத்தாப்புல யார் இருந்தாலும் கேட்டுருவேன். தெரியாததை தெரிஞ்சுக்கற விஷயத்துல எனக்கு கூச்சமோ, சங்கோஜமோ, கௌரவமோ எதுவுமே கிடையாதுங்க!

பாஸ்கர், வாய்மேடு. அக்டோபர் 18 – 24; 1991.

**காங்கிரஸ் கட்சி பழம்பெரும் கட்சியாக இருந்தும், தமிழ்நாட்டில் ஏன் தனிப்பட்ட பலம் வாய்ந்ததாக இல்லை?**

மகாபாரத்தில் கர்ணனுக்கு துரியோதனன் சொன்ன கதை இது.



முன்னொரு சமயம். சத்திரியர்களுக்கும், பிராமணர்களுக்கும் இடையே யுத்தம் நடந்தது. அந்த சண்டையில மற்ற இரு பிரிவினரான வைசியரும், சூத்திரர்களும் பிராமணர்களுடன் சேர்ந்து கொண்டனர். அதனால சத்திரியர், எண்ணிக்கையில் குறைந்து மற்ற மூன்று ஜாதியினர் பலம் அதிகமாக இருந்தது. இருந்தும் முடிவில் பிராமண அணியினர் தோற்றனர்.

இவ்வளவு பலமான அணியாக இருந்தும் நாம் எப்படி தோற்றோம் என்பது அவர்களுக்கு புரியவில்லை. ஏனென்றால் அந்தக் கால பிராமணர்கள் எல்லோருமே சிறந்த வீரர்களாக இருந்தனர். அதனால அவர்கள் சத்திரியர்களிடம் போய், "நீங்கள் குறைவான எண்ணிக்கையில் இருந்து எப்படி ஜெயித்தீர்கள்?" என்று கேட்க, 'எங்களுக்கு ஒரு தலைவர்தான் உண்டு. அவர் என்ன சொல்கிறாரோ, அதன்படிதான் நாங்கள் கேட்போம். இன்னும் கேட்டுக் கொண்டிருக்கிறோம். நீங்களோ எல்லோருமே தலைவர்களாக விளங்கினீர்கள். அவர்கள் இஷ்டப்படி நடந்து கொண்டீர்கள். அதனால்தான் தோல்வி அடைந்தீர்கள்' என்றார்கள்.

இந்தக் கதை — 'பீஷ்மரின் ஒரே தலைமையின் கீழ் கட்டுப்பாடாக இயங்க வேண்டும்' என்று கர்ணனுக்கு விளக்க துரியோதனன் சொன்னது.

சிவக்குமார், பொள்ளாச்சி. அக்டோபர் 18 – 24; 1991.

**எந்த வயதில் பெண்கள் உஷாராக இருக்க வேண்டும்?**

பாட்டிகள்ல கூட மூணு வகை உண்டு.

முதலாவது — 'அந்த தங்கமான பாட்டி' — உயர் ரகம்!

ரெண்டாவது — 'அந்த கிழவி' — நடு ரகம்!

மூணாவது — 'அந்த கிழட்டு பிசாசு' — கடைசி ரகம்.

இப்படி பாட்டியாய் கூட உயர் ரகம் ஆகணும்ன்னு இருக்கும் போது பெண்கள் எல்லா வயசுலயும் கவனமா இருக்கறது அத்தியாவசியம். அதுக்காக நாம சந்தோஷப்பட முடியாது. 'தங்கமான தாத்தா', 'கிழவன்', 'கிழட்டு சனியன்' — இப்படி நம்மளுக்கும் கூட உண்டுங்கோவ்!

செந்தில், ஆத்தூர். அக்டோபர் 18 — 24; 1991.

**எனக்கு 'அது' வேண்டும். ஆனா கல்யாணம் வேண்டாம்?**

மூடி இல்லாம பாக்கெட்ல பேனாவை போடாதீங்க. சட்டை மட்டும் கெடாது...

சேதுபதி, ஈரோடு—5. அக்டோபர் 18 — 24; 1991.

**டெக்னிக்கலா ஏமாத்தறதுன்னா என்ன தலைவா?**

'சுயமாக கற்றுக் கொள்ளுங்கள்'னு ஒரு புத்தகத்தை பிரெஞ்சு நாட்டு பதிப்பகம் ஒண்ணு வெளியிட்டது. 200 பக்கங்கள் கொண்ட அந்த புத்தகத்தை எல்லாரும் விரும்பி வாங்கினாங்க. வாங்கினவங்க அதிர்ச்சி அடைஞ்சாங்க. ஏன் தெரியுமா? அதுல எல்லா பக்கங்களுமே வெள்ளைத்தாளாவே இருந்தது. முகப்புல மட்டும் ஒரு குறிப்பு. 'உங்கள் மனதில் தோன்றும் எண்ணங்களை எல்லாம் எழுதிக் கொண்டே வாருங்கள். அவற்றை வாசிக்க வாசிக்க உங்கள் லட்சியம் வடிவம் பெறும். அதுவே சிறந்த கல்வி' என்றிருந்தது. இதுதான் நண்பா நீங்க கேட்டது!

ஜி.எஸ். குமார், தாராசுரம். அக்டோபர் 18 — 24; 1991.

**ஒரு மனிதன் எதில் கவனமாக இருக்க வேண்டும்?**

'மூடனின் மனம் அவன் வாயில் இருக்கிறது. அறிவாளியின் வாய் அவன் மனதில் இருக்கிறது. நீ வாயைத் திறக்கும் போதெல்லாம் உள்ளத்தை திறக்கிறாய். ஆகவே கவனமாக இரு' — இப்படி 'யஸ்'ன்னு ஒரு அறிஞர் சொல்லியிருக்காரு.

முரளி ராஜசேகர், தஞ்சாவூர். அக்டோபர் 18 — 24; 1991.

**பெண்களை விட ஆண்கள் எந்த விதத்திலாவது உயர்ந்தவர்களா?**

நம்மளைப் பத்தி நாமளே அவ்வளவு குறைச்சலா எடை போட்டா எப்படிங்க?

பொண்டாட்டிக்கு பிரசவ வலி வந்து வார்டுக்கு போகும் போது அழகான குழந்தையா, ஆரோக்கியமான குழந்தையா பிறக்கணும்ங்கறது அவங்க கவலை. ஆனா வெளியே நிக்கற நாம, பொண்டாட்டிக்கு எந்த பாதிப்பும் இல்லாம குழந்தை பிறக்கணும்ன்னு பொண்டாட்டியைப் பத்தி முதல்ல கவலைப்பட்டு பிரார்த்திப்போம்.

இப்படி பல விஷயங்கள் நம்மகிட்டே இருக்குங்க. ஆனா, நம்மளைப் பத்தி நாம வெளியே சொல்லாம பெருந்தன்மையா சைலண்டா இருக்கோம்!

கே. ராஜபாலு, சேலம்—1. அக்டோபர் 18 – 24; 1991.

**சைட் அடடிப்பது – அடிக்கப்படுவது... எது தூள்?**

அடிக்கப்படுவது அதிர்ஷ்டம். அடிப்பது உழைப்பு.

அப்ப ரெண்டாவதுதான் தூள்!

எஸ். முருகையன், கடலூர். அக்டோபர் 18 – 24; 1991.



**நீங்கள், ரஜினி இருவரும் ஷூட்டிங் இல்லாத நேரங்களில் நெற்றியில் திருநீர் பூசிக் கொள்கிறீர்களே.. அதில் ஏதாவது 'பவர்' உள்ளதா?**

பவர் இருக்கறதுக்காக திருநீர் பூசறதில்லீங்க. ஒரு பக்திக்காகவும், மனசு திருப்திக்காகவும்!

'சார்லஸ் டபிள்யூ லெட் பீட்டர்'ன்னு ஒரு மேல்நாட்டுக்காரர், சிறந்த ஆராய்ச்சியாளர். அவர்கிட்டே, 'இந்திய நாட்டு கோயில்களில் கொடுக்கப்படும் பிரசாதங்களான விபூதி, குங்குமம் ரொம்பவும் மகிமை வாயந்தது'ன்னு ஒரு இந்தியர் சொல்ல, ஆராய்ச்சி பண்ண அவர் இந்தியா வந்துட்டாரு.

ஆராய்ச்சியை முடிச்சுட்டு, "நான் இந்தியாவின் தென் பகுதியிலுள்ள மதுரை மீனாட்சி அம்மன் கோயிலுக்குப் போனேன். அங்கு எனக்கு விபூதி குங்குமம் கொடுத்தார்கள். அதை நான் சோதித்துப் பார்த்தபோது மிகவும் அழுத்தமான காந்த சக்தி இருப்பதை உணர முடிந்தது. அது எனக்கு அதிசயமாக இருந்தது. அதைவிட அதிசயம் அந்த பிரசாதத்தை பல ஆண்டுகளுக்குப் பின் மீண்டும் சோதனை செய்து பார்த்தேன். அந்த அபூர்வமான காந்த சக்தி பல ஆண்டுகளுக்குப் பின்பும் சிறிதும் குறையாமல் அப்படியே இருந்தது!

இப்படி ஒரு அதிசயத்தை வேறு எந்த நாட்டிலும் நான் காணவில்லை"ன்னு சொல்லியிருக்காரு.

எஸ்.கே.எம். மோகன், கழிஞ்சூர். அக்டோபர் 18 – 24; 1991.

**பெண்ணாசை, பொன்னாசை இதில் எது அதிகம் சேதம் விளைவிப்பது?**

'பெண், பொன்' ரெண்டாலயும் சேதாரம் இல்லைங்க. ஆனா ரெண்டு கூடவும் கடைசியில சேர்த்திருக்கிங்க பாருங்க... அது அளவு மீறும் போதுதான் சேதாரமே ஆரம்பமாகுது.

ம. கிருபாகரன், மன்னார்குடி. அக்டோபர் 18 – 24; 1991.

**நினைத்ததை சாதிப்பதற்கு எளிய வழி எது?**

சாதிக்க நினைச்சதை துணிஞ்சு முதல்ல எல்லார்கிட்டேயும் சொல்லிருங்க. அப்புறம் செயல்ல இறங்குங்க. தாமதம் ஆக ஆக, எல்லாரும் கிண்டலடிக்க அடிக்க உங்களுக்கு ஒரு வைராக்கியம், வேகம் தானா வரும்! முதல்ல சாதாரணமா நினைச்ச நினைப்பு இப்ப மனசோட இறுகி, சாதனையை நோக்கி முன்னேறும்!

நா. பார்த்தசாரதி, அன்னூர். அக்டோபர் 25 – 31; 1991.

**இந்தியா முன்னேற ஏதாவது ஒரு வழி சொல்ல முடியுமா?**

"எந்த நாட்டில் மக்கள் குருட்டுப் பழக்க வழக்கங்களிலும், மயக்கமுற்ற அறிவிலும் ஈடுபட்டதால் அறம் குறைந்திருக்கிறதோ...

- எந்த நாட்டு மக்கள், தங்கள் நாட்டில் விளைச்சல் இல்லாத (இறக்குமதி செய்த) உணவை உண்கிறார்களோ, நமது நாட்டில் நெய்யாத ஆடையை அணிகிறார்களோ,

- எந்த நாட்டில் போக்கிரி குண்டர்களை 'வீரன்' என்று போற்றுகிறார்களோ,

- எந்த நாட்டு மக்கள் பழங்காலப் பெருமையை பாடிக் களித்து இப்போது நம் நாட்டில் உள்ள துன்பங்களை களைய முற்படாமல் இருக்கிறார்களோ,

- எந்த நாட்டில் அரசியல்வாதிகள் தந்திரம் மிக்க குள்ள நரிகளாகவும், மெய்ஞானிகள் வெறுமனே தத்துவ வாத கண்ணாமூச்சி ஆடுவதில் கெட்டிக்காரர்களாக பொழுதைக் கழிக்கிறார்களோ,

- எந்த நாட்டில் கலை, இலக்கியம் இவை தாழ்ந்த உணர்ச்சிகளை தூண்டி விடுவதில் முன்னணியில் இருக்கிறதோ,

- எந்த நாட்டில் பல பகுதிகள் பிளவுபட்டு, ஒவ்வொரு பகுதியும் 'தானே நாடு' என்று செருக்கோடும், தான் தோன்றித் தனமாகவும் நடந்து

கொள்கிறதோ, அந்த நாட்டுக்காக இரக்கப்படுங்கள்"ன்னு உலகப் புகழ்பெற்ற மேதை 'கலீல் கிப்ரான்' சொல்லியிருக்காரு.

ஆக, நீங்க கேட்ட முன்னேற்றம் கிடைக்கும்ன்னு இப்ப ஒரு ஐடியா தோணுதில்லே?

ஆர். பரமானந்தம், வந்தகடம்பை. அக்டோபர் 25 – 31; 1991.

**பெண் மனசு ஆழமா? அழுத்தமா?**



தா. தர்மசீலன், தர்மபூமி. அக்டோபர் 25 – 31; 1991.

**விரசமானவை இலக்கியமாக மரியாதை பெறுமா?**

அமெரிக்க கவிஞர் வால்ட் விட்மனுக்கு அவரோட ரசிகை ஒருத்தி எழுதின கடிதம்.

'அன்பரே! தூய்மையான என் 'கரு'ப்பை தங்கள் குழந்தைக்காக காத்திருக்கிறது. தாங்கள் வந்து உலகத்தின் தலைசிறந்த புதையலை எனக்கு தரும் வரை தேவதைகள் கருவறையின் தலைவாசலை காவல் காத்துக் கொண்டிருப்பார்கள். நம் மகன் — அவனை நீங்கள் நேசிக்கவில்லை? வெட்ட வெளியில் குன்றின் உச்சியில் நாம் சந்திக்க வேண்டும்!

இந்த ரசிகையின் கடிதம் இலக்கியமா போற்றப்படுது.

கே.சி.ராஜாராம், சின்னகோட்டகுளம். அக்டோபர் 25 – 31; 1991.

**ஒரு பெண்ணை நம் திசைக்கு திருப்ப என்ன செய்ய வேண்டும்?**

சுலபமான வழி; அவள் போகும் திசையில் அவளுக்கு முன்னால் நாம் போக வேண்டும்!

ரேவதிப்ரியன், திருவாரூர்.

**சுருக்கமாக டக்கென்று பதில் தேவை. கடவுள் இருக்கிறாரா?**

ஹெரால்டு ஒரு நாத்திகர்.

வீடு பூராவும், 'God is Nowhere'ன்னு எழுதி வச்சாரு. அவரோட கடைசி காலத்துல அவருடைய பேரனை கூப்புட்டு தன் கொள்கையை வலியுறுத்த, தான் எழுதி வச்ச வாசகத்தை படிக்கச் சொன்னாரு.

குழந்தை எதார்த்தமா அதே வாசகத்தை `God is Now Here'ன்னு (கடவுள் இப்போது இங்கே இருக்கிறார்) படிச்சது.

அப்ப அவருக்கு தலை சுத்துன மாதிரி எனக்கும் சில விஷயங்கள் நடந்திருக்கு. எப்பவாவது உங்களுக்கும் தலை சுத்தற விஷயம் நடக்கற வரைக்கும் கடவுள் இல்லை.



பாக்யமணி, தூத்துக்குடி. அக்டோபர் 25 — 31; 1991.

**சாதாரணமாக உபதேசம் செய்பவர்கள் உயர்ந்த இடத்திலும், உபதேசம் பெறுபவர்கள் தாழ்ந்த இடத்திலும் இருப்பதுதான் உலக இயல்பு. பிரணவ மந்திரத்தை உபதேசம் செய்ய வந்த முருகப் பெருமான் தன் தந்தையென்றும் பாராமல் உயர்ந்த இடத்தில் இருந்துதான் மந்திரத்தை உபதேசம் செய்ததாக உணர்கிறோம். ஆனால் கண்ணன் மட்டும் தாழ்ந்த இடத்திலிருந்து உயர்ந்த இடத்தில் உள்ள பார்த்தனுக்கு கீதையை உபதேசம் செய்ததின் தத்துவ விளக்கம் என்ன?**

நாம் என்னதான் மேலே போயிட்டாலும், கீழே இருக்கிறவங்க கிட்டேயும் எவ்வளவோ தெரிஞ்சுக்க வேண்டியிருக்கு. இப்படி எடுத்துக்கங்களேன்.

சுந்தரேசன், நாகர்கோவில். அக்டோபர் 25 — 31; 1991.

**பெண்டாட்டி கர்ப்பமாக இருக்கிறாள். என்னாலயும் முடியலை. என்ன செய்யலாம்?**

“எப்போதும் குறை சொல்லப்படும் சூழ்நிலையில் வளரும் குழந்தைகள் மற்றவர்களை குறை சொல்லிக் கொண்டே இருக்கும்.

விரோத மனப்பான்மை உள்ள சூழ்நிலையில் வளர்ந்தால், சண்டை போடும் குழந்தைகளாக இருக்கும்.

மற்றவர்களால் ஏளனத்துக்குள்ளாகும் சூழநிலையில் வளர்ந்தால் கூச்ச சுபாவத்துடன் இருக்கும்.

பொறுமையான சூழ்நிலை, குழந்தைக்கு சகிப்புத் தன்மையை கற்றுத் தரும்.

உற்சாகப்படுத்தி வளர்த்தால், தன்னம்பிக்கையுடன் வளரும்.

பாராட்டுக்களை பெறுவதற்கு வாய்ப்பு பெற்ற குழந்தை நல்லவற்றை

போற்றும்; பண்புடன் வளரும்.

நட்புணர்வோடும், வரவேற்போடும் வளர்க்கப்படும் குழந்தை உலகமே அன்புமயமானதாக இருப்பதை போல மகிழும்!'

இதை உருப் போட்டுட்டே இருங்க. பின்னால உங்க குழந்தையை உருப்படியா வளர்க்கலாம்.

நாதன், சத்துவாச்சேரி. அக்டோபர் 25 – 31; 1991.



**நான் எதைச் செய்தாலும் ஏதாவது தடங்கல் வருகிறது சார்!**

நல்ல வளர்ச்சிக்கு ஆரம்ப அறிகுறியே எதிர்ப்புதான். ரயில் முதன் முதலா ஓடத் தொடங்கினப்ப மேல்நாட்லயே 'இது சாத்தானின் கண்டுபிடிப்பு'ன்னு மதகுருக்கள் சீறினாங்க.

"15 மைல் வேகத்துக்கு மேல போனால் பிரயாணிகள் ரத்தம் கக்கி சாவார்கள். நீராவியால் ஓடுவதைப் பார்ப்பவர்களுக்கு பைத்தியம் பிடிக்கும்"ன்னு கூட சொன்னாங்க. அதையும் மீறித்தான் ரயில்வே வளர்ந்தது.

எதிர்ப்பைக் கண்டு சஞ்சலமே வேண்டாம். துணிஞ்சு செய்யுங்க.

கோபிகிருஷ்ணா, பம்பாய்–70. அக்டோபர் 25 – 31; 1991.

**வென்று காட்ட முடியாத ஒன்று என்ன? (Execpt மரணம்) திருட்டு முழி முழிக்காதீர்!**



ஒரு கரையான் புத்து கட்டுங்க. ஒரு தூக்கணாங் குருவி கூடு கட்டுங்க. ஒரு சிலந்தி வலை பின்னுங்க.

ஒண்ணுக்கு மூணாச்சு. இந்த மாதிரி இன்னும் எவ்வளவு வேணும். சொல்லுங்க!

பானுதாசன், திருத்துறைப்பூண்டி. அக்டோபர் 25 — 31; 1991.

**தெய்வம் எப்போது தரிசனம் தரும்?**

நாம கோவிலுக்கு போறோம். அங்கே அஞ்சு தலை நாகச் சிலை இருக்கும். நாகராஜ சாமின்னு கையெடுத்து கும்பிடறோம்.

வீட்டுக்குள்ள நுழைஞ்சா ஒரு குட்டிப் பாம்பு தெரியுது.

'ஐயோ... பாம்பு, பாம்பு'ன்னு அலறுவமே தவிர, 'ஹையா! வீட்டுக்கே நாகராஜ சாமி வந்துருச்சு'ன்னு கையில தூக்கி கொஞ்சறமா?

நம்மளைப் பத்தி சாமிக்கு தெரியும். அதான் இதுவரைக்கும் தரிசனம் தரலை.

அவ்வை மு. ரவிக்குமார், அரக்கோணம்.

**பெண்கள் விஷயத்தில் ரொம்ப வீக். முன்னேற முடியமா?**

கிருஷ்ணர் மாதிரி கீதையே எழுதலாம். கவலைப்படாதீங்க.



கே. இந்து குமரப்பன், விழுப்புரம்—2.

**அப்பாவுக்கும் எனக்கும் அடிக்கடி மனஸ்தாபம் ஏற்படுகிறது. அதைத் தீர்க்க ஒரு வழி கூறுங்களேன்?**

அந்த குமரப்பனும் கூட இதே மாதிரிதான் அடிக்கடி கோவிச்சுக்குவாரு. அம்மா பக்குவமாக அப்பாவைப்பத்தி எடுத்துச் சொன்ன பின்னாடி சமாதானம் ஆயிடுவாரு.

அந்த மாதிரி உங்க அப்பாவைப் பத்தி எடுத்துச் சொன்ன பின்னாடி சமாதானம் ஆயிடுவாரு.

அந்த மாதிரி உங்க அப்பாவைப் பத்தி நீங்களும் உங்க அம்மாகிட்டே கேளுங்க. அட்ஜஸ்ட் ஆயிருவீங்க!

சண்முகம், பம்பாய்—3. அக்டோபர் 25 — 31; 1991.

**இலைமறைவு, காய்மறைவு என்கிறார்களே... அது என்ன?**

நம் முன்னோர்களும், ரிஷிகளும் சொன்ன சில விஷயங்கள்ல ஒரு விஷயத்தை உதாரணத்துக்கு எடுத்துக்கிட்டா, 'இலை மறைவு... காய் மறைவா' அவங்க சொன்ன மெய்ஞானம் நமக்குப் புரியும்.



புராணத்துல அவங்க சொன்னது சூரியதேவனின் மகன்தான் சனீஸ்வரன். இன்னைக்கு விஞ்ஞானம் சொல்றது — 'சூரியனிலிருந்து சிதறிய துண்டுதான் சனி'!

சூரிய ஒளியை குறைப்பதற்காக 'விசுவகர்மா'ங்கற தெய்வ தச்சன் 'சூரியனை' செதுக்கிட்டு விட்டார்ன்னும், அப்படி செதுக்கிய அளவு 12ல் ஒரு பங்குன்னும் மார்க்கண்டேய புராணம் சொல்லுது.

ஆனா அந்த அளவு 8ல் 1 பங்குன்னு விஷ்ணு புராணம் சொல்லுது.

இப்ப விஞ்ஞானிகள் கணக்குப்படி சூரியனின் குறுக்களவு 9 லட்சம் மைல். அதிலிருந்து சிதறிய சனியின் குறுக்களவு 76 ஆயிரம் மைல். (இது 12ல் 1 பங்கு ஆகுது. மார்க்கண்டேய புராண கூற்றுப்படி இது சரி)

ஆனா சனியின் வெளி வளையத்தோட கணக்கிட்டா 110 ஆயிரம் மைல் குறுக்களவு. இது 8ல் 1 பங்கு (ஆக, விஷ்ணு புராணப்படி இதுவும் சரி)

மொத்தத்துல புராணத்துல 'இலை மறைவு காய் மறைவா' இருக்கற விஞ்ஞான சமாச்சாரம் ஏராளம்!

குமரகுருபரன், திருத்துறைப்பூண்டி. நவம்பர் 1 – 7, 1991.

**அடுத்தவர்களிடம் கையேந்தி வசூல் செய்து, பொதுக் காரியங்களுக்கு உதவுவது எந்த விதத்தில் நியாயம்? (உதாரணத்திற்கு உங்கள் 'இன்ப அதிர்ச்சி')**

ஒருநாள் மகாலட்சுமிக்கும் மகா விஷ்ணுவுக்கும் பெரும் வாக்குவாதம் வந்துருச்சு.

கிருஷ்ணாவதாரத்துல மகாவிஷ்ணு நடந்துக்கிட்ட முறை தன்னோட பெருமைக்கு மகா இழுக்குன்னு மகாலட்சுமி குத்தம் சாட்டுனாங்க. அதாவது, "நான் அஷ்ட ஐஸ்வர்யங்களுக்கும் அதிபதி. அப்படி இருக்க, மூடனான துரியோதனனிடம் போய், 'பாண்டவர்களுக்காக ஐந்து வீடாவது கொடு' என்று நீங்கள் சொன்னீர்களே, அது என் பெருமைக்கே கேவலம். என் கணவர் கையேந்தலாமா?"ன்னு கேட்டாங்க.

அதுக்கு பகவான் சொன்னாரு.

"தான் - தன் தேவைக்காக கையேந்துவதுதான் கேவலம். அது பிச்சை. சத்தியத்தைக் காக்க, பிறர் நலனுக்காக கையேந்துவது தர்மம். பஞ்ச

பாண்டவர்களுக்காக சத்தியத்தை நிலைநாட்ட நான் துரியோதனனிடம் சென்று கேட்டது பிச்சை அல்ல. தர்மம்"ன்னாரு.



பொதுக் காரியங்களுக்காக சுயநலமின்றி டொனேஷன் கேக்கறதும், பிறர் கஷ்டத்துக்கு உதவ, 'இன்ப அதிர்ச்சி'க்கு மத்தவங்க உதவிகளையும் எதிர்பார்க்கறது தர்மம்தான், தப்பில்லை.

எம். பாலச்சந்தர், சித்தோடு. . நவம்பர் 1 — 7; 1991.

**பிரம்மச்சரியத்தை எப்படி கடைபிடிக்கலாம்?**

நல்ல ஆளைப் பார்த்து கேட்டீங்க போங்க!

எஸ். பன்னீர் செல்வம், பட்டுக்கோட்டை. . நவம்பர் 1 — 7; 1991.

**ஞானக் கண்ணால் பார்ப்பது என்பது நிஜமா?**

பிறக்கும் போது பார்வையோட பிறந்த 'வாங்கா டிமிட்ரோவா' கண் சிகிச்சைக்காக தகப்பனோட போனாள். ஆனா சிகிச்சை பலன் தரலை. பார்வை போய்டுச்சு. அதுக்கு பதிலா திடீர்னு குறி சொல்ற ஆற்றல் வந்துருச்சு. தன்னோட வர்ற தந்தை விரைவில மரணமடைவார்ன்னு முதல் குறி தன் குடும்பத்துக்கே சொன்னாள்: அது பலிக்க அக்கம் பக்கத்தில் இருக்கறவங்களுக்கும் சொல்ல ஆரம்பிச்சா.

யாராவது அவளுக்கு எதிர்ல வந்து நின்னா, தானே அவங்களோட சரித்திரத்தை சொல்லி, எதிர்காலத்தையும் சொல்லுவா. ஜாதகம், பெயர், ராசி எதுவும் கேட்பதில்லை.

இவள்கிட்டே குறி கேட்டவங்க, அப்படியே பலிக்குதுன்னு சொல்ல, பல்கேரியா நாட்ல இருக்கறவங்க மட்டுமில்லாம வெளியூர்கள்லேர்ந்து குறி கேக்க வந்தாங்க.

ஒரு நாவலாசிரியர் அவளுக்கு எதிரே வந்து நின்னபோது, அப்போ அவர் எழுதி வச்சிருந்த கதையை அப்படியே ஒப்பிச்சதோட, 'நீர் வைத்த முடிவு சரியில்லை. நான் சொல்கிற மாதிரி மாற்றினால் லட்சக்கணக்கில் விற்பனையாகும்'னு சொல்ல, அதன்படி அவர் முடிவை மாத்தி அமைச்சாரு. அவள் சொன்ன மாதிரியே லட்சக்கணக்குல வித்துச்சு.

இப்படி அவள் புகழ் பரவியதும், பல்கேரிய அரசு அவளை அரசாங்க பொறுப்புல ஏத்துக்கிட்டு, அதுக்கு முன்னால அவள் சொன்ன குறிகள் எல்லாம் நிறைவேறியதான்னு ஒரு கமிட்டி போட்டு ஆய்வு செஞ்சது. 90

சதவிகிதத்துக்கு மேல் சரியா இருக்கறதை அந்த கமிட்டி கண்டு பிடிச்சது. அப்புறம் அந்த அரசாங்கம் குறி கேக்கும் உள்ளூர்காரர்களுக்கு 5 டாலர்கள்னும், வெளிநாட்டவருக்கு 50 டாலர்களும் வசூல் செய்தது. அவளுக்கு மாதச் சம்பளம் சுமார் 200 டாலர் (சுமார் ரூ. 3,000 வரை) கொடுத்துச்சு.



இதுக்கு என்ன சொல்றீங்க?

நம்ம பகுத்தறிவை மிஞ்சின பல விஷயங்கள் உலகம் முழுசும் இருக்கு. கடவுள், மதம், விதி இதெல்லாம் மூட நம்பிக்கைன்னு கண்டிக்கிற கம்யூனிஸ்ட் நாடு பல்கேரியா. அந்த நாடு, குறி சொல்ற 'வாங்கா டிமிட்ரோவா' பெண்மணியை அரசாங்க சம்பளம் கொடுத்து 'அதிகார பூர்வமான குறி' சொல்ல நியமிச்சுருக்குன்னா ஞானக் கண்பார்வை ஒத்துக்கக் கூடியதுதானே?

எட்டி. பி.ஏ., இராவத்தநல்லூர். நவம்பர் 1 — 7: 1991.

**தலைவா! ஒரு நாட்டுக்கு கவிஞர்கள் முக்கியமா, அறிஞர்கள் முக்கியமா?**

"அறிஞர்களின் கருத்துக்களை எல்லோரையும் ஈர்க்கும் வகையில் இன்னும் கொஞ்சம் அழகுபடுத்துபவர்கள் கவிஞர்கள்"

இயல்பாகவே அறிஞர்களாக இருக்கும் கவிஞர்களும் உண்டு.

சின்னப்பா, வைத்தியநாதன் பேட்டை. நவம்பர் 1 — 7: 1991.

**குடும்பத்தின் பொறுப்பு அம்மா கையிலா, அப்பா கையிலா, பிள்ளைகள் கையிலா?**

சீதை இன்னொருத்தரோட சம்சாரம். ராவணன் அவளை வலுக்கட்டாயமா தூக்கிட்டு வந்தப்ப, சம்சாரமான மண்டோதரி கண்டிச்சிருக்கணும். இல்லை, புள்ளை இந்திரஜித் கண்டிச்சிருக்கணும். ஒரு தம்பி கும்பகர்ணனும் தூக்கத்துல இருந்துட்டான். தப்புன்னு சொல்லி கேட்டதால இன்னொரு



தம்பி விபீடணனும் வெளியே வந்துட்டான். கடைசியில ராவணன் குடும்பமே அழிஞ்சது.

ஆக, குடும்பத்தோட பொறுப்பு — குடும்பத்துல இருக்கற ஒவ்வொருத்தர் கிட்டேயும் இருக்கணும்.

ஏரல் எஸ். யோகலிங்கம், சென்னை—82. நவம்பர் 1 — 7; 1991.

**காதலிக்கத் தேவை அறிவா, அழகா?**

ஆணுக்கொரு பெண்ணும், பெண்ணுக்கொரு ஆணும்.

பி. குமார், சேலம்—6. நவம்பர் 1 — 7; 1991.

**இந்து, முஸ்லிம், கிறிஸ்துவம் ஆகிய மூன்று மதங்களில் தங்களைக் கவர்ந்த மதம் எது?**



'ஓம் சாந்தி, சாந்தி சாந்தி'ன்னு 'அமைதி'யைத் தேடி இறைவனை வேண்டினாங்க.

'பூமியில் அமைதி நிலவுக' இதுதான் கிறிஸ்துவ மத பிரார்த்தனையின் முக்கிய அம்சம்.

'இஸ்லாம்' என்ற சொல்லுக்கே 'அமைதி' என்பதுதான் பொருள்.

'அமைதியே வீரத்தை விடச் சிறந்தது' இது ஜைன மதத்தை நிறுவிய மகாவீரர் சொன்னது.

இப்படி எல்லா மதங்களும் அமைதியைத்தான் போற்றுது. இருசாராரும் இதை ஞாபகம் வெச்சுக்கிட்டா போதும்.

சத்யா இலக்குரன், சின்னசேலம். நவம்பர் 1 — 7; 1991.

**வாழ்க்கையில் முன்னேற ஒரு வழி சொல்லுங்களேன்.**

உங்க கேள்விக்கு என் பதிலை எதிர்பார்க்காம நீங்களே சுயமா பதில் எழுதுங்க. முன்னேற ஆரம்பிச்சுட்டதா அர்த்தம்.

என். மோகனசுந்தரம், கம்பைநல்லூர். நவம்பர் 1 — 7; 1991.

**பெண்களின் மனதை சரியாக புரிந்து கொள்ள முடிவதில்லையே, ஏன்?**

அவங்கதான் எப்பப் பார்த்தாலும் மூடி வெச்சிருக்காங்களே! என் பண்ணச் சொல்றீங்க? எனக்கும் உங்க சிக்கல்தான்!

என். பிரதா, தூத்துக்குடி—3. நவம்பர் 1 — 7; 1991.

**நல்லவனாக இருந்தும், கெட்ட பெயர் தானாக வருகிறதே?**

&

செந்தில்நாதன், திருப்பதி. நவம்பர் 1 — 7; 1991.

**தவறே செய்யாவிட்டாலும் அனாவசியமாக எனக்கு கெட்ட பெயர் வருகிறது. ஏன் என்றே புரியவில்லை.**

“வாயை மட்டும் கப்சிப் என்று மூடிக் கொண்டிருந்து விட்டால், நம்மால் எந்த சிக்கலும் வராது; நாமும் எந்த சிக்கலிலும் மாட்டிக் கொள்ள மாட்டோம். யாரிடமும் ஏதொன்றும் சொல்ல வாயெடுக்கும் முன், சொல்லப் போகிற விஷயத்தை மனதுக்குள் சொல்லிப் பார்த்து, கொஞ்சம் தூசி தட்டி துடைத்துக் கொள்ளுங்கள். இதைச் செய்யும் போது, சில சமயம் அந்த விஷயத்தை சொல்ல வேண்டிய தேவையே இல்லை என்பது புரிந்து போகும். பேசிப் பேசி கருத்து வெளியீடு செய்வதெல்லாம் கொஞ்சம் ஆராய்ந்து பார்த்தால், வெறும் வாய்க்கொழுப்பு என்று புரியும்”

நோபல் பரிசு வாங்கின ‘ஜான் ஸ்டெயின் பெக்’ங்கற எழுத்தாளர் தன்னோட ‘இனிய வியாழக்கிழமை’ நாவல்ல மேலே சொன்னமாதிரி எழுதியிருக்காரு.

‘யாகாவார் ஆயினும் நாகாக்க’ன்னு நம்ம வள்ளுவரும் சொல்லியிருக்காரு.

அதனால முடிஞ்ச வரைக்கும் நீங்க யோசிச்சு பேசுங்க.

*(பின்குறிப்பு: இதெல்லாம் இவ்வளவு விபரமா எழுதத் தெரிஞ்சும் அப்பப்ப முட்டாள்தனமா வாயைக் கொடுத்தும் வார்த்தை கொடுத்தும் மாட்டிக்கிற என் லிஸ்ட்டுல வந்துராதீங்க!)*

புரட்சிதாசன், திருமழபாடி. நவம்பர் 1 — 7; 1991.

**புரட்சி என்றால் என்ன?**

*தீர்வு காண ஆரம்ப முயற்சி.*

தி. மனோஜ்குமார், ஈரோடு. நவம்பர் 1 — 7; 1991.

**தோல்விக்கு மருந்து எது?**

*வெற்றி. வெற்றிக்குத் தேவை விடாமுயற்சி.*

க. இளங்கோ, சீர்காழி. நவம்பர் 1 — 7; 1991.

**அவ்வப்போது கண் சிமிட்டினா தப்பா பிரதர்?**

உடலியல்படி கண் சிமிட்டறது கட்டாயத் தேவை. மனிதன் ஆறு செகண்டுகளுக்கு ஒரு முறை கண் சிமிட்டறான். அப்படி சிமிட்டும் போது ஒரு திரவம் சுரந்து, விழிகளை சுத்தப்படுத்துது. தூசி, துப்பு போன்ற நுண்ணிய அந்நியப் பொருட்களை வெளியேத்துது. அதுக்காக கண்சிமிட்டியே தீரணும். ஆனா எதிரே யார் இருக்காங்க, என்னான்னு பார்த்துட்டு எச்சரிக்கையா கண் சிமிட்டுங்க பிரதர்.

திலகவதி. அரூர். நவம்பர் 8 — 14; 1991.

**ஒரே. குழப்பமாக இருக்கிறது. சாமி இருக்கிறதா?**



ரேடியோவை முதல் முதலா கண்டுபிடிச்ச 'மார்கோனி' தன்னோட முதல் ரேடியோ பேச்சுல சொன்னது.

"என் தகப்பனார் 'பரமண்டலத்தில் இருக்கும் பரம பிதாவே' என்று ஜெபம் சொல்லும் போதெல்லாம் எனக்கு சிரிப்பாக இருக்கும். 'நம் அப்பா பூமியிலிருந்து சொல்கிற ஜெபம், பரமண்டலத்தில் இருக்கும் கர்த்தர் காதில் விழுமா?' என்று நினைப்பேன். ஆனால் இப்போது நானே ரேடியோ கண்டுபிடித்து பேசுகிறேன். என் பேச்சு ஆயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள உங்கள் காதுகளில் விழும்போது, என் அப்பாவின் ஜெபம் ஏன் கர்த்தர் காதில் விழுந்திருக்கக் கூடாது என்று இப்போது உணர்கிறேன்.

அதனால இந்த மாதிரி ஏதாவது நடந்து, உங்களுக்கா ஒரு நம்பிக்கை வர்ற வரைக்கும் 'சாமியை மறந்துட்டு, வேலை வெட்டியைப் பாருங்க. பெரியவங்களுக்கு மரியாதை கொடுங்க. அம்மா, அப்பாவுக்கு சோறு போடுங்க. ஏழை, எளியவர்களுக்கு முடிஞ்ச உதவியைப் பண்ணுங்க. அது போதும்.

அ. ஆனந்த். கரூர். நவம்பர் 8 — 14; 1991.

**தனிக்குடித்தனம், கூட்டுக் குடித்தனம் எது சிறந்தது?**

பிளேட்டில் இருந்தால் என்ன? இலையில் போட்டால் என்ன? சாப்பாடு இருக்கணும். அதுதானே முக்கியம்!?

அது போல, எந்த குடித்தனமா இருந்தாலும், அண்டர்ஸ்டாண்டிங் இருக்கணும். அப்போதான் சுமூகமா வண்டி ஓடும்.



யோகாம்பாள் நாகர்கோவில். நவம்பர் 8 — 14; 1991.

**சினிமாவில் அவ்வப்போது 'என்ன கேரக்டர்?' என்கிறார்களே... அது என்ன 'கேரக்டர்?'**

'அம்ச தூளிகா' மஞ்சம் — இது அந்தக் காலத்துல ராஜா ராணிங்க படுக்கற கட்டில். இதை தயார் பண்றதுக்குன்னு தனியா ஒரு வேலையாள் இருப்பாங்க. அந்த அளவுக்கு அதுல வேலை.

முதல் நல்ல கம்பளம் விரிக்கணும். அப்புறம் பஞ்சு மெத்தையை விரிக்கணும். அதுமேலே காம்பு இல்லாத பூவிதழ்கள் தூவணும். அதும் விதவிதமான மலர்கள்ல ஏழடுக்குகள் தூவணும். அது மேல மெல்லியதா ஏழாவது விரிப்பு. அதுக்கு மேலதான் ராஜா ராணி படுக்கணும்!

ஒரு ராஜாவுக்கு ஒரு வேலைக்காரி இந்த 'அம்ச தூளிகா' தயார் பண்றது வழக்கம். ஒருநாள் அந்த வேலைக்காரி 'அம்ச தூளிகா' தயார் பண்ணும்போது, அசதியில் அந்த படுக்கையில படுத்து தூங்கிட, ராஜா வந்து பார்த்துட்டாரு. எழுப்பி ஒரு சவுக்கடியை தண்டனையா கொடுக்க, வேலைக்காரி சிரிச்சுட்டே, "ஒருநாள் அம்ச தூளிகாவுல தூங்கினதுக்கே ஒரு சவுக்கடின்னா, தினம் தினம் தூங்கற நீங்க, நமக்கெல்லாம் எஜமானான பகவான்கிட்டே எத்தனை சவுக்கடி வாங்கப்ப போறீங்களோ?"ன்னு கேட்டாங்க.

இப்ப இதுல வேலைக்காரி ஒரு டைப்பான கேரக்டர்.

அதே வேலைக்காரி தூங்கும் போது வந்து பார்த்த மகாராஜா, அவளை எழுப்பப் போனவங்களை தடுத்து நிறுத்தி, "ஒவ்வொரு நாளும் எனக்காக எவ்வளவு சிரமத்தோட இந்த அம்ச தூளிகாவை அந்த வேலைக்காரியம்மா ரெடி பண்ணாங்க! ஒரு நாளைக்கு அவங்க படுத்தா தப்பில்லை. நான் இன்னிக்கு கீழே படுக்கறேன்"னு சொன்னா, இப்ப ராஜா ஒரு வித்தியாசமான நல்ல கேரக்டர்!

வி. கிருபாகரன், மன்னார்குடி. நவம்பர் 8 — 14; 1991.

**கவலையில்லாத மனிதன் யாருங்க?**

கவலையில்லாத மனிதன் யாருங்க!

முருகேசன், திருவேற்காடு. நவம்பர் 8 — 14; 1991.

**நம் நாட்டில் ஏன் அதிகம் விஞ்ஞானிகள் இல்லை?**

நம்பிக்கை என்பது ஒருநாளிலே
உதிர்ந்து விடும் பூக்களாக
இருந்து விடக்கூடாது. மேலும்
மேலும் மலரை உருவாக்கும்
செடியாக இருக்க வேண்டும்.

காமேஷ்.

நோய்க்கு முன் ஆரோக்கியத்தையும்,
ஏழ்மைக்கு முன் செல்வத்தையும்,
சாவுக்கு முன் வாழ்வையும் –
விலை மதிக்க முடியாத பொருளாக
நினைக்க வேண்டும்.

முஷ்தாக்.

'தன்னை அறி' என்பதன் பொருள்
இதுதான். உங்களுக்குத்
தெரிந்ததோடும், உங்களால் செய்யக்
கூடியதோடும் நன்கு உறவாடுங்கள்.
வெற்றி பெறுங்கள்.

மெனான்டர்
ஏ. சாமிநாதன்.

பல தன்மைகள் வாய்ந்த நண்பர்கள்
தொடர்பை விட, பொறுக்கி எடுக்கப்
பட்ட சில புத்தகங்களின் உறவு நமக்கு
அதிக நன்மையை அளிக்கும்.

கோல்டன்
வி. பவுனுப்ரியா.

பின்னால் பார்த்துக் கொள்ளலாம் என்ற
வீதிகளின் வழியே நடப்பவன்,
ஒருக்காலும் பார்க்க முடியாது என்ற
வீட்டைத்தான் அடைவான்.

செர்வான்டிஸ்
கோபி ஜி.கே.எஸ். மூர்த்தி.



உயிர் பிரியும் நேரத்தை விட, உறவு
பிரியும் நேரம் மிகக் கொடுமையானது.

காமேஷ்.

கெட்ட செய்திகளை விட,
அதிர்ஷ்டத்தை தாங்கத்தான் பெருங்
குணங்கள் தேவை.

பிரான்ஸ் நாட்டுப் பழமொழி
பி.எம். சாதிக் பாட்சா.

ஊக்கமுள்ள மனிதன் அங்கும் இங்கும்
நிற்காமல் தன் கடமைகளை தொடர்ந்து
செய்து கொண்டே இருப்பான்.

எமர்சன்
ஈரோடு மதுரைவீரன்.



*19ம்* நூற்றாண்டு வரைக்கும் மேல் நாட்டுக்காரங்க, 'உயிர் இனங்கள் தோன்றி *5000* வருஷம்தான் ஆச்சு'ன்னு சொல்லிட்டிருந்தாங்க. ஆனா இப்ப இந்த *20ம்* நூற்றாண்டுல, 'பூமியில் உயிர் என்கிற அற்புதம் *200* கோடி ஆண்டுகளுக்கு முன்னாலேயே தோன்றியது"ன்னு கண்டுபுடிச்சு சொல்றாங்க. நம்ம ஊர்க்காரர் மாணிக்கவாசகப் பெருமான் சில நூற்றாண்டுகளுக்கு முன்னால தோன்றி பாடுன தேவாரத்துல,

**'அண்டப் பகுதியின் சண்டப் பிறக்கம்**
**அளப்பரும் தன்மை வளப்பெரும் காட்சி**
**ஒன்றனுக்கொன்று நிந்றெழில் பகரின்**
**நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன'**



அதாவது, "வானவெளியில் பல அண்டங்கள் இருந்தன.. பல கோடி ஆண்டுகளுக்கு முன் உயிர்கள் தோன்றின" இது அர்த்தம்.

இங்கே இருந்த நம்ம மதுரைக்காரருக்கு இதெப்படி கணக்கு போட முடிஞ்சது? இது இன்னைக்கு வரைக்கும் யாருக்கும் புரியலை. நம்ம ஞானிகள்கிட்டே மெய்ஞானமும் இருந்தது. விஞ்ஞானமும் இருந்தது. ஆனா அத்தனையும் பாட்டா இருந்ததாலே சிலது புரியலை. சிலது புரிஞ்சாலும் நம்ப முடியலை.

வெங்கடரத்னம் பொள்ளாச்சி. நவம்பர் 8 – 14: 1991.

**'அது'க்கு ஏத்த வயசு எது நைனா?**

"அழகனாக வேண்டுமா? இருபத்தைந்து வயதுக்குள் ஆகி விடு.

பணக்காரனாக வேண்டுமா? முப்பத்தைந்து வயதுக்குள் ஆகிவிடு.

அறிவாளியாக வேண்டுமா? நாற்பத்தைந்து வயதுக்குள் ஆகிவிடு.

'எது'க்குன்னு புரியாததால, இருக்கற மூணுக்குமே கணக்கு சொல்லிட்டேன் நைனா!

முத்தமிழன். திருநகர். நவம்பர் 8 – 14: 1991.

**என் கருத்தும், என் சம்சாரத்தின் கருத்தும் முரண்பாடாக இருக்கிறது. எங்கள் உறவு நிலைக்குமா என்று சந்தேகமாக இருக்கிறது.**

உலகத்துல 'முரண்பாடு' இல்லாததது எதுன்னு நினைக்கறீங்க?

பிறப்புக்கு இறப்பு முரண்பாடு; நீருக்கு நெருப்பு முரண்பாடு; பூமிக்கு ஆகாயம் முரண்பாடு. வெப்பத்துக்கு குளிர்ச்சி முரண்பாடு...

இந்த முரண்பாடுகள்தானே பூமியை இயக்குது?

அது போகட்டும். விஞ்ஞானத்தை எடுத்துக்கங்க. அரிஸ்டாட்டில் சொன்னதை கலிலியோ மறுத்தார். கலிலியோ சொன்னதை நியூட்டன் மறுத்தார். நியூட்டன் சொன்னதை ஐன்ஸ்டீன் மறுத்தார். இவங்க கண்டறிஞ்சு சொன்னதை ஆராய்ஞ்சவங்க, 'அவை முரண்பாடுகள் அல்ல. தத்துவ வளர்ச்சியின் பரிணாம நிலைகள்'ன்னு விளக்கம் சொன்னாங்க.

அதனால, உங்களுக்கும் உங்க மனைவிக்கும் உள்ள முரண்பாடுகளை 'பரிணாம நிலைகள்'ன்னு ரெண்டு பேருமே நினைச்சா சுமூகமாய்விடுவீங்க.

லதா காக்வேல், சிதம்பரம்—2. நவம்பர் 8 – 14; 1991.

**கேள்விக்கு பதிலை ஒரு வரியில் சொல்பவர்கள் அறிவாளியா? இல்லை கதை கூறி பதில் சொல்பவர்கள் அறிவாளியா?**

'பால் வாங்கலையோ.. பால்! மோர் வாங்கலையோ... மோர்! தயிர் வாங்கலையோ... தயிர்!'

வீதியில் வித்துட்டுப் போறாங்க. உங்களுக்கு எது வேணுமோ, அவங்களை மட்டும் கூப்பிட்டுக்கங்களேன்.



ராஜேந்திரன். சென்னை—33. நவம்பர் 8 – 14; 1991.

**மரணத்தை வென்றவர்கள் யாரேனும் உண்டா?**

நிறைய பேர் உண்டு.

சாகரடீஸுக்கு விஷத்தைக் கொடுத்து குடிக்கச் சொன்னாங்க. குடிச்சுட்டு கொஞ்ச நேரம் அப்படியும் இப்படியும் நடந்தாரு. அப்புறம் அவரே படுத்துட்டு பெட்ஷீட்டை எடுத்து உடம்பை மூடிட்டாரு. திடீர்னு முகத்திலிருந்து பெட்ஷீட்டை விலக்கி, அழுதுட்டிருந்த தன்னோட சீடனைக் கூப்புட்டு, 'அங்களெபியஸ்ங்கற ஆளுக்கு நான் ஒரு சேவல் தரணும். மறக்காம அந்த கடனை அடைச்சிடு'ன்னு போர்வையை மூடிட்டு இறந்தாரு. ஆக, கடைசி நேரத்துல கூட கடனை அடைக்கிற கவலைதான் அவருக்கு இருந்ததே

தவிர, மரண பயம் இல்லை.

பாரதியார் நைட் 1.30க்கு உயிர் போறதுக்கு முன்னால, "ஆப்கான் மன்னர் அமானுல்லா பற்றி ஒரு கட்டுரை எழுதிட்டு, 'சுதேசமித்திரன்' ஆபீஸுக்குப் போகணும்"னாரு.

ஆக, இவங்கள்லாம் மரணத்தை வென்றவங்க இல்லையா?

ஆர். சண்முகம், பொள்ளாட்டி. நவம்பா 8 – 14; 1991.

**அன்பு என்றால் என்ன?**

செலுத்தத் செலுத்த குறையாத அட்சய பாத்திரம்!

கே. நாகராஜன், எம். குச்சிப்பாளையம். நவம்பர் 8 – 14; 1991.

**சார்.. நான் பல நேர்முகத் தேர்வுகளை அட்டெண்ட் செய்திருக்கிறேன். எல்லாருமே ஒரு சிறு காரணத்தை வைத்து கைவிடுகின்றனர். இதற்கு அதிர்ஷ்டம் இல்லை என்று பொருள்? மகாபாரதத்தில் விளக்கம் கூறவும்.**



மகாபாரதத்துல என்ன சார்... என் சொந்தபாரதத்துலயே சொல்றேன்.

திரு. கலைஞானம் ஒரு பெரிய கதாசிரியர். நிறைய ஹிட்டான படங்களுக்கு கதை எழுதினவரு. ஆரம்ப காலத்துல அவர் கூட நான் டிஸ்கஷனுக்கு போனப்போ, 'தம்பி! சுமாராத்தான் உங்கிட்டே விஷயம் இருக்கு. பின்னாடி கூப்பிட்றேன்'னு சொன்னாரு. இப்போ என் கதை டிஸ்கஷன்ல அவரும் பங்கெடுத்துக்கறாரு.

ஆரம்ப காலத்துல நான் சுமாராவும் இருந்திருக்கலாம். அல்லது என் டேஸ்ட்டும், அவர் டேஸ்ட்டும் வித்தியாசப்பட்டிருக்கலாம்.

அதனால அதிர்ஷ்டம், அது இதுன்னு சலிச்சுக்காம, நம்பிக்கையோட அடுத்த தேர்வை மீட் பண்ணுங்க. சக்சஸா நடக்கும்.

ராஜவர்மன், கோவை—17. நவம்பர் 8 – 14; 1991.

**'கின்னஸ் புக்'கில் என் பெயர் வரவேண்டும். என்ன சாதனை செய்யலாம்?**

உலகச் சாதனையா சென்ற நூற்றாண்டுல ஒரு ரஷ்யப் பெண்மணி

ஒரு காரியம் செய்தாங்க.

அதாவது, அவங்க பெற்றெடுத்த குழந்தைகள் 69!

16 பிரசவங்கள்ல இரட்டைக் குழந்தைகள்.

7 பிரசவங்கள்ல மூணு மூணு குழந்தைகள்.

4 பிரசவங்கள்ல நாலு நாலு குழந்தைகள்.

இப்படி ஏதாவது சாதனையை மட்டும் தயவு செஞ்சு செய்துடாதீங்க. நம்ம இந்தியா தாங்காது!

அனுசூயா, ஈரோடு—1. நவம்பர் 8 — 14; 1991.

**லாபத்தில் நஷ்டம் உண்டு. நஷ்டத்தில் லாபம் உண்டா?**



கல்கி ஆசிரியர் அமரர் 'கல்கியும், அவருடைய சகோதரரும் ஒரு தடவை ரயில் நிலையத்துக்குள்ளே நுழைய, ரயில் நகர ஆரம்பிச்சிருச்சு. ஓடிப் போய் ஏறினதுல சகோதரர் முன்னால ஏற, கல்கி பின்னால ஏற, கல்கியோட கால்ல இருந்த ஒரு செருப்பு பிளாட்பாரத்துல விழுந்துருச்சு. இறங்கி எடுக்க முடியாத ஸ்பீடுல வண்டி நகர, கல்கி காலிலேர்ந்து இன்னொரு செருப்பை கழட்டி பிளாட்பாரத்துல வீச, சகோதரர் முழிச்சாராம்.

அப்ப கல்கி, "கால்ல இருந்த ஒண்ணால எனக்கும் பிரயோஜனமில்லை. பிளாட்பாரத்துல இருக்கற இன்னொண்ணால அடுத்தவனுக்கும் பிரயோஜனமில்லை. என்னால எடுக்க முடியலை. ஆனா அவனுக்கு உபயோகமா வீச முடியும். அதை செய்துட்டேன்"னாராம்.

பெருந்தன்மையாளரான கல்கியோட நஷ்டத்துல, அடுத்தவங்களுக்கு லாபம் கிடைச்சிருச்சே!

பி. நமச்சிவாயம், ஏனங்குடி—1. நவம்பர் 15 — 21; 1991.

**பெரிய இடத்து பொல்லாப்பை எப்படி சமாளிப்பது?**

ஒரு சமஸ்தான மன்னரோட மகன் மகா போக்கிரி. அஞ்சு வயசிலிருந்தே அடாவடித்தனத்தால அரண்மனை ஊழியர்களையும், பொதுமக்களையும் துஷ்டத்தனமா துன்புறுத்திட்டு இருந்தான். எல்லாரும் ராஜாவுக்கு பயந்துட்டு பொடியனோட சேஷ்டைகளை பொறுத்துட்டு இருந்தாங்க.

ஒருநாள் அவன் முடி திருத்தும் தொழிலாளிகிட்டே போய் நின்னு, "எல்லாருக்கும் மீசை ஒதுக்கறியே.. அதுமாதிரி எனக்கும் ஒதுக்கு. இல்லாட்டி உனக்கு தண்டனை"ன்னு மிரட்டினான்.

முடிதிருத்துபவர் குழம்பிப் போனாரு. காரணம், அவனுக்கு முகத்தில் முடியே முளைக்கலை. எப்படி மீசை ஒதுக்கறது? பெரிய இடத்து பொல்லாப்பு வேண்டாம்னு யோசிச்சுட்டு, "உங்களுக்கு மீசை ஒதுக்கறதை விட எனக்கு வேறு வேலை என்ன?"ன்னு பையனை ஒரு நாற்காலியில் உட்கார வெச்சு கழுத்தைச் சுத்தி வெள்ளை டவலைக் கட்டினாரு. முகத்துல சோப்பை தேய்ச்சாரு. அப்புறம் கொஞ்சம் எட்டப் போய் கையை கட்டிட்டு நின்னுட்டாரு.



மன்னரோட பையன், "என்ன முகத்துல சோப்பை போட்டுட்டு எதுக்காக கையை கட்டிட்டிருக்கே?"ன்னு கேட்டதும் தொழிலாளி, "உங்க முகத்துல முடிவளர்றதுக்காக காத்திருக்கிறேன். வந்ததும் உங்களுக்கு மீசை ஒதுக்கிட்டுதான் மறுவேலை"ன்னு பவ்யமா, சமயோஜிதமா, சாதுர்யமா, பொறுமையா சொல்ல... பெரிய இடத்துப் பிள்ளை சோப்பு நுரையை துடைச்சிட்டு வேகமா நடையைக் கட்டினான்.

எஸ். முத்துராமன், பம்பாய்—17. நவம்பர் 15 — 21; 1991.

**தன்னம்பிக்கை இருந்தால் முன்னேறலாம். சரி. தன்னம்பிக்கை பெற என்ன செய்வது?**

கீழே வர்ற விவேகானந்தரோட வாசகத்தைப் படிங்க. தன்னால தன்னம்பிக்கை வரும்.



"உன் கடந்தகால வாழ்க்கையை திரும்பிப் பார்ப்பாயானால், நீ வீணாக எப்போதும் மற்றவர்களிடமிருந்து உதவியைப் பெற முயற்சித்து காலத்தை வீணாக்கியதையும், அப்படி உதவி எதுவும் வராமல் போனதையுமே பெருமளவில் காண்பாய். சிறப்பாக உனக்கு வந்த உதவிகள் எல்லாம் உனக்குள்ளிருந்து வந்தவையாகவே இருக்கும். எனவே நம்பிக்கை — நம்மிடத்தில் நம்பிக்கை,

இறைவனிடத்தில் நம்பிக்கை — இதுவே மகிமை பெறும் ரகசியம்."

பொன். முத்து. சாத்தூர். நவம்பர் 15 — 21; 1991.

**ராகுகாலத்தில் குழந்தை பிறந்தால்?**

ஒண்ணும் ஆகாது. சுபிட்சமா இருப்பான்.

ஆங்கிலேயர்களுக்கு 'மே' மாதம்ன்னா பீடை மாதம். 13ம் தேதின்னா சைத்தான் நாள். ரெண்டுமே அலர்ஜி. ஆனா ஒரு 'மே மாதம் 13ம் தேதி' பிறந்த சர். ரொனால்டு ராஸ்ங்கற விஞ்ஞான மேதை, மலேரியாவை ஒழிக்க வழிகண்டு, நோபல் பரிசு வாங்கினாரு.

அதனால, நம்பிக்கை வேறு; உழைப்பும் சாதனையும் வேறு.

தெய்வசிகாமணி, கோரட்டூர். நவம்பர் 15 — 21; 1991.

**புத்தகங்கள் ஒரு மனிதனை புத்திசாலி ஆக்குமா?**

ஒரு தச்சருக்கும் நிறைய புத்தகங்களை படிச்ச ஒரு பிரபுவுக்கும் நடந்த உரையாடலா ஒரு கதை இருக்கு.



தச்சர்: பிரபு, என்ன புத்தகம் படிக்கிறீர்கள்?

பிரபு: முனிவரின் பொன்மொழிகள்.

தச்சர்: அவர்கள் உயிரோடு இருக்கிறார்களா?

பிரபு: இல்லை.

தச்சர்: இறந்து போனவர்கள் விட்டுச் சென்ற மிச்சம் மீதியிருக்கும் குப்பைகள்தானே புத்தகங்கள்?

பிரபு: நீ என்னை அவமதிக்கிறாய். நீ முறையான விளக்கம் தராவிட்டால் உனக்கு தூக்கு தண்டனை தருவேன்!

தச்சர்: நான் உளியால் வண்டிச் சக்கரத்தை செதுக்குகிறேன். உளியின் மேல் சுத்தியலின் அடி மெதுவாக விழுந்தால் உளி நழுவுகிறது. பலமாக அடித்தால் உளி மரத்தில் சிக்கிக் கொள்கிறது. இரண்டுக்கும் நடுவே உளி செதுக்க வேண்டுமென்றால் சுத்தியலுக்கு சரியான அழுத்தம் எப்படிக் கொடுப்பது என்று அனுபவ அறிவும், பழக்கமும் வேண்டும். என் மகனுக்கு இதை நான் கற்றுத் தர முடியாது. அவன் எந்த புத்தகத்தை பார்த்தும் தெரிந்து கொள்ள முடியாது. அவனாக அனுபவத்தில் தெரிந்து கொள்ள வேண்டும். நான் இறந்த பிறகு என்னுடைய திறமை என் மகனுக்கு பயன்படாது. இதுபோல்தான் இறந்தவர்களின் புத்தகங்களும்

பயனில்லாதவை!

எஸ்.எஸ். மாறன், வடபாதிமங்கலம். நவம்பர் 15 – 21; 1991.

**சீக்கிரம் பாப்புலராக சுலபமான வழி உண்டா?**

"நீ பேசுவதென்றால் உன் சொற்கள் நூலில் கோர்த்த முத்துக்களாக குளிர்ந்து இருக்க வேண்டும்.

நீ பேசுவதென்றால் உன் மொழிகள் வைரக் கல்லின் ஒளியைப் போல் தெளிவுடன் இருக்க வேண்டும்.

நீ பேசுவதென்றால், உன் உரைகள் வாளை ஊடுருவும் பளிங்குக் கல் போல உறுதியோடு இருக்கட்டும்.

நீ பேசுவதென்றால் எங்கும் உள்ள கடவுளே 'ஆம், ஆம், அது உண்மை, உண்மை' என்று சொல்ல வேண்டும்

இதை ஃபாலோ பண்ணுங்க. பாப்புலராவது கேரண்டி!

ரேவதி தாசன், புளியங்குடி. நவம்பர் 15 – 21; 1991.

**ஊர் விட்டு ஊர் போய் பிழைக்க முடியுமா?**



ஜெர்மனியில பொறந்து,
இங்கிலீஷ்ல ஒரு வார்த்தை கூட
பேசத் தெரியாமயே
இங்கிலாந்துக்கு மன்னர் ஆனவர்
முதலாம் ஜார்ஜ் மன்னர்.

சிலோன்ல பிறந்து, இந்தியாவுல
பாரத ரத்னா வாங்கினவரு
புரட்சித் தலைவர்!

உண்மையும் உழைப்பும்
இருந்தா உயர்வு எந்த ஊர்லயும் உண்டு.

என். மாணிக்கவாசகம், வெள்ளலூர். நவம்பர் 15 – 21; 1991.

**'தோல்விகள்தான் வெற்றிக்கு முதல் படி' என்கிறார்களே... அது சமாதானத்துக்கு கூறுவதா? அல்லது உண்மையாகவா?**

உங்க வீட்லயும் குழந்தை இருக்கும் பாருங்க. எடுத்தவுடனே குப்புற திரும்பிடுதா என்ன? பலநாள் முயற்சி பண்ணி, போராடி அப்புறம்தான் ஒருநாள் ஜெயிக்குது!

அசோக், நெல்லிக்குப்பம். நவம்பர் 15 — 21; 1991.

**டைரியின் முன் பக்கத்தில் குறித்து வைத்துக் கொள்ள ஒரு அழகான ஆங்கிலப் பழமொழி தேவை?**

"ஏதாவது ஒன்றை கற்றுக் கொள்ளாத நாள், யாராவது ஒரு பெரியவரை சந்திக்காத நாள், யாருக்காவது எதையாவது கொடுத்து மகிழாத நாள் என் வாழ்க்கையில் வரவே வேண்டாம்!"

இது ஆங்கிலப் பழமொழி இல்லீங்க. நம்ம பழம்பெரும் நூலான 'நான் மணிக்கடிகை'யில் வர்ற ஒரு வெண்பாவோட கருத்து.

திருமாவளவன், தர்மபுரி. நவம்பர் 22 — 28; 1991.

**'சாயாத கொம்பு உள்ள மான் எது? (என்ன முழிக்கறீங்க?)**



அப்படி ஒரு மான் உலகத்துல கிடையாதுங்க! ஏன்னா, ஆண் மானுக்கு மட்டும்தான் கொம்பு முளைக்கும். பெண் மானுக்கு முளைக்கறதே இல்லை. ஆண் மானுக்கு கூட கொம்பு வருஷத்துக்கு ஒருதரம் விழுந்துதான் முளைக்குது. அதனால அதுவும் சாயற கணக்குதான். நீங்க நினைக்கிற மானும் சரி, நான் சொன்ன மானும் சரி, இன்னும் எந்த மானா இருந்தாலும் சரி, எல்லா மானுக்கும் கொம்பு சாயறது உறுதி. என்ன, கொஞ்சம் முன்னே பின்னே இருக்கும். அவ்வளவுதான்!

ஜி. கணேசபாண்டியன், குன்னூர். நவம்பர் 22 — 28; 1991.

**ஒரு படத்தின் வெற்றிக்கு பல பேர் காரணமாய் இருந்தும், நடிகர்களுக்கு மட்டும்தானே பெயர் வருகிறது... ஏன்?**

கம்பத்து மேலே கொடி பறக்குது. பளிச்சுன்னு பார்வை படறது கொடி மேலேதான். தாங்கி நிக்கற கம்பத்து மேலே இல்லை. இது சகஜம்தானே! கொடி இல்லாம கம்பம் மட்டும் நின்னா அழகா இருக்குமா? அதையும் யோசிங்க!

எம். பாஸ்கர், சென்னை—17. நவம்பர் 22 — 28; 1991.

**பெண்ணுக்காக தாஜ்மஹாலைக் கட்டிய ஷாஜஹானை பைத்தியம் என்று எண்ணத் தோன்றுகிறது. உங்களுக்கு என்ன தோன்றுகிறது?**

அவசரப்படாதீங்க.

ஷாஜஹான் தன்னுடைய மனைவிக்காக மட்டும் தாஜ்மஹால் கட்டலை. அவருடைய அரண்மனையில் அமார்சிங்கன்னு ராஜபுத்திரர் ஒருத்தர் இருந்தாரு. அவரை வேறொருத்தர் ரொம்பவும் கிண்டலடிச்சாரு. கிண்டலடிச்சவரு ஷாஜஹானுக்கு மிகவும் வேண்டப்பட்டவர். ரஜபுத்திரர் தன்மானம் பொங்கவே, பொறுக்க முடியாம வாளை எடுத்து, அவருடைய தலையை சீவிட்டாரு!



உடனே பக்கத்துல இருந்தவங்க அவரைப் பிடிக்க வர, ராஜபுத்திரர் குதிரையில ஏறி தப்பிச்சுட்டாரு. வழியில துரத்தி வந்தவங்களை எல்லாம் அடிச்சு நொறுக்கி, கோட்டை வாசலுக்கு வந்தாரு. ஆனா கோட்டை வாசல் கதவை மூடிட்டாங்க. வெளியே சுத்தி அகழி வேறு இருந்தது. வாசலுக்கு வந்தவர் தைரியமா குதிரையை உதைக்க, அது கதவையும் தாண்ட, மயிரிழையில் குதிரை அகழி விளிம்புல மோதி விழ... குதிரை, அமார்சிங் ரெண்டு பேரும் இறந்துட்டாங்க.

அமார்சிங்கோட வீரத்தையும் கோட்டைக் கதவைத் தாண்டின குதிரையின் தீரத்தையும் கேள்விப்பட்ட ஷாஜகான், அந்த குதிரையின் உருவத்தை சிலையா பண்ணச் சொல்லி வாசல்ல வெச்சதோட அந்த வாசலுக்கு ராஜபுத்திர வீரரின் நினைவாக 'அமார்சிங் வாசல்'ன்னு பெயரும் வெச்சாரு.

அதனால ஷாஜஹான், பெண்ணுக்கு மட்டும் கட்டிடம் கட்டலை. வீரத்துக்கும் மரியாதை கொடுத்தவரு!

ஜே.ஜே. அப்துல்லா, கன்னியாகுமரி. நவம்பர் 22 – 28; 1991.

**பெண்களைப் பார்த்தாலே சபலம் வருகிறதே, ஏன்?**

சிவலோகத்துல சிவனுக்கு ரெகுலரா நேரடி பணிவிடை செய்துட்டிருந்தாரு ஒரு பக்தர். அவருக்கு அதைத் தவிர வேறு வேலையே இல்லை. பார்வதிக்கு ரெண்டு தோழிப் பெண்கள் இருந்தாங்க. இவரு ஒரு நாள் பூ பறித்துக் கொண்டு இருக்கிறப்போ, தோழிகள் வந்துட்டாங்க.

பக்தர் அவங்களை பார்த்ததுலேர்ந்து சிவனை மறந்து போய், சிவனுடைய வேலைகளை எல்லாம் தப்பும் தவறும்மா செய்ய ஆரம்பிச்சுட்டாரு. சிவபெருமானுக்கு விஷயம் தெரிய, மத்தவங்க கசமுசான்னு பேச ஆரம்பிச்சுட்டாங்க. 'சிவலோகத்துல, அதுலயும் ஒரு சிவபக்தர் இப்படி பண்ணிட்டாரே'ன்னு. சிவபெருமான்

பரவாயில்லைன்னு அவரை கூப்புட்டு, 'பூலோகத்துக்குப் போய் சந்தோஷமா அவங்க கூட இருந்துட்டு, அப்புறமா வாங்க'ன்னு சொல்லி அனுப்பி வெச்சுட்டாரு.



அப்படி சிவலோகத்துலேர்ந்து வந்து, ரெண்டு பேரோட வாழ்ந்துட்டிருந்தவரு தேவாரம் பாடிய மகாஞான சுந்தரர்! சிவலோகத்துல இருந்தவரே முடியாதுன்னு இங்கே வந்துட்டாருங்கறப்போ, பூலோகத்துல இருக்கற நீங்க கவலைப்படலாங்களா? அள்ளுங்க!

இரா. அன்பரசு, கோயம்புத்தூர்—44. நவம்பர் 22 — 28; 1991.

**சிற்றின்பம் பெண் மூலம் கிடைப்பது. பேரின்பம் எதன் மூலம் கிடைப்பது?**

தெளிந்த கல்வியறிவு இருந்தா, அடக்கம். வரும். அடக்கம் வந்தா மதிப்பு மரியாதை வரும். மதிப்பு, மரியாதை வந்தா காசு, பணம் சேரும். காசு, பணம் சேர்ந்தா ஒழுக்கமும் தர்ம சிந்தனையும் வரும். அந்த ஒழுக்கத்துனாலயும் தர்ம சிந்தனையினாலயும் பேரின்பம் கிடைக்கும்னு படிச்சிருக்கேன்.

ஜெகன்னாதன், மன்னார்குடி. நவம்பர் 22 — 28; 1991.

**எதிர்த்த வீட்டுப் பெண்ணை காதலிக்கிறேன். அட்வைஸ் ப்ளீஸ்?**

என்ன முயற்சி செய்தாலும் கட்டை விரலால ஆட்காட்டி விரல் நுனியைத் தொட முடியாது. ஆட்காட்டி விரல் அதுவா வளைஞ்சு கொடுத்தாத்தான் உண்டு. முட்டி மோதுங்க!

ஜி. சண்முகநாதன், கரூர். நவம்பர் 22 — 28; 1991.

**சினிமாவில் வசனம் எந்த அளவுக்கு கைகொடுக்கும்?**

கைகேயி தசரதன்கிட்டே ரெண்டு வரம் வாங்கி, அது மூலமா ராமரை தசரதன் கிட்டேயிருந்து பிரிச்சு, காட்டுக்கு அனுப்பி வெச்சவ.

அதுக்காக தசரதன்லேர்ந்து, அரண்மனையில இருந்த அத்தனை பேரும் கைகேயியைப் பழிச்சாங்க. லட்சுமணனும் திட்டினான். ஆனா லட்சுமணனோட மனைவி ஊர்மிளை மாத்திரம், "ராமர் உயிரை காப்பாற்றத்தான் கைகேயி அத்தை அந்த வரத்தை கேட்டிருக்காங்க"ன்னா. எல்லாரும் ஆச்சரியத்தோட பார்க்க, அந்தம்மா "ஏற்கனவே தசரதனுக்கு புத்திர சோகத்தினால் உயிர் விடுவார்'ன்னு ஒரு சாபம் இருக்கு. அந்த

சாபம் பலிக்கணும்னா தசரதன் உயிரோடு இருக்கும் போதே ராமர் உயிருக்கு ஆபத்து வரணும். அப்படி வராமல் இருக்கத்தான் ராமரை காட்டுக்கு அனுப்பி, தசரதனுக்கு புத்திர சோகம் ஏற்படச் செய்தாள் கைகேயி தேவி"ன்னு ஒரு வசனம் பேசி, கைகேயி கேரக்டரையே மாத்திட்டாங்களே!

டி. சிவக்குமார், சென்னை–34. நவம்பர் 22 – 28; 1991.

**பக்கத்து வீட்டில் ஒரு பருவக் கிளி. எப்படி வசப்படுத்துவது? ஒரு யோசனை?**

"பேராசைக்காரனை பணத்தால வசப்படுத்தணும். பிடிவாதக்காரனை பணிவால வசப்படுத்தணும். முட்டாளை அவன் எண்ணத்துக்கு இணங்கற மாதிரி பாவனை செய்து வசப்படுத்தணும். நண்பனை நேர்மையால வசப்படுத்தணும். உறவினரை மரியாதையால வசப்படுத்தணும். மனைவியை கண்ணியமா நடத்தி, அன்பளிப்பு வழங்கி வசப்படுத்தணும்"

இப்படி ஒரு பட்டியலே போட்ட பெரியவங்க 'பருவக்கிளி'க்கு மட்டும் ஒண்ணும் சொல்லலைன்னா அதுல ஏதோ பெரிய சிக்கல் இருக்கும்ன்னு நினைக்கிறேன். நீங்களா முயற்சி பண்ணுங்க!

ஜி. வில்லவன் கோதை, ஏணங்குடி. நவம்பர் 22 – 28; 1991.

**கதாநாயகனாக உருவாவது, கதாநாயகனை உருவாக்குவது — எது பெரிய செயல்?**

உருவாவதற்கும் சரி, உருவாக்குவதற்கும் சரி, தகுதி இருக்க வேண்டியது அடிப்படை விஷயம்!

பாரதிதாசன், மதுரை–1. நவம்பர் 22 – 28; 1991.

**ராக்கெட் விடுவதில் பெயர் பெற்ற நாடு எது?**

இந்தியாதான்.



நம்ப முடியவில்லையா? 16ம் நூற்றாண்டுலதான் இத்தாலியரும், பிரெஞ்சுக்காரர்களும் ராக்கெட்டை கண்டுபிடிச்சாங்க. அது 5000 அடி தூரம்தான் சீறிப் பாயக் கூடியதாக இருந்தது. ஆனா 1792ல ஆங்கிலேயருக்கு எதிரா நடந்த சண்டையில நம்ம மைசூரை ஆண்ட திப்பு சுல்தான், ராக்கெட்டை வீசி எல்லாரையும்

நம்பிக்கையும், நாக்கும் பிறழாமல் இருந்தால், நினைத்ததை எல்லாம் அடைந்து விடலாம்.

காப்மேயர்

இரா. தமிழ்ச்செல்வன்.



சுத்தமான மனசாட்சியைப் போல நன்கு உறங்குவதற்கு உதவக் கூடியசுகமான தலையணை எதுவும் கிடையாது.

பெர்னாட்ஷா

எஸ். மங்களம்.

ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை வளரா விட்டால், எதிர் காலத்தில் மனித இனமே அழிந்து விடும்.

என்.வி. பீல்

பனந்தோப்பு இராமு. கண்ணன்

தானாக வருவதல்ல சந்தர்ப்பம். அதை நாம்தான் உண்டு பண்ண வேண்டும்.

தேனூர் அப்துல் காதர்.

மனைவிக்கு கணவனைப் பிடிக்கா விட்டால், சண்டை வருகிறது. பிடித்திருந்தால், சந்தேகம் வருகிறது.

மார்க் ட்வைன்

எஸ். மங்களம்.

பணம் நமது தேவைகளை பூர்த்தி செய்வதாக நினைப்பது தவறு. அது நம் தேவைகளைப் பெருக்கவே செய்கிறது.

பின்லாந்து பழமொழி

மங்கள ஜெயசங்கர்.

பொறுமை என்பது களைத்த குதிரை மாதிரி. இருந்தாலும் அதன் மீது சவாரி செய்து இலக்கை அடையலாம்.

ஷேக்ஸ்பியர்

எஸ். யோகலிங்கம்.



அதிர்ச்சியடைய வைச்சாரு. ஏன்னா, அது 10,000 அடி சீறிப் பாய்ஞ்சது! அந்த இந்திய ராக்கெட்டை ஆங்கிலேயர்கள் எடுத்துப் போய், லண்டனுக்கு பக்கத்துல இருக்கிற 'ரொடுண்டா'ங்கற நகர்ல காட்சிப் பொருளா வெச்சிருக்காங்க. இன்னைக்கும் அதைப் பார்க்கலாம். நடுவுல நாம ஏதோ தேய்மானம் ஆயிட்டோம். அவ்வளவுதான்!

திவ்யபாரதி. பெங்களூர்—7. நவம்பர் 22 – 28; 1991.

**துன்பமே இல்லாமல் சந்தோஷமாக இருக்க என்ன வழி?**

இரும்புல உருவாகற துருதான் இரும்பையே திங்குது! நம்ம மனசுல உருவாகற எண்ணம்தான் நம்மளை கஷ்டப்படுத்துது. அதனால முடிஞ்ச வரைக்கும் நல்லெண்ணங்களாவே உதயமானா சந்தோஷத்துல இருக்கலாம்.

எம். எஸ். வசந்தா. திருச்சி. நவம்பர் 29 – டிசம்பர் 5; 1991.

**யாரோட டயலாக் உங்களுக்கு ரொம்ப பிடிக்கும்?**

கேரளாவுல நாராயண பட்டத்திரின்னு ஒரு மகான், குருவாயூரப்பன் கோயில்ல தங்கி, 'நாராயணீயம்'ங்கற புகழ்பெற்ற நூலை எழுதின அவர், ஒரு சமயம் கிருஷ்ண பரமாத்மாகிட்டேயே அடிச்ச டயலாக்தான் எனக்கு ரொம்பப் பிடிக்கும்.

அவர் கிருஷ்ணர் கோயில் அர்ச்சகர். கோயில்லதான் எப்பவுமே இருப்பார். அவருக்கு ஒரு காதலி இருந்தாங்க. அப்பப்போ, பூஜை நேரம் போக மத்த நேரத்துல அவங்ககிட்டே பேசிட்டிருப்பாரு. நைட்ல கூட சில நேரங்கள்ல இருக்கறவராச்சே! 'சரி, வெளியே அங்கே, இங்கே போக அங்கேயே செய்ய, கிருஷ்ணரே எரிச்சலாகி, கனவுல வந்து, "என்னய்யா இது? நான் இருக்கிற இடத்துலயே இப்படி பண்றியே?"ன்னு கேட்டாரு.



"நீ இல்லாத இடம் இருக்கா கிருஷ்ணா? அப்படி இருந்தா காட்டு பார்க்கலாம்!"ன்னு நாராயண பட்டத்திரி கேட்க, கிருஷ்ணருக்கே என்ன பதில் சொல்றதுன்னு தெரியலை!

'டயலாக்'குன்னா இப்படி இருக்கணும். கவியரசு கண்ணதாசன் அவர்கள் கூட நாராயண பட்டத்திரி பற்றி தன்னுடைய நூல்ல சொல்லியிருக்காரு.

திருநாவுக்கரசு, புதுவை—1. நவம்பர் 29 — டிசம்பர் 5; 1991.

**எனக்கு திறமை இருந்தும் உயர்வு இல்லை. நீங்கள் கும்பிடும் சாமி பெயரை சொல்லுங்கள். அதையாவது கும்பிட்டுப் பார்க்கிறேன்.**

சந்தியாவந்தன மந்திரம் இப்படி சொல்லுது.

"ஆகாயத்திலிருந்து விழும் மழை எப்படி நதியாக மாறி, கடைசியில் கடலைச் சென்று அடைகிறதோ அதுமாதிரி எந்த தெய்வத்தை வேண்டிக் கொண்டாலும், அது பரமாத்வைத்தான் போய்ச் சேருகிறது"

அதனால, கவலைப்படாம உள்ளூர்ல இருக்கற ஏதாவது ஒரு கோயிலுக்குப் போய் ஒரு கும்பிடு போட்டுட்டு உங்க காரியங்களை செய்யுங்க. கூடிய சீக்கிரமே அருள் கிடைக்கும்.

வி. கிருபாகரன், மன்னார்குடி. நவம்பர் 29 — டிசம்பர் 5; 1991.

**ஆணின் பலம் எது? பலவீனம் எது?**

பெண்!

தர்மராஜ், சென்னை — 17. நவம்பர் 29 — டிசம்பர் 5; 1991.

**நல்லவனைப் போல் நடிக்கும் நண்பர்களை என்ன செய்யலாம்?**

பாராட்டுங்க! பரிசு கொடுங்க! அவர் நடிக்கிறதை மறந்துட்டு, அன்போட அவர்கிட்டே பேசுங்க. அவர் கூடிய சீக்கிரமே நடிப்பை விட்டுட்டு, உண்மையிலேயே நல்லவர் ஆயிடுவாரு.

எப்படின்னா, ஒரு அரசன் ஒரு மந்திரிகிட்டே, "உண்மையான சந்நியாசி நம் நாட்டில் இருக்கிறாரா? இருந்தால் பார்க்க வேண்டும்"ன்னு கேக்க, மந்திரி, ஊர்ல உலகத்துல உள்ள அத்தனை சந்நியாசிகளையும் போய் சோதிச்சுப் பார்க்க, யாருமே சுத்தமான சந்நியாசியா தோணலை! ஒவ்வொருத்தருக்கும் 'பெண்ணாசை, பொன்னாசை, பொருளாசை'ன்னு ஏதாவது ஒண்ணு இருந்துட்டே இருந்தது.



அரசரோ, "ஒரு நல்ல சந்நியாசியை நான் பார்க்க வேண்டும்"ன்னு நச்சரிக்க கடைசியில் மந்திரி ஒரு நல்ல ஆளைப் புடிச்சு, அவருக்கு காவி உடை, தாடி மீசை எல்லாம் கொடுத்து, "நீ இன்னைக்கு ஒரு

நாள் இந்த காவி உடையில அரசர் முன்னாடி சந்நியாசியா நடி"ன்னாரு.

அந்த ஆளும் சம்மதிச்சு அரசர் முன்னாடி வர, அரசர் அவன் காலில் விழுந்து வணங்கி, ஒரு தட்டு நிறைய பொற்காசுகளை காணிக்கையா கொடுத்தாரு. அதை அவர் வாங்க மறுக்க, அரசர் பயபக்தியோட வணங்கிட்டு போனாரு.

மறுநாள் மந்திரி அவனை கூப்புட்டு, "நான் சொன்னபடி அருமையா நடிச்சே! உனக்கு எவ்வளவு பணம் வேணுமோ கேள், தர்றேன்"னாரு.

அவன், "எனக்கு எதுவும் வேண்டாம். சந்நியாசியா நடிச்சதுக்கே அரசர் என் கால்ல விழற அளவுக்கு மரியாதை கிடைச்சது. உண்மையான சந்நியாசியா ஆயிட்டா, உலகில் எதுதான் கிடைக்காது! இந்த காவி உடையை மட்டும் எனக்கு கொடுத்துடுங்க. அது போதும்!"ன்னு சொல்லிட்டுப் போயிட்டாரு.

அதனால, முதல்ல நான் சொன்னதை ஃபாலோ பண்ணுங்க. நண்பரும் நல்லவரா நடிக்கிறதை விட்டுட்டு, நல்லவராவே மாறிடுவாரு!

எஸ். பன்னீர்செல்வம், ஈரோடு—5. நவம்பர் 29 — டிசம்பர் 5; 1991.

**யார் கடவுள்?**

உப்புத் தண்ணி மேலே போய் மழையா மாறி வருது பாருங்க. அது இல்லாம அமிலமா மாறியிருந்தா என்ன ஆகும்னு யோசிச்சு பாருங்க.

காத்து எத்தனையோ இடத்துல சுத்திட்டு வருது அது பூரா 'கார்பன்—டை—ஆக்ஸைடா' மாறியிருந்தா எப்படி இருக்கும்? தாவரங்கள் கார்பன்டை ஆக்ஸைடை இழுத்துக்கிட்டு ஆக்ஸிஜனை வெளியே விடுது. அது ஆக்ஸிஜனை இழுத்துட்டு, கார்பன் டை ஆக்ஸைடை வெளியே விட்டுச்சுன்னா என்ன ஆகும்?

இதுல எல்லாம் இயற்கைன்னு நினைச்சீங்கன்னா, அது கடவுள்! இல்லை, யாரோ ஒருத்தர் பண்றாருன்னா... அவர் கடவுள்!

டி.எஸ். லட்சுமணன், பாண்டிச்சேரி. நவம்பர் 29 — டிசம்பர் 5; 1991.

**காரண, காரியமே இல்லாமல் அப்பா கையை ஓங்குகிறார். எதிர்த்தால் அம்மா வருத்தப்படுவாளே என்று கவலையாக உள்ளது...**

ஒரு ராஜா தன்னுடைய மந்திரிகளுக்கும், அதிகாரிகளுக்கும் கண்டிப்பான உத்தரவு ஒண்ணு போட்டிருந்தாரு.

"என்னிடம் யாரும் கெட்ட செய்தி சொல்லக்கூடாது. சொன்னால் தலை சீவப்படும்"ங்கறது உத்தரவு!

அதனால மந்திரி பிரதானிகள் ராஜ்ஜியத்துல என்ன நடந்தாலும், ராஜா காதுல போட்றதில்லை.

ஒருநாள் ராஜாவோட அபிமானத்துக்குரிய குதிரை இறந்து போச்சு. இதை சொல்லாமலும் இருக்க முடியாது. சொன்னாலும் தலை சீவப்படும். என்ன செய்யறது?ன்னு மந்திரிகளும், பிரதானிகளும் குழம்ப, கடைசியில ஒரு பெரியவர், 'நான் ராஜாவிடம் சேதி சொல்கிறேன்'னு போனாரு.

ராஜாகிட்டே போய், "உங்கள் குதிரையைப் பற்றி ஒரு சேதி சொல்ல வேண்டும்"ன்னாரு.

"என்ன.. என்ன ஆச்சு என் குதிரைக்கு?"ன்னு ராஜா கேட்க,



"ராஜாவே! உங்க குதிரைக்கு ஒண்ணுமே ஆகலை. முன்னே இருந்த மாதிரிதான் இப்பவும் அது இருக்கு. ஆனா ஒண்ணு... அது சாப்பிடறது இல்லை. உணவை மிச்சப்படுத்துது. கண், கை, கால்களை அசைக்கறதில்லை. வீண் சிரமத்தை போக்குது. மூச்சும் விடறதில்லை. இருதயத்துக்கு ஓய்வு கொடுக்கிறது!"ன்னாரு.

"அப்படியானால்... என் குதிரை இறந்து விட்டது. அப்படித்தானே?"

"அப்படி ஒரு கெட்ட செய்தியை நான் சொன்னேனா? நீங்கள்தானே சொல்கிறீர்கள்!"ன்னு ஒரு அடி அடிக்க, ராஜா புரிஞ்சிக்கிட்டு, தன்னோட தவறான உத்தரவை திருத்திக்கிட்டாரு.

சில பெரியவங்களை சில கெட்டிக்காரத்தனமான வேலைகளாலதான் திருத்தணும்.

உங்க அப்பாவே தன் தவறை உணர்ற மாதிரி பொறுமையா, பக்குவமா, மேலே சொன்ன மாதிரி, ஏதாவது ஒரு ரூட்ல முயற்சி பண்ணுங்க!

உதாரணத்துக்கு பரீட்சையில 100க்கு 100 மார்க் வாங்கிட்டுப் போய், அவர் முன்னால நின்னு குச்சியை நீட்டுங்க.

"எதுக்குடா?"ன்னு கேப்பாரு.

'எப்பவும் அடிக்கற நீங்க, இதுக்கும் அடிப்பீங்களே'ன்னு சொல்லுங்க. அவரே சிரிச்சுட்டு, யோசிக்க ஆரம்பிப்பாரு.

முகமது அதீம், அருப்புக்கோட்டை. நவம்பர் 29 — டிசம்பர் 5; 1991.

**என்னிடம் 'அந்த' சக்தி கொஞ்சம் வீக்காக உள்ளது. என்ன லேகியம் சாப்பிடலாம்?**

உலகத்துல மூணு சக்திதான் இருக்கு. எந்த சக்தின்னு நீங்க கரெக்டா சொல்லலை.

எதையும் செய்யணும்ங்கற ஆர்வத்தையும் தூண்டி விடற சக்தி இது கிரியா சக்தி.

எதையும் அறியணும்ங்கற ஆர்வத்தை தூண்டி விடற சக்தி இது ஞான சக்தி.

எதையும் அடையணும்ங்கற ஆர்வத்தை தூண்டி விடற சக்தி இது இச்சா சக்தி.

இந்த சக்திகள் யார் யாருக்கு எந்தெந்த அளவுல இருக்கோ, அதை வெச்சுதான் அவங்களோட வெற்றி இருக்குன்னு ஒரு சாஸ்திரம் சொல்லியிருக்கு.

நீங்க இந்த மூணு சக்தியில எந்த சக்தியில வீக்குன்னு தெரியலை. அதை முதல்ல முடிவு பண்ணிட்டு, அப்புறம் சொல்லுங்க.

திலகப்ரியன், சீர்காழி. நவம்பர் 29 – டிசம்பர் 5; 1991.

**அரசியல்வாதிகள் மட்டும் எல்லோரையும் போல அல்லாமல் பெரிய பெரிய கும்பிடாக போடக் காரணம் என்ன?**



எது வேண்டாம்ன்னு விலகி நிக்கறேனோ, அதுலயே நம்மளை மாட்டி விடப் பார்க்கறீங்களே! கஷ்ட காலம்.

வாலியை கொன்னு, சுக்ரீவனுக்கு பட்டம் கட்டினாரு ராமர். மழைக்காலம் முடிஞ்சதும் சீதையைத் தேட தன் படையைத் திரட்டி வர்றதா வாக்குறுதி கொடுத்துட்டு சுக்ரீவன் போனான்.

போனவன், புதுசா கிடைச்ச ராஜபோகத்துல, வாக்குறுதியையும், ராமரையும் மறந்துட்டு கள்ளுலயும், பெண்கள் சுகத்திலயும் மறந்து கிடந்தான்.

உரிய நேரத்துல அவன் வராததால ராமருக்கு கோவம் வந்து லட்சுமணன்கிட்டே, "சுக்ரீவனிடம் சென்று, 'வாலி சென்ற வழி இன்னும் அடைபடாமல் அப்படியேதான் இருக்கிறது' என்று சொல், போ"ன்னு அனுப்பினார்.

லட்சுமணனும் அதே கோவத்தோட வர்றான். விவரம் அறிஞ்ச சுக்ரீவன் பயந்துகிட்டே, "ராமரின் கோபத்தை தணிக்க என்ன செய்யலாம்?"ன்னு ஆலோசனை கேட்க,

"தலைவரு மேலே கைகூப்பி வணங்கி அஞ்சலி செய்துவிடு. அப்படி செய்தால் பெரியவர்களுக்கு கோபம் தணிந்து விடும்"ன்னு அனுமார்

சொல்ல, அதன்படி சுக்ரீவன் தூரத்தில வரும் போதே கும்பிடு போட்டுக்கிட்டு வந்தான். அதைப் பார்த்ததும் ராமருக்கு கோபம் தணிந்து, கூப்பிய கரத்தோடு அவனை மார்போடு இறுக தழுவிக்கிறார். புரிஞ்சுக்கோங்க.

டி.கே. ராஜா. திண்டிவனம். நவம்பர் 29 — டிசம்பர் 5; 1991.

**தாய்குலத்திடம் மட்டும் தாங்கள் அதிகப்படியான அக்கறை கொள்வதன் மர்மம் என்ன?**

தெய்வமா இருந்தாலும் மனுஷனா பிறந்துட்டா அந்த பிறப்புப்படி நடக்கணும்ங்கறது நியதி.



அதனாலதான் கிருஷ்ணன் தெய்வமா இருந்தும் கூட சின்ன வயசுல குருகிட்டே பாடம் கத்துக்கப் போனாரு.

பாடம் எல்லாம் முடிஞ்சு தன்னை விட்டு புறப்படும் போது, மாமூலா எல்லா மாணவனையும், 'உனக்கு என்ன வரம் வேண்டுமோ கேள்'ன்னு குரு கேக்கறது வழக்கம்.

கிருஷ்ணன்கிட்டே கேட்டப்போ, 'அம்மா கையால சாப்பிடணும்'ன்னு வரம் கேட்டான்.

சாமியே அம்மா கையால சாப்பிடணும்னு சொல்லும் போது, நான் ஆசாமி.. அதுல அதிகப்படியா அக்கறை எடுத்தா என்னங்க தப்பு?

எம். சக்திவேல். மதுரை—16. டிசம்பர் 6 — 12; 1991.

**கலப்பு மணம் செய்வதால் குழந்தைளின் அறிவு எப்படி இருக்கும்?**

தாவரவியல்படி, ஓரின மாங்கனியை விட, ஒட்டு மாங்கனியே சிறந்தது.

உலோகவியல்படி, தங்கம் கூட சுத்தமா இருந்தா ஆபரணம் செய்ய முடியாது. கலப்பு சேர்த்து மாற்று மாறினாத்தான் நகை செய்ய முடியும். காரணம் எந்த உலோகத்தையும் சுத்தமா உபயோகிக்கறதை விட இன்னொண்ணோட கலக்கும் போது, உறுதி கூடுது. கி.மு. 1500லேர்ந்து, இன்னைக்கு வரைக்கும் சிறந்த கலப்பு உலோகமா போற்றப்பட்றது வெண்கலம்! அது செம்பும், வெள்ளியமும் சேர்ந்தது.

தாவரவியலும், உலோகவியலும் இப்படி சொல்லும்போது நம்ம உயிரியல் மட்டும் வேறுபடுமா?

ராஜாமணி, திருச்சி—2. டிசம்பர் 6 – 12, 1991.

**மனைவியிடம் எப்போதும் உண்மையே பேச வேண்டுமா?**

பேசணுங்கறதுதான் நியாயம்.



ஆனா மகாபாரதத்துல கிருஷ்ண பரமாத்வாவே அர்ஜுனன்கிட்டே பேசறப்போ,

“விவாகம் ஏற்பாடு செய்யும் போது, எந்த உயிருக்காவது ஆபத்து ஏற்படும்போது, வேடிக்கையாக பேசும் போது, மனைவியுடன் தனியாக இருக்கும்போது... பொய் சொன்னால் தவறில்லை”ன்னு சொல்றாரு.

தனியா மாட்டிட்டு, ஏதாவது இடைஞ்சல் வர்ற மாதிரி சமாச்சாரமா இருந்தா இஷ்டத்துக்கு அவுத்து விடுங்க! வேற வழியில்லை. ஏன்னா நான் மாமூலா பண்றதும் அதுதான்!

எம்.எஸ். கிரிஜாத்தம்பி, பெங்களூர்—5.

**சார்... நம் மீது அவதூறு பரப்புகிறவர்களை என்ன செய்யலாம்?**

நின்னுட்டு இருக்கும்போது, காத்து இல்லாத மாதிரி இருக்கும். வேகமா ஓடிவாங்க.. பயங்கரமா நம்மளை எதிர்த்து காத்து அடிக்கிறது தெரியும்!

அதனால உங்களைப் பத்தி அவதூறு வந்தா... நீங்க வேகமா முன்னேறிட்டு இருக்கீங்கன்னு அர்த்தம். எதிர் காலத்தைப் பத்தி எதுக்கு கவலைப்படறீங்க?

ஸ்டீபன் வேளாங்கண்ணி. டிசம்பர் 6 – 12, 1991.

**32 வயது வரை தறுதலையாக சுற்றிய எனக்கு மரியாதை கிடைக்குமா?**

ஆயிரம் வருஷமா ஒரு குகை இருட்டா இருந்தாலும், அங்கே வெளிச்சம் ஏத்த ஆயிரம் விளக்கோ, ஆயிரம் வருஷமோ தேவையில்லை. ஒரே ஒரு மெழுகுவர்த்தியில, ஒரு நிமிஷத்துல அதை வெளிச்சமாக்கிடலாம்!

அதனால, 32 வருஷமா நீங்க தப்பான காரியங்களை செஞ்சிருந்தா கூட, இப்போ ஊர்ல மரியாதை வாங்கணும்னு உங்களுக்கு எண்ணம்



வந்திருக்கு பாருங்க.. இந்த ஒரு எண்ணம் போதும். மெழுகுவர்த்தி ஏத்தினதுக்கு சமம்! இந்த நிமிஷத்திலேர்ந்து உங்க வாழ்க்கை, மரியாதையை நோக்கித்தான் போயிட்டிருக்குன்னு அர்த்தம். தைரியமா பேசி வாங்குங்க!

லாங்டன், திருநெல்வேலி. டிசம்பர் 6 – 12; 1991.

**இங்கிலீஷ் வைத்தியம் நல்லதா? நாட்டு வைத்தியம் நல்லதா?**

பைபிள் சொன்ன செய்தி இது.

ஏசுநாதர் தன்னைத் தேடி வர்ற நோயாளிகள்கிட்டே முதல்ல, 'உன் நோய் குணமாகும்ன்னு நம்பறியா?'ன்னு கேப்பாராம்.

'ஆமாம். உங்க மேலே நம்பிக்கை இருக்கு'ன்னு வந்தவங்க சொல்ல, உடனே ஏசு, 'உங்க நம்பிக்கைதான் உங்களை குணமாக்கப் போகுது'ன்னு ஆசீர்வதிப்பாராம். அதே மாதிரி நோய் குணாயிருமாம்!



'நம்மால இதைச் செய்ய முடியும்'ன்னு அதையே நீங்க தொடர்ச்சியா நினைச்சுட்டு இருந்தீங்கன்னா, நிச்சயமா உங்களால செஞ்சுட முடியும். மனசுக்கு அந்த பவர் உண்டு. விஞ்ஞான ரீதியிலும் இப்படித்தான் சொல்றாங்க.

அதனால எந்த வைத்தியத்துக்குப் போனாலும் நீங்க நோய் தீர்ந்துரும்ங்கற நம்பிக்கையோட போக வேண்டியது முக்கியம்.

ரஹ்மான், கீழக்கரை. டிசம்பர் 6 – 12; 1991.

**நான் என்ன செய்தாலும், மனைவிக்குப் பிடித்தால்.. அம்மாவுக்கு பிடிக்கவில்லை. அம்மாவுக்கு பிடித்தால்... மனைவிக்குப் பிடிப்பதில்லை. என்ன செய்வது?**

மழை, மரத்து மேல விழும் போது மரம் துளிருது.

நிலத்துல விழும்போது விதை முளைக்குது.

மனுஷன் மேலே விழும்போது அவன் குடையை பிடிச்சுக்கறான்.

எருமை மேல விழும் போது அது நனைஞ்சு, நெளியுது.

நெருப்பு மேலே விழும் போது அணைஞ்சுடுது.

யாருக்காக பெய்றது, யாருக்காக பெய்ய வேண்டாம்ன்னு யோசிச்சா... மழை அதோட கடமையைச் செய்ய முடியுமா?

குடும்பத்திலும் இப்படித்தான். பொண்டாட்டிக்கு பிடிக்கறது அம்மாவுக்குப் பிடிக்காது. அம்மாவுக்கு பிடிச்சது பொண்டாட்டிக்கு பிடிக்காது! இது எல்லாம் சகஜம்தாங்க! உங்க மனசுக்கு எது நியாயம்ன்னு படுதோ, அதை கரெக்டா செஞ்சுட்டுப் போங்க!

பாபு, தஞ்சாவூர்–2. டிசம்பர் 6 – 12; 1991.

**என்ன கேள்வி கேட்பதென்று தெரியவில்லை. ஏதாவது கருத்துள்ள ஒரு கதை சொல்லுங்களேன்?**

விசுவநாத பாரதியார்ங்கற பெரிய புலவர் ரொம்ப திறமைசாலி. தன்னுடைய பாட்டையெல்லாம் எடுத்துக்கிட்டு ராமநாதபுரத்து ராஜாவோட சபைக்குப் போனாரு.

அப்படி போனப்போ, சபையில பார்வையில்லாத ஒருத்தர் உட்கார்ந்திருக்காரு. வந்த புலவர், பார்வையல்லாதவரை ராஜா ஏன் சபையில உட்கார வெச்சிருக்காருன்னு சூசகமா, 'அரசே... சபைன்னா எப்பவுமே மங்களகரமா இருக்கணும்'ன்னு சொன்னாரு. அரசருக்குப் புரியலை. 'அப்புறமா சொல்றேன்'னு சொல்லிட்டு, தன்னுடைய பாடல்களைப் பாட ஆரம்பிச்சாரு வந்த புலவர்.



பாடி முடிஞ்சதும் பார்வையில்லாம உட்கார்ந்திருந்தவர், 'நீங்க பாடின எல்லா பாட்டுமே பழைய பாடல்கள்'ன்னு புலவர்கிட்டே சொல்ல, புலவருக்கு கோவம் வந்துருச்சு. எரிச்சலோட, 'எங்கே... நான் பாடின பாட்டுல ஏதாவது ஒண்ணு ரெண்டை முழுசா சொல்லு பார்க்கலாம்'ன்னாரு. 'ஒண்ணு, ரெண்டு மட்டுமில்லை. எல்லாத்தையும் பாடறேன்'னு சொல்லிட்டு, எல்லாத்தையும் பாடிக் காமிச்சாரு! அதிர்ச்சியடைஞ்ச புலவரை ராஜா, "ஏய்யா... பழைய பாட்டை எடுத்துக்கிட்டு ஒப்பேத்த வந்துட்டியா?"ன்னு கத்த ஆரம்பிச்சாரு.

அப்போ பார்வையில்லாத 'மாம்பழச் கவிச் சிங்க நாவலர்' சமதானப்படுத்தி, "இல்லை அரசே! இது அவரோட பாட்டுதான். அவர்

பாடும் போதே நான் மனப்பாடம் பண்ணிட்டேன். அவர் வந்தவுடனே, நான் பார்வையில்லாம உட்கார்ந்திருந்ததைத்தான் 'சபை மங்களமா இருக்கணும்'ன்னு சொன்னாரு. பார்வை இல்லாட்டி கூட, என்கிட்டே வேற சில விஷயங்கள் இருக்குன்னு அவருக்கு புரிய வைக்கிறதுக்காகத்தான் அப்படிச் சொன்னேன்"னு சொன்னாரு.

அதனால, ஒருத்தரைப் பத்தி சரியா புரிஞ்சுக்காம, அவசரப்பட்டு வார்த்தைகளை விட்றது எவ்வளவு பெரிய தப்புங்கற கருத்தை வந்த புலவர் புரிஞ்சிக்கிட்டாரு.

எம். பாலச்சந்தர், சித்தோடு. டிசம்பர் 6 — 12; 1991.

**மனைவியை எப்படி அழைக்கலாம்?**

குலோப் ஜாமூனை கடிச்சு சாப்பிட்றதும் உண்டு. அப்படியே முழுங்கறதும் உண்டு ஸ்பூனால கட் பண்ணி, நாசூக்கா சாப்பிட்றதும் உண்டு. பொடிப் பொடியாக்கி, ஜீராவோட கலந்தும் சாப்பிடறதும் உண்டு. எல்லாம் அவங்கவங்க டேஸ்டைப் பொறுத்தது. அதேமாதிரி, நீங்க உங்க பிரியப்படி எப்படி கூப்பிட்டாலும் அவங்களுக்கு ரசனையாவே இருக்கும்!

ஏ. சந்திரகுமார், சேலம்—2. டிசம்பர் 6 — 12; 1991.

**ரொம்ப தெனாவெட்டாக திரிகிறான் என்கிறார்களே... அது என்ன தெனாவெட்டு?**

சில இடத்துல தெனாவெட்டுன்னு சொல்வாங்க. சில இடங்கள்ல தெனவு எடுத்து திரியறான்னு சொல்வாங்க.

தினவு எடுக்கறதுன்னா, கோழி போன்ற பறவைகள் அடைகாக்கற பருவத்துல பறவைகளோட உறுப்புல தினவு எடுக்கறது, 'தினவு'ன்னா அரிப்பு. அது முட்டை மேல உட்கார்ந்து அடைகாக்கும் போது, அந்த அரிப்பு சரியாப் போயிரும். சில நேரங்கள்ல முட்டை இல்லாதப்போ, வேற வழியில்லாம சின்ன கற்களைக் குவிச்சு வெச்சு, அதற்கு மேலே உட்கார்ந்து அடைகாக்கும். அப்ப அதோட தினவு போயிரும்.

எவனாவது உடம்பை வளர்த்து வெச்சிருப்பான். தேவையே இல்லாம அன்னைக்கு சண்டை போடணும்ங்கறதுக்காக ரோட்டுல அப்பாவியா ஒருத்தன் போயிருந்தாக்கூட அவனை மடக்கி, காலரை தூக்கிட்டு கேள்வி கேட்டு கையை ஓங்குவான். அவனை 'தெனாவெட்டா திரியறான்'னு சொல்வாங்க.

சில பேருக்கு கல்யாண வயசே ஆகியிருக்காது. இல்லைன்னா, வீட்டுல 'இன்னும் ஆறு மாசம் கழிச்சு கல்யாணம் பண்ணிக்கலாம்'ன்னு சொல்லியிருப்பாங்க. ஆனா அவரு காலரை தூக்கி விட்டு திரிவாரு. அவரும் தினவெடுத்து திரிகிற ஆளுதான்.

சில பேர் கல்யாணம் ஆகியும், வீட்டுல அடைகாக்காம வெளியில போய் அடைகாத்தா... அவரும் தெனவெடுத்து திரியறவருதான்!

எம்.எஸ். பார்த்திபன், புதுக்கோட்டை. டிசம்பர் 6 – 12; 1991.

**சூழ்நிலைக்காக பொய் சொல்வது தவறா?**

ஒரு நாட்டுல நிறைய பாஷை பேசறவங்க! நம்ம இந்தியா மாதிரி வெச்சுக்கங்களேன்.

அங்கே அப்பப்போ ஏதாவது சண்டை வந்துட்டே இருக்கும். அதுல ஒரு புரட்சிக்காரனை புடிச்சு ராஜா முன்னாடி நிக்க வெச்சாங்க. ராஜா அவனுக்கு மரண தண்டனை கொடுத்தாரு. உடனே அவன் 'லபோதிபோன்னு புலம்ப, அவன் என்ன புலம்பினான்னு ராஜாவுக்குப் புரியலை. காரணம், அவன் பேசற பாஷை ராஜாவுக்குத் தெரியாது. பக்கத்துல இருக்கற அமைச்சர்கிட்டே,



'என்ன புலம்பினான்?'னு கேட்க, அமைச்சர், 'நான் பண்ணினது சின்னத் தப்பு. அதுக்கு ஆண்டவன் உயிர் போகிற அளவுக்கு இவ்வளவு பெரிய தண்டனையை கொடுத்துட்டானே'ன்னு புலம்பினான்னு சொன்னாரு.

உடனே ராஜா மனசிறங்கி, 'மரண தண்டனை வேண்டாம்... சாதாரண சிறை தண்டனை கொடுத்து அவனை விடுவிச்சிருங்க'ன்னு சொல்லிட்டாரு.

உடனே பக்கத்தில் இருந்த இன்னொரு அமைச்சர், 'அந்த அமைச்சர் பொய் சொல்லிட்டாரு. எனக்கு அந்த பாஷை தெரியும். அவன் உண்மையிலே உங்களை வாய்க்கு வந்தபடி திட்டினான்'னு சொன்னாரு.

அதுக்கு ராஜா, "அப்படியா? அப்ப நீ சொன்ன உண்மையைவிட, அந்த அமைச்சர் சொன்ன பொய் எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு! ஏன்னா, அவரோட பொய்யால ஒரு உயிர் காப்பாற்றப்பட்டது. உங்க உண்மையால ஒரு உயிர் சாகறது நிச்சயமாக்கப்படுது. அதனால, அவர் சொன்ன பொய்யே எனக்கு பிடிச்சிருக்கு."ன்னு ராஜா சொன்னாரு.

அதுமாதிரி, நமக்கு சாதகமான சூழ்நிலைக்காக நாம பொய் சொல்றதை விட, நம்மளால பிறருக்கு உதவி வரும். அவங்க கஷ்டம் தீரும்ன்னா அவங்களுக்காக பொய் சொல்லலாம்... தப்பில்லை!

ரமேஷ், காரைக்குடி. டிசம்பர் 13 – 19; 1991.

**கணவன் கண் முன்னாலேயே மனைவி கெடுக்கப்படுகிறாள். முடிவு?**

வட நாட்டுல 'பூரி'ங்கற இடத்துல வாழ்ந்த மகான், போதேந்திர சுவாமிகள். அவரோட ஆசிரமத்துக்கு ஒரு பிராமணர் ராத்திரியில வந்து கண்ணீர் விட்டாரு.

"நானும் என் மனைவியும் காசியை நோக்கி போய்ட்டிருந்தோம். வழியில சில அயோக்கியர்கள் என் மனைவியை தூக்கிட்டு போயிட்டாங்க. மனம் உடைஞ்ச நான் கங்கையில விழுந்து உயிரை விடலாம்ன்னு கங்கை கரைக்குப் போனேன். அங்கே என் மனைவியும் உயிரை விட வந்திருந்தா. அந்த அயோக்கியர்கள் அவளை கெடுத்துட்டாங்களாம். புனிதத்தை இழந்து உயிரை விடுவதைத் தவிர வேறு வழி இல்லைன்னு அவ முடிவு செய்துட்டா. அவளை அழைச்சிட்டு உங்க ஆலோசனைக்காக வந்திருக்கிறேன்"னாரு.

இதைக் கேட்ட சுவாமிகள், "ப்பூ! இதைப் போய் பெரிசா நினைச்சுட்டு சாக முடிவு செய்தீங்களே! நாளைக்கு காலையில இங்குள்ள கோயில் குளத்துல 'ராமா, ராமா, ராமா'ன்னு மூணு முறை சொல்லிக்கிட்டே மூழ்கி எழுந்தா போதும் கடவுள் உன் மனைவியை பழைய தேஜஸுடன் புனிதமாக்கிவிடுவார்"ன்னாரு.



அதேமாதிரி அந்த பிராமணரோட மனைவி குளத்துல மூணு தடவை ராம நாமம் சொல்லி மூழ்கி எழுந்து, திருமண நாள்ல இருந்தது போலவே புனிதவதியா வந்தாங்க.

இதைப் பார்க்க எல்லாரும் வந்திருந்தாங்க. ஆனா போதேந்திர சுவாமிகளோட தாயார் மட்டும் வரலை.

'ஏன்?'ன்னு கேட்டதுக்கு அந்தம்மா, "என் மகன் சொன்ன பரிகாரத்துல எனக்கு ஒப்புதல் இல்லை. தான் செய்யாத இந்த சின்ன விஷயத்துக்கு அவ ஏன் மூணு முறை ராம நாமத்தை சொல்லணும்? ஒரே ஒரு முறை சொன்னா போதாதோ?"ன்னாங்க.

அதனால இந்த விஷயத்துல சாமியும் மன்னிக்கும்... தாய்க்குலமும் அதைவிட தீவிரமா மன்னிக்கணும்!

ஜி. செல்வராஜ், வெப்படை. டிசம்பர் 13 – 19; 1991.

**சம்பாதிப்பது ஆண்கள் இனம். அதை ஏன் பெண் இனத்தின் கரங்களில்**

ஒப்படைக்க வேண்டும்?

தண்ணியில இருந்துதாங்க கரண்ட் தயாராகுது. எங்கே... ஒரு 'ஜீரோ வாட்' பல்பை எடுத்துட்டுப் போய் நயாகரா நீர் வீழ்ச்சியில நீட்டுங்க. எரியுதா பார்ப்போமே! அதே நீர்வீழ்ச்சியோட சக்தியை சக்கரம் மூலமா செலுத்தி ஒரே ஒரு ஜெனரேட்டரை ஸ்டார்ட் பண்ணுங்க... ஊருக்கே லைட் எரியும்! அதனால சில விஷயங்கள், சில ரூட்ல போய் வந்தாத்தாங்க கரெக்டா ஓர்க் அவுட் ஆகும்.

(அப்பாடா! போன கேள்விக்கு சொன்ன பதிலுக்கு பிராயசித்தம் தேடியாச்சு!)



சி.என். ராமகிருஷ்ணன், பொள்ளாச்சி. டிசம்பர் 13 – 19; 1991.

**புதிதாக தொழில் தொடங்க நினைக்கிறேன். எது கௌரவமான தொழில்?**

"நான் மூட்டை தூக்கி பிழைக்க வேண்டி வந்தா, மூட்டை தூக்க முடியலைன்னு அழுவேனே தவிர, மூட்டை தூக்கறேனேன்னு அந்த தொழிலை கௌரவக் குறைச்சலா நினைச்சு அழ மாட்டேன்"னு தந்தை பெரியார் சொல்லியிருக்காரு.

அதனால எந்த தொழிலும் கௌரவமான தொழிலே!

ஜெயந்தி, பாவாடைக்காலனி, கும்பகோணம். டிசம்பர் 13 – 19; 1991.

**அண்ணா! எங்கள் தெருவில் 'சைட்' அடிக்கும் மைனர்கள் தொல்லை அதிகம். அவர்களுக்கு சுருக்கென்று ஏதாவது சொல்லுங்களேன்?**

அன்புத் தங்கச்சியே!

மலர்களை வண்டு வட்டமிட்றதை தவிர்க்க முடியாது. இயற்கை. இயற்கைக்கு எதிரா நான் ஏதாவது சொன்னா அது தெய்வக் குத்தமாயிடும். மன்னிச்சுக்கோ!

ஜார்ஜ் ஜோசப், சிவகாசி. டிசம்பர் 13 – 19; 1991.

**சின்ன சந்தேகம். குழந்தைகள் மட்டும்தான் பால் குடிக்கணுமா? (புரிஞ்சு சொல்லுங்க)**

கிழவன் கூட குடிக்கலாம். தப்பே இல்லைங்க. ஆனா ஒண்ணு.



பசும்பாலை காய்ச்சி சூடாக்கிக் குடிக்கணும். ஏன்னா அதுல சில விஷக் கிருமிகள் இருக்கும். ஆனா ஆட்டுப்பாலை பச்சையாவே குடிக்கலாம். அதுல கிருமி இருக்காது. எந்தத் தப்பும் வராது. அதனாலதான் காந்திஜியே ஆட்டுப் பால்ல பூந்தாரு! நீங்களும் சிக்கனமா அதுல பூந்துருங்களேன்!

ஏ. எஸ். குமரேசன், சீர்காழி. டிசம்பர் 13 — 19; 1991.

**பிரச்சினைகளை சந்திக்கும் போது சஞ்சலப்படாமல் இருக்க என்ன செய்வது?**

எப்பேர்ப்பட்ட கடலையும் கடக்க தோணி இருந்தா போதும். எவ்வளவு இருளா இருந்தாலும் அதை விரட்ட ஒரு விளக்கு இருந்தா போதும்.

அதனால, எந்த ஒரு பிரச்சினைக்கும் ஏதாவது ஒரு வழிமுறையில தீர்வு இருக்கும்னு நினைச்சு யோசிங்க. சஞ்சலம் வராது.

எஸ்.லலிதா சர்மா, கோவை—17. டிசம்பர் 13 — 19; 1991.

**மனிதனின் மறுபக்கம் என்பது நிஜமா?**



மகாபாரதத்துல துரியோதனனை எவ்வளவு கொடுமைக்காரனா சித்தரிச்சிருக்காங்க! கர்ணனை மத்தவங்கள்லாம் "உன் ஜாதி என்ன? நீ வந்து ராஜகுமாரர்களோட வில் சண்டை போடக்கூடாது"ன்னு தடுத்தப்போ, துரியோதனன் எழுந்து,

"கற்றவர்களுக்கும் கன்னியருக்கும் மன்னர்களுக்கும் ஞானிகளுக்கும் ஒழுக்கமானவர்களுக்கும் ஜாதி கிடையாது. அவர்கள் விஷயத்தில் ஏற்றத்தாழ்வு பார்க்கக் கூடாது"ன்னு நல்ல தத்துவத்தை சொல்றான்.

இது துரியோதனனோட மறு பக்கம்தானே!

கார்த்திகேயன், திருத்தணி. டிசம்பர் 13 – 19; 1991.

**ஒருவன் வெற்றியின் போது எப்படி இருக்க வேண்டும்?**

எத்தனை நதிகள் வந்து சேர்ந்தாலும் கடல் நிரம்பி வழியறதில்லை. அமைதியா இருக்கு. அந்த மாதிரி நாமும் இருக்கணும்ன்னு நினைக்கணும்.

பி.எச். பாஸ்கரன், திருத்துறைப்பூண்டி. டிசம்பர் 13 – 19; 1991.

**நாம ஏன் இன்னும் விஞ்ஞானத்தில் முன்னேறவில்லை?**

சூரிய குடும்பத்துல உள்ள சந்திரன், செவ்வாய், புதன், குரு, சனி இவர்கள் எல்லாமே தேவர்கள். ஆனா சுக்கிரன் மட்டும் அசுரர்களின் குரு — இப்படி நம்ம புராணத்துல சொல்றாங்க.

விஞ்ஞானப்படி 'சூரியனை சார்ந்திருக்கிற எல்லா கிரகங்களுமே மேற்கிலிருந்து கிழக்காக சுற்றுகின்றன. ஆனால் சுக்கிரன் மட்டும் கிழக்கிலிருந்து மேற்காக சுற்றுகிறது"ன்னு சொல்றாங்க.

ஆக, நாம முன்னேறியிருக்கோம். ஆனா அதுல ஏதோ ஒரு திரை விழுந்திருக்கு. அது என்னன்னுதான் புரியலை.

கே. ரவி, சைதை. டிசம்பர் 13 – 19; 1991.

**ஒரு மனைவியிடம் உள்ள சக்தி வாய்ந்த ஆயுதம் எது?**

ஏதென்ஸ் நாகரத்தை (கிரேக்க நாடு) ஒரு மூர்க்கனான அரசன் ஆண்டு வந்தான். அவன் ஒரு போர் வெறியன்.

ஆண்டுக்கணக்கா பக்கத்துல நாடுகளோட போர் நடத்தினதுல ஏதென்ஸ் நகர ஆண்களின் எண்ணிக்கை வெகுவா குறைஞ்சு வந்தது.

பெற்ற மகன்களையும் கட்டிய கணவன்மார்களையும் சண்டையில பலி கொடுத்த பெண்கள், ஆறாத் துயருக்குள்ளாகி அழுது புலம்பினாங்க. அரசனும் அரசனைப் பின்பற்றிய ஆண்குலமும் போர் வெறியிலிருந்து பின்வாங்கறதா இல்லை.



கடைசியில ஆண்களை பணிய வைக்கவும், தங்கள் பிள்ளைகளைக் காப்பாற்றவும், ராணி உட்பட எல்லாப் பெண்களும் ஒரு முடிவுக்கு வந்தாங்க.

"போரை நிறுத்தாவிட்டால் கணவனுடன் உடலுறவுக்கு இசைய மாட்டோம்!"

சில நாட்கள்லேயே போர் நின்னு போச்சாம்.

மனைவிமார்கள் கோபிக்க வேண்டாம். இது கிரேக்க நாட்டுல நிஜமாவே நடந்த கதைதான்!

எஸ். ராகவானந்தம், நாகர்கோவில். டிசம்பர் 20 – 26; 1991.

**உங்களுடைய கெட்டிக்காரத்தனமாய் எதை நினைக்கிறீர்கள்?**

மரத்தை விட கல் ஸ்ட்ராங். ஆனா கல்லைக் கட்டி கடலைக் கடக்க முடியாது. மரம்தான் தேவைப்படும். அதேசமயம் கல் இல்லாம மரத்தை வெச்சு வீடு கட்டினா வீடு நிக்காது.

ஆக, யாருடைய கெட்டிக்காரத்தனமும் எல்லா விஷயங்களுக்கும் கை கொடுக்காது. அதனால, என் கெட்டிக்காரத்தனமா நான் எதையும் நினைச்சு சந்தோஷப்பட்றதில்லை.

ஜி. மணிகண்டன், தேனி. டிசம்பர் 20 – 26; 1991.

**அயோக்கியர்களை திருத்த முடியுமா?**



சமீபத்துல ஒரு துணுக்கு படிச்சேன்.

"பன்றி அசிங்கத்தைத்தான் சாப்பிடும்னு இல்லை. காரட்டையும் அது சாப்பிடும். ஆனால் மனிதர்கள் நாமதான் அதுக்கு காரட் போடத் தயாரா இல்லை"ன்னு. மிருகமே அப்படிங்கும் போது எப்படிப்பட்ட தப்பு பண்ற மனிதர்கிட்டேயும் ஏதாவது ஒரு நல்ல தன்மை இருக்கும். அதை புரிஞ்சு பழகினா, அவங்க சுபாவத்தை நிச்சயமா மாத்த முடியும்.

ஜெயராமன், கோவத்தக்குடி. டிசம்பர் 20 – 26; 1991.

**மனைவியை சமாளிக்கத் தெரிந்தவர்கள் யாராவது உண்டா?**

ஏன் இல்லை? பிரம்மச்சாரிகள் உண்டே!

பூ. ரவிசாரதி, சென்னை—34. டிசம்பர் 20 – 26; 1991.

**பெங்களூரில் உள்ள தமிழர்களை நினைத்தால்?**

புத்தரின் சீடர் ஒருத்தர், "நான் வெளியூர் போயிட்டு வர அனுமதி தாருங்கள்"ன்னு புத்தர்கிட்டே கேட்டாரு.

அதுக்கு புத்தர், "உலகில் நல்லவர்கள், கெட்டவர்கள் கலந்து இருப்பார்களே... அவர்களை எப்படி சமாளிப்பாய்?"ன்னு கேட்டாரு.

சீடர்: எல்லோரையும் நல்லவர்களாகவே நினைப்பேன்.

புத்தர்: அவர்கள் உன்னை உதைத்தால்?

சீடர்: அப்போதும் நல்லவர்கள் என்றே நினைப்பேன். அவர்கள் என்னை கம்பால் அடிக்கவில்லையே!



புத்தர்: கம்பால் அடித்தால்?

சீடர்: அப்போதும் அவர்கள் நல்லவர்களே! என்னை கத்தியால் குத்தவில்லையே?

புத்தர்: கத்தியால் குத்தினால்?

சீடர்: அப்போதும் அவர்கள் நல்லவர்களே! துன்பமயமான உலகிலிருந்து என் உடலுக்கு விடுதலை தருகிறார்களே!

உடனே புத்தர், "நீ போயிட்டு வா"ன்னாரு.

நாம தமிழ்நாட்டுலேர்ந்து கர்நாடகத்துக்கு போறதுக்கு முன்னால நம்ம தமிழர்களும் தங்களோட தாய், தந்தையர்கிட்டே இப்படித்தான் சொல்லிட்டு போயிருப்பாங்களா?

அப்துல்காதர், மசூலிப்பட்டணம். டிசம்பர் 20 – 26; 1991.

**உங்கள் வெற்றிக்கு அடிப்படை ரகசியமாக எதை நினைக்கிறீர்கள்?**

என் வீக் பாயிண்டுகளை நான் முதல்ல புரிஞ்சுகிட்டதை!

கே. ராஜாமணி, விழுப்புரம். டிசம்பர் 20 – 26; 1991.

**ஒரு மனிதனுக்கு மனப்பக்குவம் எப்போது வரும்?**

பரீட்சையிலதான் படைப்பாளியோட புத்திசாலித்தனம் தெரியும்.

கடல் கொந்தளிக்கும் போதுதான் மாலுமியோட திறமை தெரியும்.

துன்பத்துலதான் விசுவாசிகள் யார் யாருன்னு தெரியும்.

பிரச்னைகளை சந்திக்க சந்திக்கத்தான் நாம எந்த அளவுக்கு பக்குவப்பட்டிருக்கோம். இன்னும் எவ்வளவு பக்குவப்படணும்ன்னு புரியும்.

எல். விஜயா, திருநெல்வேலி. டிசம்பர் 20 — 26; 1991.

**துயரப்படாமல் வாழ ஏதாவது வழி இருக்கிறதா?**

ராமர் பரதனுக்குச் சொன்ன ஒரு சுலபமான வழி இருக்கு. நீங்கவேண்ணா அதை முயற்சி பண்ணிப் பாருங்க.

"நதி கடலில் கலக்கும் அழகைப் பார்த்து ரசிக்கும் பொழுதே, கடலில் கலந்த நதி திரும்பி வராது என்ற உண்மையையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

கோடைக் காலத்தில் குளம், குட்டையில் உள்ள நீரை சூரியன் உறிஞ்சும் போது மழைக்காலத்தில் அந்த நீர் மழை மேகமாகி, நமக்கே திரும்பி வரும் என்ற அமைதி வேண்டும்.



சூரியன் உதிக்கும் அழகைக் கண்டு மகிழும் போது அன்று ஒரு நாள் ஆயுளில் தீர்ந்து விட்டது என்று பக்குவம் வர வேண்டும்.

இவை புரிந்தால் அனாவசிய மகிழ்ச்சியும் வராது. அனாவசிய துயரமும் வராது!"

எஸ். பார்த்திபன், புதுக்கோட்டை. டிசம்பர் 20 — 26; 1991.

**சீக்கிரமாக சினிமாவில் வளர என்ன வழி?**

'ரோமாபுரியின் வளர்ச்சியும், வீழ்ச்சியும்'ங்கற நூலை எழுத 'கிப்பன்' 20 வருஷங்கள் உழைச்சாராம். 'ஹார்வி' எட்டு வருஷம் ஆராய்ச்சி பண்ணித்தான் ரத்த ஓட்டத்தைப் பத்தி எழுதினாராம். அதனால, எந்த வெற்றியும் ஒரு நாள், ரெண்டு நாள்ல முடிவாகறதில்லை.

எ. பவுன்ராஜ், சிவகாசி. டிசம்பர் 27 1991 — ஜனவரி 2 1992.

**'ஞானம்' என்றால் என்ன? எல்லோரும் ஞானி ஆக முடியுமா?**

"அற்புத சக்தி எதையும் பெற்றிருக்கா விட்டாலும், எவன் ஒருவனுடைய உள்ளமானது இன்பம் வந்தபோது துள்ளிக் குதிக்காமலும், துன்பம் வந்தபோது சோர்ந்து துவளாமலும், ஆத்திரம் வந்த போது பொங்கி எழாமலும், அலுப்பு வந்த போது விழுந்து படுக்காமலும் எப்போதும் நிதானமாக, அமைதியாக உற்சாகமாக இருக்கிறதோ, அவன் ஒரு வேடனாக இருந்தாலும் சரி... வியாபாரியாக இருந்தாலும் சரி.. அவனே ஞானிகளுக்கெல்லாம் ஞானி! யோகிகளுக்கெல்லாம் யோகி!"

இப்ப உங்களுக்கே 'நம்மளும் ஞானியாக முடியும்'ன்னு நம்பிக்கை

வந்திருக்குமே?

ஆர். ஞானசேகரன், பாளையங்கோட்டை. டிசம்பர் 27 1991 – ஜனவரி 2 1992.

**அடுத்தவர்கள் சாதனையைப் பார்க்கும் போதெல்லாம் ஒரே மலைப்பாகவும், பயமாகவும் உள்ளது. நான் முன்னேற முடியுமா?**

சீனாவை ஆண்ட ஒரு மன்னனுக்கு 170 அரண்மனைகள் இருந்தது. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு அரண்மனையில எதிரி நாட்டு மன்னர்களுக்கு பயந்து தூங்குவாரு. இப்படி பயந்து தூங்கிட்டிருந்தவரு ஒருநாள் ஒரு முடிவுக்கு வந்து, எந்த எதிரிகளும் நுழையாதபடி சீனாவைச் சுத்திவர ஒரு பெரிய சுவர் எழுப்பினார். அதுதான் இப்ப உலகப் புகழ் பெற்ற 'சீனப் பெருஞ்சுவர்'



இவ்வளவு எதுக்கு? என்னை எடுத்துக்கங்க. முதல் படத்துல இருந்த பயம், இன்னைக்கு வரைக்கும் 'திக்' 'திக்'குன்னு இருந்துட்டே இருக்கு!

அதனால, பயம் காரணமாக்வே உலகத்துல எத்தனையோ சாதனைகள் நடந்திருக்கு. நீங்களும் நிச்சயமா ஏதாவது சாதிப்பீங்க. நம்பிக்கையோட இருங்க.

ஜெனிபர், ஃப்ரகாஷா, சென்னை–17. டிசம்பர் 27 1991 – ஜனவரி 2 1992.

**பாட்டி வைத்தியத்துக்கு பவர் உண்டா?**

அம்மை நோய்க்கு மேல்நாட்டுல கூட வைத்தியம் கண்டுபிடிக்க முடியாமல் இருந்த சமயம்.

அப்போ டாக்டர் கென்னர்ங்கறவர் வீட்டுக்கு ஒரு அம்மா பால் ஊத்த வந்தாங்க. கென்னர் அவர்கிட்டே, "பால்காரம்மா... ஊர்ல அம்மை நோய் பரவியிருக்கு. நீ எச்சரிக்கையா இருக்கணும். இல்லாட்டி உன்னையும் அம்மை நோய் தொற்றி, உன் பால் வியாபாரமும் பாதிக்கும். பால் மாதிரி இருக்கற உன் முகமும் பாழாயிடும்'டனாரு.

"கவலைப்படாதீங்க டாக்டர்.. எனக்கு அம்மை நோய் வராது!"ன்னாங்க அவங்க.

"எப்படி சொல்றீங்க?"

"மாட்டுக்கு வர்ற அம்மை நோய் எனக்கும் ஒரு தடவை வந்து குணமாயிடுச்சு. அதனால இனி மனிதர்களுக்கு வர்ற அம்மை நோய் எனக்கு வரவே வராது!"



"அதெப்படிம்மா அவ்வளவு உறுதியாக சொல்றீங்க?"

"எங்க பாட்டி சொன்னாங்க. அவங்க அனுபவத்துல அப்படித்தான் நடந்துச்சாம்"

இப்படி சொன்னது ஜென்னருக்கு ஆச்சரியமா இருந்தது. அந்த பால்காரம்மா சொன்னதை வெச்சு ஆராய்ச்சி செஞ்சு, பசுவின் அம்மை நோய்க் கிருமிகள் மூலம் மனிதர்களுக்கு வரும் அம்மை நோயைத் தடுக்கும் மருந்தைக் கண்டுபிடிச்சு உலகப் புகழ்பெற்றாரு ஜென்னர்!

அதனால பாட்டி வைத்தியமும் பவர்ஃபுல்லானதுதான்!

எம். ராமச்சந்திரன், ராம்நாட். டிசம்பர் 27 1991 — ஜனவரி 2 1992.

**பகலில் சண்டை போட்டுக் கொள்கிற புருஷனும், பெண்சாதியும் இரவில் அமைதியாக விடுவது ஏன் வாத்தியாரே?**

பூ மேலே உட்கார்ற வரைக்கும்தான் வண்டு ரீங்காரம் செய்யும். தேனைக் குடிக்க ஆரம்பிச்சதும் ரீங்காரம் நின்னுரும். இது இயற்கைதானே!

எஸ். பாலாஜி, சென்னை—1. டிசம்பர் 27 1991 — ஜனவரி 2 1992.

**உங்க லட்சியம் என்ன சார்?**

உங்க மனசுல பிடிச்ச இடத்தை கடைசி வரை காப்பாத்தறது.

பி. வேலுமணி, மேட்டுப்பூர். டிசம்பர் 27 1991 — ஜனவரி 2 1992.

**சார்.. இது 'வெள்ளி விழா' கொண்டாடும் அஞ்சல் அட்டை. இருபத்தைந்தாவது கேள்வியைத் தாங்கி வரும் ஓலை. யுவர் கமெண்ட் ப்ளீஸ்?**

கேள்வியை கேக்காம லெட்டர் போட்டிருக்கீங்க. பரவாயில்லை. உங்களுக்கு நான் ரசிச்ச அயல்நாட்டு ஜோக் ஒண்ணு சொல்றேன்.

ஒருத்தர் ஒரு பாருக்கு (பிராந்திக் கடை) போய் உட்கார்ந்தாரு. சாப்பிட ஆரம்பிச்சதும் பக்கத்துல யாரோ ரெண்டு **X, Y** சுவாரஸ்யமா அவங்களுக்குள்ளே பேச ஆரம்பிச்சாங்க.

**X:** உங்களை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கு. நீங்க எங்கே இருக்கீங்க?



**Y:** நுங்கம்பாக்கத்துல.

**X:** நுங்கம்பாக்கமா? அங்கேதான் நானும் இருக்கேன். நுங்கம்பாக்கத்துல எங்கே?

**Y:** லேக் ஏரியா?

**X:** என்னங்க இது? நானும் லேக் ஏரியாதான். லேக் ஏரியாவுல எங்கே?

**Y:** அஞ்சாவது குறுக்குத் தெரு.

**X:** என்னங்க அநியாயமா இருக்கு? நானும் அஞ்சாவது குறுக்குத் தெருவுலேயே இருக்கேன்... எப்படி உங்களைத் தெரியாமப் போச்சு! அஞ்சாவது தெருவுல வீட்டு நம்பர் என்ன?

**Y:** நம்பர் 8.

**X:** என்னங்க அதிசயமா இருக்கு! என் வீட்டு நம்பரும் எட்டுதானே! எப்படி இது வரைக்கும் நம்மளுக்குள்ளே பரிச்சயம் இல்லாமப் போச்சு?

இப்படி இவங்க பேசப் பேச, பக்கத்துல இருந்தவரு ஒரே குழப்பமாகி, பார்ல வேலை செய்யறவரைக் கூப்பிட்டு, 'இவங்க என்ன பேசறாங்கன்னு புரியலையே?'ன்னு கேட்க, சர்வர் எதார்த்தமா, "இவங்க ரெண்டு பேரும் அப்பா புள்ளைங்க. 'சாப்பிட்டதுக்கு' அப்புறம் இப்படி பேசிக்கறாங்க"ன்னு சொல்ல, கேட்டவர் மண்டையைப் பிச்சிக்கிட்டாரு.

ஆர். கிருஷ்ணமூர்த்தி, பனப்பாக்கம். ஜனவரி 3 – 9; 1992.

**காலையில் எழுந்தவுடன் சோம்பலாக உள்ளது. சுறுசுறுப்புக்கு என்ன செய்யலாம்?**

இரவு படுக்கும்போது சுறுசுறுப்பாக இருக்க வேண்டும். அதில்தான் சூட்சுமமே இருக்கிறது!

எஸ். அந்தோணிராஜ், திருச்சி–2. ஜனவரி 3 – 9; 1992.

**உண்மையான நட்பு எது?**

சிக்கி முக்கிக் கல் எத்தனை காலம் தண்ணியில இருந்தாலும், அதோட நெருப்பு சக்தி மாறாது. அதை தண்ணியிலேர்ந்து எடுத்து சுத்தியலால் தட்டிப் பார்த்தா, நெருப்பு பொறி பறக்கும். அது மாதிரி எவ்வளவு காலம் பிரிந்திருந்தாலும், 'தோழமை உணர்வு' குறையாம இருக்கறதுதான் நட்பு!

எஸ். பாலகிருஷ்ணன், ஈரோடு–4. ஜனவரி 3 – 9; 1992.

**சொர்க்கம், நரகம் இருக்கிறதாக நீங்கள் நம்புகிறீர்களா?**

ஒரு வயசான பாதிரியார் ஒரு சேரியில நோயாளிகளுக்கு பணிவிடை செய்துட்டு இருந்தாரு.

தேவதூதன் வந்து, "ஐயா... நீங்க பரலோகத்துக்கு செல்ல வேண்டிய வேளை வந்து விட்டது. அழைத்துப் போக வந்தேன்"னான்.

உடனே பாதிரியார், "இந்த சேரியில் உள்ள நோயாளிகளை கவனித்து விட்டுவரும் வரை பொறுத்திருப்பீரா?"ன்னாரு.



தேவதூதன் புன்னகையோட மறைஞ்சுட்டான்.

கொஞ்ச நாள் கழிச்சு பாதிரியார் ஏழைகளுக்காக அன்னதானம் செய்துட்டு இருந்தப்ப மறுபடியும் தேவதூதன் வந்தான்.

"இந்த ஏழைகளுக்கு அன்னதானம் செய்து முடியும் வரை காத்திருக்க முடியுமா?"ன்னு பாதிரியார் கேட்க, தேவதூதன் மறுபடியும் மறைஞ்சுட்டான்.

வெள்ளத்தால் குடிசைகளை பறிகொடுத்தவர்களுக்கு பாதிரியார் குடிசை கட்டிக் கொடுத்துட்டு இருந்தப்ப மறுபடியும் தேவதூதன் வந்தான்.

"இந்த குடிசைகள் கட்டி முடிந்த பின் பரலோகம் வருகிறேனே!"ன்னாரு.

போயிட்டான்.

கொஞ்ச நாள் கழிச்சு பாதிரியார் தன் வேலைகளை முடிச்சுட்டு படுக்கையில சாயறப்போ அவருக்கே அசதியாக இருந்தது.

"அந்த தேவதூதன் இப்போ வந்தா தேவலையே"ன்னு நினைக்க, தேவதூதன் அவர் முன் தோன்றினான்.

"ஐயா... என்னை இப்போது பரலோகத்துக்கு அழைத்துச் செல்லுங்கள்!"ன்னு பாதிரியார் கேட்க,

"நீங்கள் இப்போது வேறு எங்கு இருக்கிறீர்கள்? பரலோகத்தில்தான்!"னு சொல்லி மறைஞ்சான் தேவதூதன். பிறருக்கு உதவறதுதான் மோட்சம்ன்னு விளக்கற கதை இது.

பிறருக்கு உதவிய கர்ணனை கடவுளான கண்ணனாலே கூட ஜெயிக்க முடியலை. வெற்றியை பிச்சையாத்தான் கேட்டாரு! அதனால, நரகம் வேணா ஒருவேளை மேல இருக்கலாம். சொர்க்கம் இங்கேயேதான் இருக்கு.

சிந்தாமணி பாலசுப்ரமணியம், திருநெல்வேலி—2. ஜனவரி 3 – 9, 1992.



**புரட்சித் தலைவரின் நினைவு நாளில் நீங்கள் செய்த நல்ல காரியம்?**

தலைவர் பேரால என்னால முடிஞ்ச உதவிகளை செய்தேன். அதை வெளியில சொல்ல விரும்பலை.

எஸ். முத்து சுப்பிரமணியம், திருச்செங்கோடு.
ஜனவரி 3 — 9, 1992.

**எனக்கு உடலில் ஊனம் ஏற்பட்டிருக்கிறது. என் முன்னேற்றம் தடைபடுமா?**

எடிசன் சிறுவனா இருந்தப்பவே ஆராய்ச்சிகள்ல ஈடுபாட்டோட இருந்தாரு. ஒருநாள் ரயில்ல பிரயாணம் செய்தப்போ, ஏதோ ஆராய்ச்சி செய்யப் போய், உள்ளே தீ பிடிச்சிருச்சு. ரயில்வே அதிகாரி ஆத்திரத்தோட கன்னத்தில் அறைய, எடிசனுக்கு காது செவிடாயிருச்சு. அதுவே பின்னால அவருக்கு வசதியாப் போச்சாம்! சுற்றுப்புற சூழ்நிலையில என்ன சத்தம் வந்தாலும் அதனால பாதிக்கப்படாம மனம் ஒன்றி விஞ்ஞான ஆராய்ச்சியில ஈடுபட்டு மின்சாரத்தை கண்டுபிடிச்சாராம்.

அதேமாதிரி, சின்ன வயசுல விளையாடறப்போ கால் ஒடிந்து வீட்டோட முடங்கிக் கிடந்தார் ஒருத்தர். அதனாலேயே புத்தகங்களை வாசிக்கவும் எழுதவும் ஆரம்பிச்சாரு. அவர்தான் பின்னால இலக்கிய உலகுல புகழ்பெற்ற எழுத்தாளரான ஹெச்.ஜி. வெல்ஸ். அதனால சாதனைக்கு என்னைக்குமே ஊனம் தடையா இருந்ததில்லை.

உங்க குறையே வேற ஏதாவது துறைக்கு ப்ளஸ் பாயிண்டா அமையும். தைரியமா முயற்சி பண்ணி முன்னேறுங்க.



